ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

அரியக்குடி

# இராமாநுஜதாசர்

## சரிதை.

---

இஃது

அரியக்குடி ஸ்ரீமாந்

சா. கி.

அரங்கநாதச்செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று

ஷையார் குமாரர்

சா. கி. ரெ.

இலக்குமணச்செட்டியாரால்

மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையிற்

பதிப்பிடப்பெற்றது.



1910.

---

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை.

பாண்டிநாட்டிலே, நகரத்தார்களாகிய வணிகர் வசிக்கும் பிரபல நகரங்களிலொன்றாகிய காரைக்குடியை அடுத்துள்ளதும் அரியக்குடி என்று வழங்குவதுமாகிய திருவரியை என்ற க்ஷேத்திரமானது, ஸ்ரீய:பதியான திருவேங்கடமுடையான் செந்தமிழ்நாட்டார் உய்யும்படி திருவுளமுகந்து நித்யவாஸஞ் செய்தருளும் திவ்ய தேசமாய்ப் பிரஸித்தி பெற்றது. இத்தலத்திற் றிருக்கோயில்கொண்ட எம்பெருமான் இஹாபீஷ்ட வரதராய் எழுந்தருளியிருத்தலால் நகரத்தார்களால் மிகவும் ஆராதிக்கப் பெறுதலோடு, திருப்பணிகளும் உத்ஸவாதிகளும் சிறக்க நடத்தப்பட்டும் வருகின்றன. இவ்வூரில் வசிக்கும் வணிகருள்ளே, கல்வியுஞ் செல்வமும் நிரம்பித் திருமால்பத்தியிற் சிறந்து விளங்கும் செல்வர் பலரைக் காணலாம். இத்தகையோரில், யாவருங்கண்டு அதிசயிக்கத்தக்க குணஞ் செயல்களுடையராய், ஞானவைராக்கியங்கள் நிரம்பிய பக்தசிரோமணி ஒருவர் சமீபகாலத்தே விளங்கினர். அவரே, இந்நூலின் நாயகர்; இராமாநுஜதாஸர் என்று வழங்கிய இப்பெரியவர் பரமபதம்சென்றது சிலகாலத்திற்கு முன்னரேயாயினும், இவரது ஞானவைராக்கியாதி உத்தம குண விசேஷங்களை அப்பக்கத்தவர் இன்றும் மறந்தவரல்லர். தாஸரது அருமை பெருமைகளை அரியக்குடியில் நேரிற்கண்டு களித்தோரில் யானும் ஒருவனே. இப்பெரியவரது வாழ்க்கை வைபவங்களையெல்லாம் இந்நூல் நன்கெடுத்துக் கூறுகின்றது, இந்நூலியற்றியவர்:— அரியக்குடிக்கோர் சிரோபூஷணமாய் அதனை அலங்கரித்துவந்த கல்விச் செல்வரும் பிரபுவுமாகிய ஸ்ரீமாந். சா. கி. அரங்கநாதச் செட்டியாரவர்களே. அந்தோ! அருங்கலைவிநோதரும் பெருங்குணக்கடலுமாகிய செட்டியாரவர்களை நாம் இழக்க நேர்ந்து நெடுங்காலமாகவில்லை! செட்டியாரவர்களது அருமை பெருமைகளை நேரில் அறிந்த தமிழ்மக்களெல்லாம், அவர்களது பிரிவு நம் நாட்டிற்கு நேர்ந்த பெருத்த நஷ்டமாகவே கருதித் துக்கிக்கின்றனர். அவர்களால் இயற்றப்பெற்ற இந்நூல் சொற்செறிவும் பொருட் பொலிவும் வாய்ந்த சீரிய வாக்காய்த் திகழ்தலோடு, தாஸரது பெருமைகளைக் கூறுமுகத்தானே ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தின் தத்துவநுண்பொருள்கள் பலவற்றை

நன்கு விளக்குவதுமாய் உள்ளது. இந்நூலிற்கண்ட நாடு நகர வருணனைகளும் ஆழ்வார் வைபவச் சருக்கமுதலியனவும் மேற்கூறியவற்றுக்குத் தக்க சான்றாகும். சுருங்கவுரைக்குமிடத்து, செட்டியாரவர்களது தமிழாராய்ச்சித் திறனையும் சமயஞான வன்மையையும் இந்நூல் விளக்குதலேயன்றி, சீரியவொழுக்கநடையையும் உயர்ந்த செய்யுள் நடையையும் இது புலப்படுத்த வல்லது என்னலாம்.

செட்டியாரவர்களாற் பல்லாண்டுகட்கு முன்பே பாடப்பெற்ற இச்சரிதை இப்போது வெளியிடப்பட்டிருப்பது, நமக்கு மகிழ்ச்சி விளைப்பினும், அவர்கள் தம்நூல் அச்சிடப்பட்டிருப்பதைக் கண்டு களிக்காமற்சென்றது பெரிதும் விசனிக்கத்தக்கதாம். இவ்வாறே அரியக்குடி மும்மணிக்கோவை, இராமாயணசருக்கார்த்தசங்கிரகம் என்னும் வேறிரண்டு நூல்களும் அவர்களால் முன்னரே இயற்றப்பெற்றுள்ளன. ஆயினும், செட்டியாரவர்களுடைய அருமைப் புதல்வர் ஸ்ரீமாந் லக்ஷ்மணச் செட்டியாரவர்கள் அவற்றை இப்போது விரைந்தச்சிட்டுவருதல் மகிழ்ச்சிதருவதாம். இவர்கள் ஆண்டிளையராயினும், "மகனறிவுதந்தையறிவு" என்ற முன்னோர் மொழிப்படி, தம்மருப்பெற்ற றந்தையாரைப்போன்று குணவிசேடங்களும், தமிழ்க்கல்விச் சிறப்புமுடையராய் விளங்குதல் அரியக்குடிக்கே ஒரு பெருமையாகும். தேசத்தின் கைத்தொழிற் சிறுமையைநோக்கி, மலைநாட்டுப் புனலூரிலிருந்த காகிதத் தொழிற்சாலையைக் கிரயம்வாங்கி அதனை நம்மவர்பொருட்டு ஊக்கத்தோடும் நடத்திவந்த தம் தந்தையாரைப் பின்பற்றி, லக்ஷ்மணச் செட்டியாரவர்கள் அக்கம்பெனியை இப்போது நடத்திவருவதோடு, தம் தந்தையாரியற்றிய அரியக்குடி மும்மணிக்கோவையை அப்புனலூர் மில்லுக்காகிதத்தி லச்சிட்டு வெளிப்படுத்தியிருப்பதும் யாவரும் புகழத்தக்கது. இவ்வாறு, தேசாபிமானமும் பாஷாபிமானமுங்கொண் டுழைத்துவரும் ஸ்ரீமாந் லக்ஷ்மணச்செட்டியாரவர்கட்கு நீடிய ஆயுளையும் அறிவாற்றல்களையும் கொடுத்தருளுமாறு திருவரியையிற் கோயில்கொண்டருளும் ஸ்ரீநிவாஸப்பெருமான் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

இங்ஙனம்

1—11—10.
மதுரைத் தமிழ்ச்சங்கம். }

மு. இராகவய்யங்கார்.
"செந்தமிழ்" பத்திராசிரியர்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியரின் ஆசிரியரான அரியக்குடி

ஸ்ரீமத்: சூ. கிருஷ்ணமாசாரியாரவர்களியற்றியவை.

உலகிய லொருவிப் பரஞ்சுடர் வடிவா மொருதிரு மாலியல் புணருந்
தலைமரு குணரா மாநுஜ தாசர் சரித்திர வமுதைநற் றமிழாற்
புலவர்கண் டுருகிப் புகழநன் களித்தான் பொருவிலாக் கிருட்டிண வணிக
னலமுற வுதவு மறிஞரு மரங்க நாதப்பேர்ப் புலவர்கோ மானே. ()

வேறு.

மருவாரு மினியமது வுடனுன் பாலும்
வாரியமு துங்கரும்பு மருவிக் கூடி
யொருவாது தினந்தினமு மகிழ வுண்ட
ரொருங்குபடர் செயலதனை யுளத்தி னோர்ந்து
தருபேரங் கதையொழியத் தரணி மீது
தாசசரித் திரமெனப்பேர் தந்து தந்தான்
றிருவாழு மரியைநக ரினிது வாழ்வோன்
சீரரங்க நாதனெனச் சிறந்து ளானே. (உ)

---

சென்னை கிறிஸ்தியன் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமத்: கா. ஸ்ரீ. கோபாலாசாரியாரவர்களியற்றியவை.

தென்றிசைவேங் கடமென்னு மரியைநக ரத்தார்தந் தெய்வ மென்ன, நின்றிசைகொ டாசரெனும் பெரியவர்மெய்ச் சரிதையை யிந் நிலத்தோர் தேர்வான், றுன்றிசையோ டியன்மருவு தாசர்புரா ணம்மெனுமோர் தூய்நா றன்னு, ணன்றிசைய மறைப்பொருளி னுட்பமெலாஞ் செந்தமிழி னவின்றிட் டானால். (க)

இன்னநல புலமைநிரம் புபகாரி தனையொர்பரி சியம்பக் கேண் மின், மன்னிபவான் மீகசருக் கார்த்தசங்கி ரகமெனுநூல் வண்ட மிழ்க்கட், சொன்னவன்சீ ரரியைநகர்ச் செல்வனென்போல் வார்க் கெளியன் றாய்மை நாளு, மன்னியமெய்ச் சேரரங்க நாதனிந்நப் புவி மிசையே வாழ்க நன்றே. (உ)

---

சேங்நெற்குடி

## ஸ்ரீமத்: சுப்பராய ஐயரவர்களியற்றியது.

மாசறவிப் பூவில்வந்து மர்தவன்றூண் மன்னுமரி
தாசர்சரி தந்தமிழிற் றந்தனனு—னேசமிலாக்
கூரரங்கஞ் செற்றதிருக் கோபாலன் பத்திநிறை
சீரரங்க நாதனெனுஞ் சேய். (க)

---

வலயமாநகரம் விநாயக வித்தியாசாலைத் தமிழ்ப்
போதகாசிரியராகிய

## நெடுவை திரு. இராமஸாமி ஐயங்காரவர்களா லியற்றப்பெற்றன.

மணிநிலாந் தரங்கப் பெருங்கடல் குடித்து மாண்பமை தவக் கடலனைய, பணிநிலாம் புலவா தொகுமவைக் களத்துப் பரன்றிரு மாலெனல் விளக்கிப், பிணிநிலாஞ் சனனத் தொடக்கொடு சூளாப் பெய்தபொற் கிழியறுத் திட்ட, திணிநிலா மனத்துப் பெரியரைப் பேணுந் தென்னவ னன்னர்கொ ணாட்டில். (க)

ஓங்கிய விழுச்சீர் வடமொழி தமிழென் றுயரிரு மொழிக்கொரு வரம்பாய்த், தீங்கற வெவர்க்குந் திருவரு ணீர்த்தாய்ச் செங்கண்மா லுறைந்தருள் சீர்த்தாய்ப், பாங்குற வொளிரும் வேங்கடமெனச்சொல் பதிநின்று கதியுயிர்க் களிப்பான், றுங்கிய திகிரி வளைக்கையெம் பெருமான் றங்கருள் பொங்குவ தோரூர். (உ)

அன்னநற் பதிப்பே ரரியையென் பதுவா மாவயிற் புகார்நகர் தணந்து, மன்னிய வணிகர் மரபின னவர்க்காம் வளத்தளி யொன் பதின் வடுகன், றன்னுடைக் கோயிற் றெய்யினுர் வகுப்பைச் சார்ந்தவ னார்ந்தநற் குணத்தா, லென்னரும் புகழ விளங்குகிரிட் டிணன்க விப்பரே றெப்பருந் தவத்தால். (ங)

தோன்றின னொருசே யென்பமற் றவன்சீர் சொற்றிடன் மற்றரி தரிதாற், றேன்றிக ழலங்கற் றுழாய்முடிப் பரமன் சேவடிக் கடியவர்க் கடிமை, சான்றவ னிந்தத் தரணியோ ரெவர்க்குந் தாயினு மினியதண் ணளியோன், ஆன்றசீர் விசிட்டாத் துவ்வதசித் தாந்த மறிந்ததிற் செறிந்தசெம் மனத்தான். (ச)

தாறுகொள் கவுட்டா மொருகரி கரியாத் தன்னிலே யிந்நில மளந்து, தேறிய வுணர்த்துந் திருவளர் மார்பன் றிருமண்முற் காப்பினிதணிந்து, வீறுறத் தனோரா மாநுச தாச னெனப்பலர் விளம்பிடமேலாம், பேறுகொள் பரம வைணவ னாகிப் பெரியவீ டடைந்தனன் மன்னோ. (ரு)

ஆங்கவன் பெருமைச் சரிதையைத் தமிழா லறைகென யாவரும் வேண்ட, வூக்கிதன் மேலோர் பெறும்பய னின்றெ னறுன்னுபு மன்னயாத் தளித்தான், ருங்குசீ ரிராமா யணசருக் கார்த்த சங்க்ரகந் தமிழ்க்கினி துதவி, நீங்கலில் திருவொ டரியைவா ழரங்க நாதனு நிறைகுணத் தவனே. (சு)

---

உ

## மதுரை வித்தியாபாநுப் பத்திராதிபர்
## மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்களியற்றியவை.

நன்னரரி யைப்பதியா நாட்டமுறும் புலவர்பலர் நாளும் வாழும், பொன்னகர மெனுமரியைச் செழும்பதியில் வணிகர்குலம் பூத்துப் பொற்ப, மன்னுகிருட் டிணநாமக் கற்பகத்தின் றவப்பலனு வந்த தோன்றல், தென்னரங்கன் கழன்மறவா மன்னரங்க நாதனெனுஞ் செல்வச் சீமான், (க)

இருநிதியு மகத்தெய்திப் பூதலகு பேரனென விருப்போ னேற்றூர்க், கொருநிதியை யளித்துமனங் களித்துறல்போன் மாணவகருவந்து கல்விப், பெருநிதியி லிலக்கியமு மிலக்கணமுஞ் சாத்திரமும் பெறப்போ திக்குங்,குருநிதி கலாநிதிநேர் குளிர்சுமுக சமுகநய குணப்பொற் குன்றம். (உ)

திருக்கருணை வான்மீகி மொழிந்தவிரா மாயணத்திற் றிகழு
மொவ்வோர், சருக்கமுறுங் கதைமுழுதுந் திரட்டிவடித் தோரொரு
செந் தமிழ்வி ருத்த, வருக்கமுள சருக்கார்த்த சங்கிரக நூலுலகு
வாழத் தந்தோன், பெருக்கமுறு தன்மரபின் முன்மருவிப் பல்கலை
யும் பேணி யோர்க்கே. (௫)

திருமாலுக் கடிமைசெயென் றுரைத்தமுது மொழிப்படியே
சிந்தை செல்லக், கருமாலைக் கடந்தனந்தாற் புதமியற்றிப் பரநாடு
களிக்க வாழும், பெருமாண்பி னொருதாசர் சரித்திரநூ லியற்ற
மனம் பேணிச் செல்வந், தருமாலின் றிறனுசான் றகையாழ்வார்
நலனமுத சார மென்ன. (௬)

எல்லவரு நாடுநக ரெனுமரியை நாடுநக ரேற்ற மும்மை
மல்குமர புண்மைசே வகமாண்பு தாசர்புவி வயங்கத் தோன்ற
லொல்சமயத் தெருட்சிகுரு வைப்பணிதல் குருவருளை யுறவு ஞற்ற
னல்வகைய தலயாத்ரை சங்குசக்க ராங்கனத்தை நண்ணு மாட்சி.()

மந்திரா ராதனச்சீ ராழ்வார்கள் மாட்சிபதி பதியார் சீர்த்தி,
முந்துசர ணாகதிகைங் கரியவகை பரமபத முதவாழ் வென்ன, விந்த
வகை பதினைந்து சருக்கமா யிரத்திருபத் தெட்டுப் பாவா, னந்தணி
மால் விசிட்டாத்து விதநெறிபின் முறைமுழுது நன்கு வாய்த்தே.

ஒருங்கமையும் படிபாடி மாலடியா ரெல்லவரு முவப்பத் தந்
தான், பெருங்குணமா ரிவன்புதல்வ னெல்லவர்க்கு முபகாரப் பெற்
ற்றி வாய்ப்பத், தருங்கவிகைக் கரமுடையா னெனக்கினிமை தரு
நேயன் றமிழ்ப்பா வாணர், நெருங்கமகி ழிலக்குமண பூமனிதை
யச்சியற்றி நிலைப்பித் தானுல். (௭)

உள்ளமுத மிகப்பெருகத் தெள்ளமுத கவிபகர்வோ னுவாமுற்
றோன்றித், துள்ளமுத லையைத்தடிந்தாட் கொள்ளமுதல் வருமுத
ல்வன் றுணைத்தாண் மீது, பள்ளமுத கம்புகல்போற் றெள்ளமுத
லன்பையுய்ப்போன் பாரி யாதி, வள்ளலென வருமரங்க நாதகவி
நாவலவன் வாழி வாழி. (௮)

மதுரை தேவஸ்தான கமிட்டியார், அமராவதிபுதூர்
வயி. நாக. ராம. அ. இராமநாதச் செட்டியார
வர்களியற்றியவை.

இனிக்குநறுஞ் செழுந்தமிழின் வடவெல்லைக்கல்லைநிகர்த் திணையொன் றின்றித், தனிக்குழுய ரியதிருவேங் கடமுடைய நெடுமாயன் றன்னைக் காணச், சனிக்குழுயி ரனைத்தும்வழி வருத்தமெலாந் தவிர்த்துறினுந் தாள்வைத் தேறப், பணிக்குமெழு மலையேற்ற மரியதெனப் பெரியவுளம் பரிந்து மாதோ. (க)

தமிழுநாடு புரிதவத்தாற் பரிவாரம் யாவுமுடன் சாரவோவா, திமிழ்நீடு துணைகடற்கு மேற்கினிலொன் றரைக்காதத் திரைக்குநீருக், கமிழ்தேயுஞ் சிறிதொவ்வா மதுநதியின் வடகரையி லம்பொற் காந்தி, யுமிழ்மாடஞ் செறியரியைத் திருப்பதியில் வேண்டுவதந் துறைவ னம்மா. (உ)

அந்தநகர் வணிகரிலே முகப்பெருந்தி ருவைப்பொருந்தி யமருஞ் சீர்த்திச், சந்தமலி பெருங்குடியிற் றெய்வநா யகன்மரபு தழைந்து வாழ, நிந்தையறு பேரடிமைத் திறனேயோ ருருவுகொடு நெடுஞா லத்து, வந்ததெனப் பெரியசே வகனென்பான் றோன்றியிசை மன்னி னுல். (௩)

பின்புசொலற் கருஞ்சிறிய திருவடியே யெனப்பணிசெய் பெரிய னை, வன்புவடி வுடைச்சிறிய சேவகப்பே ரனும்பிறந்தாங் கழியா துற்றான், முன்புவரு மிவரனையர் பலர்துலக்கக்கிருட்டிணனு முடிவி லாதான், றன்புதவி ரிலக்குமண நாமகுல விளக்கையவைய் தொழத்தந் தானுல். (௪)

இவன்றருமஞ் செறியுமிரா மாநுசதா சப்பேர்வாய்ந் திணையிலாமா, தவன்சரணு கதிவழிபோ யழியாது திருநாடு சார்ந்து வாழ்வ, னவன்செயலெல் லாந்தாச சரிதையென வயிதான மமைத்து நாளு, நவன்செய்கொழுஞ் செழுந்தமிழி னருந்தமிழ்தின் செய்யுளினு னல்கி னுனல். (௫)

தேறும்வழி யெனப்புகல்வ ரிலக்கியத்துக் குதுகற்றோர் திகைப்பொன் றின்றி, யேறும்வழி யெனப்புகல்வ ரிலக்கணத்துக் கதுவல்லோ ரிணையில் வாய்மை, கூறும்வழி யெனப்புகல்வர் வைணவர்க்கவ் வாகமந்தேர் குநரின் பத்தி, யூறும்வழி யெனப்புகல்வர் சோகமறு பாகவத ரொருங்கு மன்னோ. (சு)

எவன்செய்தா னித்தகைய பேரொளிய காவியத்தை யெனிற்சீ தப்போ, தவன்செய்தான் புவியினையா தவன்செய்தான் சவியினை மற் றவைபோ லச்சூழ்ந், திவன்செய்தான் றனித்தெனவக் குலத்து வரு கிருட்டிணப்பே ரிப்ப னெப்பி, றவன்செய்தா னதனால்வந் தவனரங்க நாதனென்க தான்செய் தானே. (எ)

---

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



ஸ்ரீராமஜயம்.

# இராமாநுஜதாசர் சரிதை.

## பாயிரம்.

### கடவுள்வாழ்த்து.

செய்ய சலசந் திகழ்திருவின் றிருத்தாட் பூவி னலத்தகத்தி
னைய சுவட்டி னொளிவிரவி யழகு செய்யு மணிநிறத்து
வைய மடங்க வுளவெல்லா மன்னிப் பொலியு மங்கலமாந்
துய்ய தாய வொப்பில்பரஞ் சோதி நினைந்து தொழும்பொருளே.

வேறு

மின்னுண் மேக மெனமிளிர் மேனியான்
றன்னுள் யாவுந் தரிக்கும் பரம்பொரு
ளென்னு ளென்று மிருப்பவ னீறிலான்
பொன்னந் தாமரைத் தாட்டுணை போற்றுவல்.

வேறு

புண்டரீ காக்க னென்றும் பொறிபுவி மணாள னென்று
மெண்டரு குணங்கண் மூன்றி னியையுமுற் குணத்த னென்றுங்
கண்டமில் பிரம மென்றுங் காரண னுலகுக் கென்றும்
பண்டைநான் மறைக ளோதும் பரம்பொருட் கடிய மென்றும்.

### திருமகள்.

பதமும் பொருளும் போற்பரனை யகலா தகலப் பரப்பினுறைந்
திதமே நோக்கி யகிதமொழித் தெய்தி னாரை யினிதோம்பும்
விதமே பகவன் றனக்கோதி மேவு மோக்க மளிப்பிப்பாள்
பதமாந் துணையே புணையாகப் பற்றிக் கடத்தும் பவக்கடலை.

### நம்மாழ்வார்.

போதிமலர்ப் பிண்டிநிழல் பொருந்தியற மென்னவுரைத்தோர்
போலாதிந்த மேதினிசெய் தவமாகிப் பற்றிலிடன் மெய்ப்பொருளை

பற்ற லானே, திதில்பெரு மகிழ்கொள்ள றெரிவிப்பான் றிருப்புளிக் கீழ்த் திருந்த மேவி, யாதியிறை யகமருவி யரியமகிழ் கொண்மாற னடிகள் போற்றி.

### அவையடக்கம்.

ஒப்பில் பத்தி நிறைஞான முடையார் கவிஞர் பலரானுஞ்
செப்ப வரிய புகழ்த்தாசர் சரிதை சிறிதும் பத்தியுடன்
றப்பின் ஞான கவித்துவங்க டழுவேன் புகன்ற தனைப்புலவர்
செப்ப மமைய நோக்கியிறை செய்கை வியந்து மகிழ்பூப்ப.

பாயிரம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் சு.

---

## க-நாடுநகருரைத்த சருக்கம்.

### நாடு.

பொற்புறு *படைப்படைப் புனிதற் போன்றொளிர்ந்
தற்புதக் கடற்படிந் தம்புண் †டம்புதந்
தற்பொரு மிராகவ னிறத்தைச் சார்ந்துதென்
வெற்பினை நோக்கிமேக் கெழுந்த விண்ணினே. (க)

வேனிலை நோக்குறு விழுமி துன்செய
லானவா றெனநகை யாடல் போன்மினி
யூனமா மினியுறி லென்று ருத்தல்போல்
வானிடை யதிர்ந்து‡செல் வழங்கி நின்றதால். (உ)

எந்தையவ் விராகவ னெய்து §மாநிறம்
வந்தத னுற்றவை வாய்த்த தாமெனச்
சந்தன மலையமாச் சயில மீதுவான்
சிந்திய தாரைகள் செறிந்த திக்கெலாம். (ங)

வள்ளலா மிராமனற் கருணை வாய்த்துளாற்
குள்ளுறு தாபங்க ளொதுங்கு மாறுபோற்
கொள்ளையின் வருடத்தாற் கோடை போய்க்குளிர்
புள்ளொடு மரங்களும் ||பொழிலும் போர்த்தவால். (ச)

* படைப்படை - அலாயுதம். † அம்புதம் - மேகம். ‡ செல் - மேகம். § மாநிறம் - கரியநிறம். || பொழில் - பூமி.

ஆரமார் பற்பல்கோ டண்ம மாமணி
சேரமிக் கொலியுறத் தென்றல் வெற்பிழீஇ
வார்தரு மருவியம் மலையின் *வட்டையாற்
பார்வரு †வாலுவாப் பான்மை யேய்க்குமால். (ரு)

ஒழுகிய வருவிகள் கலவி யொன்றினென்
றழிவிலாப் பொருநையா றுகி யெங்கணுஞ்
செழியவாச் செய்யுமித் தேளத்துச் செம்மையைச்
செழியனென் றரசனுக் கேற்றிச் செப்புவார். (சு)

வருபுன ஞேக்கியுண் மகிழ்வின் மள்ளர்க
டருமொலி நதியொலி தாழ வோங்கின
விருகரை யினுமலை யெற்று மாமணி
விரியுடுக் கணநிரை விளக்கங் காட்டுமால். (எ)

பொதியமா முயரிடைப் பிறந்து பொங்குநீ
ரதிகமார்ந் தளியுறீஇ யண்மி ஞர்வெம்மை
விதியொடு போக்கியும் விளங்கு மிந்நதி
துதியுயர் குடிப்பிறந் தாரிற் றேன்றுமால். (அ)

பிறந்தவில் லிடைப்பொருள் பேணி யுள்ளுற
நிறந்தரு முல்லைமுன் னிலந்த ழீஇயவுந்
திறம்பெறக் கொடுகட லன்பற் சேர்தலான்
மறம்பயில் விழிமினர் வழக்கங் காட்டுமால். (கூ)

நீர்சிறை செய்தலா னிமிரு மோதையும்
பாரிற வுழுதலாற் பம்பு மோதையு
மேர்பரம் பியற்றலா லியலு மோதையும்
வார்கட லோதையை மாய்க்கு மோதையே. (கய)

வேறு

அங்க ‡ணங்கண மாய்தந்து நல்விதை
செங்கை கொண்டு § செறுவிற் செறித்துவா
னெங்க ணும்பணி யிந்திர தெய்வதந்
துங்க மெய்தத் தொழுவர் தொழுவரே. (கக)

* வட்டை - வழி. † வாலுவா - வெள்ளானை. ‡ அங்கணம் ஆய்தந்து - சேற்றின் செவ்வி ஆராய்ந்து. § செறு - வயல்.

வேறு.

உத்தம விலக்கணத் துயர்ந்த தீர்த்தன்பாற்
பத்தியு மூக்கமும் பல்கி யோதுவான்
வித்தக நாடொறு மேற்கொ ளாறுபோ
னத்துழு வயலிடை நாறு *வீறுமால். (கஉ)

உளமகி ழுழத்திய ருழுநர் நாறுகொண்
டிளநிலாப் பணிலமுத் தீனுஞ் செய்யிடை
வளமுற நட்டனர் வலிய கோட்கள்சென்
றளவிய நாட்டிற னமைய நோக்கியே. (கந)

தங்கள்கண் முகத்திணை தந்த வாயினும்
பொங்குநல் லூதியம் போக்கல் செய்வரோ
கொங்கலர் தாமரை குவளை யாதிய
பங்கய மலர்களைப் பறிப்பர் பேதைமார். (கச)

கன்னலின் மதுவினற் கனியின் றேறலி
னுன்னதக் கோட்டிரு லொழுக்கி னோங்குநீர்
பன்னிசை வண்டொடு பரந்து பாய்தலிற்
செந்நெலா காயமீச் செறிய வோங்குமால். (கரு)

நீடிய †சொற்பயிர் நிரைத்த ‡செங்குரல்
கோடியொல் லொலியுட னூடுங் கொள்கைநீ
ரூடுறு மலர்மண முவந்து நன்றெனு
வீடுறச் சிரந்துளக் கின்ற தேய்க்குமால். (கசு)

கண்ணுகர் மள்ளர்கள் களிப்புக் கைம்மிகத்
திண்ணிய குயங்கொடு குறைத்த செந்நெலைக்
கண்ணுதல் வளைத்திடா மேருக் காட்சிபோன்
மண்ணிடைப் போர்பல வயங்க வேய்ந்தனர். (கஎ)

போரினைக் களம்பெறப் பரப்பிப் பொங்கிருட்
பாரிய கடாக்களாற் §பலால நீத்தநெற்
சூரியன் மன்னிறை தந்து பண்டியி
லூரிடை நிலமுது குளுக்க வுய்ப்பரால். (கஅ)

* வீறும் - செருக்கிவளரும். † சொல் - நெல். ‡ செங்குரல் - செவ்வியகதிர்கள். § பலாலம் - வைக்கோல்.

சொல்லிய கடவுளர் பிதிரர் சுற்றத்தார்
நல்லியல் விருந்தினர்க் களித்து நான்குகூ
றொல்லுமோர் கூறுதா முவந்து கொள்ளினு
மெல்லையில் செல்வமிந் நாட்டி லேயுமால். (கக)

வேறு.

சோலை மாமலை தோறும் *புளினமே
சால வார்நதி தங்கும் †புளினமே
சீல மைந்தர்கள் செங்கை யிராமனே
யேலு மாதர் முகங்க ‡ளிராமனே. (உ0)

மாலை நோக்கி வணைகுவர் மாலையே
தால மீதிவர் தாழ்வது மாலையே
பால விற்பனர் பாடுவர் மாலையே
மூல நீங்க முடிப்பது மாலையே. (உக)

மாதர் கோதை வணைகுவர் கோதையே
காது வீரர்கைக் கொள்வதும் §கோதையே
யோது மாண்ப ரொழிக்குவர் ‖கோதையே
வீதி தோறும் விழாநெருக் கோதையே. (உஉ)

இயங்கு மில்லிடை யேய்வள் கமலையே
நயங்கொண் மைந்தர்சொ ¶னள்ளில் கமலையே
முயங்கு வீரர்தோண் *முன்னில் கமலையே
வயங்கு வார்குழன் மானும் †கமலையே. (உங)

வேறு.

வயலுறு சங்கத் தானும் வாவிதோய் பதுமத் தானு
மயலுறு தருக்க ளானு மானிரைப் பெருக்கி னானு
மியலுறு நிதியந் தாரு சுரபிகள் பலவா யேய்ந்த
செயலுறு வானு டென்னச் செப்பவாம் பாண்டி நாடே. (உச)

---

* புளினம் - புள் இனம். † புளினம் - மணற்குன்றுகள். ‡ இராமன் - இராவுக்கு அரசனாகிய திங்கள். § கோதை - வீரற்றோற்கட்டு. ‖ கோதை - குற்றத்தை. ¶ நள்ளில்கமலை - நடுவெழுத்தில்லாக்கமலை, கலை. *முன்னில் கமலை - மலை. † கமலை - கம், அல்லை; மேகத்தையும் இருளையும்.

வேறு.

சேவிருக்குந் *திருக்கிளர மகளிரொடு மைந்தர்களுஞ் சிலம்பாற்றுடி, நாவிருக்குங் கொடுபோற்றி நாடோறும் வழிபாடு நண்ணி னாற்றும், பாவிருக்கு மொலிவேலைப் பணியிருக்கை மேவியவெம் பரம னூன, மாவிருக்கு மெழிற்சோலை மலையிருக்குந் தென்னாடு வாழ்தென் னாடு. (உரு)

†உருக்கோட்டி யுயிர்க்களிப்பான் றாதையைத்தந் தாமேனேர்ந்த வோங்கு கைம்பரப், பருக்கோட்டி னிணையொடித்தான் றனைப்பரவு மன்பரிடம் பரிந்து செய்யுந், தருக்கோட்டி யினிதாள்வான் றமரையாள் சேர்கிறத்துத் தையின் வாரி, திருக்கோட்டி யெனும்பதியுஞ் சேர்ந்திருக்குந் திருநாடு செழிய னாடு. (உசு)

ஐயனடி யடைந்தாரை யெவ்வாறு மளிப்பனெனு மதற்குச் சான்றாய், வையமிசைப் பரியூர்ந்து கீதையுரைத் தடுபோரில் வயங்கு நேமி, வெய்யவன்பால் விடுத்தாண்டா னருச்சுனனும் விறலோனை மேவு மம்மான், மெய்யமெனு மலையுடைத்தாய் விளங்குதமிழ் நாடு ‡தமிழ் மிக்க நாடு. (உஎ)

பொல்லாத நிருதர்பதி யரிகள்புக §வகுந்தியற்றல் புணர்ப்பாக் கொண்டு, பல்லாருங் கண்டுபவம் பாற்றியுயர் கதியடையப் பரிந்திராமன், செல்லாரு மொலிகடல்வாய் நளனாற்செய் தின்னுமுள சேது மூலப், புல்லாணிப் பதியுமுடைத் தாயபின்ன ரேதிலதிப் பொருனை நாடு. (உஅ)

எண்காலும் வானிலனு ||மெழுநாவு மப்புமிவை யாவு மாகிக் கண்காலுங் கமலமெனக் கொண்டின்று காத்தளிக்குங் கடவு ளப்பண் பண்காலு மொழிப்பாவான் மங்கையர்கோன் பாடவகம் பரிந்து மேய தண்காலு முடைத்தாய தவமுடைத்தாற் செழியனுறை தமிழ்நா டென்றும். (உகூ)

---

* திருக்கு - விழி. † உருக்கோட்டி - தருவின் றிரளினை. ‡ தமிழ் இனிமை. § வகுந்து - வழி. || எழுநா - நெருப்பு.

மாகூரு மறிவடைந்து மறிவரிய பொருண்மறைகள் வாழ்த்துஞ் சோதி, பாகூரு மொழிமலர்மின் னுடுகோள மேகமெனும் படிவந் தாங்கி, * நேகூரு முயிர்கண்மலங் கழுவியநற் கருணைமழை நிறைத்து நிற்கு, மோகூரு மறத்தாறே கோல்கொள்ளுங் கைதவனூர் முது நாட் டுண்டால். (௩௦)

பழியறுத்த வுயர்கோலான் பாண்டியன்முன் கொண்டாடப் பரமா லென்ன, வழியறுத்துத் திரிபவருந் தெருளடைவான் சங்க மரீஇ மறைக ளோதிக், கிழியறுத்த பட்டர்பிரான் கிளர்பாக்கொண் டழகனிருந் தருளுங் கூடல், செழியருக்குத் தலைமைபெறு நகராகச் சிறந்துளதித் தென்னாட் டென்றும். (௩௧)

அல்லிசுற்று மலர்மாலை தொடுத்தளகத் தணிந்தழகி தென்ன வாய்ந்து, சொல்லியற்றும் பாமாலை யுடனிரண்டு தொங்கலுமுன் சூட்டி னாட்குப், பல்லிசைச்செம் மணமாலை புனைந்தாண்ட வரங்கனுளம் பரிந்து மேவும், வில்லிபுத்தூர் நகருமுடைத் தாயதுதென் னாடதன்சீர் விளம்பற் பாற்றே. (௩௨)

இருக்கிலுறு பொருளனைத்துங் கருணையினின் றமிழாக்கி யீந்த மாறன், வருக்கமுறு மாயைமுனிந் தவதரித்த வளமாதிக் கடவுண் மாலுட், பெருக்கினுட னுறைமேன்மை யிவ்விரண்டு மொருங் குறலாற் பேறு மிக்க, திருக்குருகைப் பதியுடைய தென்னாட்டைப் பிறநாடெத் திறத்தி னேரும். (௩௩)

மலைவில்லி கமலத்தோன் மாயனென முத்தொழிலின் மருவி நின்றுங்
கலைபல்ல தெரித்தலுக்கா வியாதன்முத லோருருவங் கலந்து நின்று
முலைவில்ல வுயிர்கடொறு மந்தரியா மியுமாகி யூட்டு மாயோன்
றொலைவில்லி மங்கலமும் வழுதிதிரு நாட்டுளதேற் சொல்வ தென்னே.

† பீனமார் தனமாதர் மக்கள்பொரு ளழியாத பெரும்பே றென்று
மூனமா ருடலினையே யுயிரென்று மறிவுகெடு முலகின் மாக்க
ளீனமா கியபவத்தி லாழாம லாள்வதற்கே யெண்ணி நண்ணும்
வானமா மலைப்பெருமான் சீவரமங் கையுமுடைத்திவ் வழுதி நாடு. ( )

---

* நே - அன்பு.

† பீனம் - பருமை.

* ஒன்றிருப்பே நிகருமன முடையோரா யுயிரனைத்து மொழு த்து கோவங், கொன்றிருப்பே மென்றிருக்கு மறிவிலிக ளானாலுங் கொண்மூ வண்ணன், றன்றிருப்பேர் புகன்றுதனைச் சார்ந்தாரேற் காக்கவரு டாங்கி மேவுந், தென்றிருப்பே ரைப்பதியுங் கொண்டிருக் கும் பாண்டியனார் சீர்கொ ணாடு. (கூசு)

காவைகுந் தலமெனக்கொண் டமரர்கணம் போற்றவுறை கட வுட் கோமான், பூவைகு வளமனைத்து மொழித்திடுபூ மூலசுரப்பப் †பொருநு கொண்டான், மாவைகு மருமத்தா னெனத்தொழ முற் றோன்றியருள் வளர நின்ற, சீவைகுந் தப்பதியு மகத்துளதாற் சிறப்புடைத்திச் செழிய ணாடு. (கூஎ)

அருணமணி வெயிலொளிசெ யரவின்மிசை யிருமாத ரருகு போற்றக், கருணைமழை பொழியுமுகில் ‡ கனருசியோ டுறுமியல்பு காட்டச் சேர்வான், றருமனுபர் வருணனொடு நிருதிதொழத் தோ ன்றியரு டங்க மாயோன், பொருவரிய புளிங்குடியா மொருபதியு முளதுசிதன்§ போற்று நாடு. (கூஅ)

விரவிவிரை சேர்கமல மலரிலிருந் துலகளிக்கும் விமலை நாதன்
பரவவரு கடவுளர்நா தன்பழைய வருமறைகள் பகரு நாதன்
திரமிகுமைம் பூதமுயிர் முதனாத னுயர்விண்டு சேர்ந்து மேவும்
வரகுணமங் கையுமுடைய வழுதிதிரு நாடெவரு மதிக்கு நாடே. ()

செருக்குளங்கொண் டியாங்கடவு ளியாங்கடவு ளென்றுதிரி தேவ ரெல்லாந், தருக்குளனிற் கராங்கதுவு கயமாதி மூலமெனச் சார்ந்தா ரில்லை, யிருக்குளவா றேதுபரன் றிருமாலென் றறிவதற் கே யென்று காத்தான், றிருக்குளந்தைப் பதியுடைத்தாற் பொரு நைவளங் கெழுமுதிருத் தென்ன ணாடு. (சo)

---

* ஒன்று இரும்பு எ - ஒன்றிய இரும்பாலாகிய அம்பினை; தோற்றத் தாற் செவ்விதுபோன்று செயலாற் கொடிதாகும் தன்மையானும் வன்மை யானும் மனத்திற் குவமையாயிற்று.

† பிருநு என்பான்; "புவியடந்தை மூலசுரப்பச் சாதித்த பெருந்த கை" என்பர் கம்பர்

‡ கனருசி - மின்னல். § உசிதன் - பாண்டியன்.

கறங்குதிரைக் கடல்புடைசூழ் காசினிவாழ் மன்பதைபாற் கரு ணைபூப்பப், பிறங்குமனத் தெனையொருவா நினைந்தடைத லரிதிவர்க் கென் பெற்றி யோர்ந்து, நிறங்குலவு மலர்மகளோ டினிதாள்*வரு ச்சையுரு நேர்ந்து மன்னுங், குறுங்குடியு முளதுநறுங் குடிகள்பல பொலிசெழியன் கொற்ற நாடு. (சக)

†தோளூரு பசுந்திகிரி யரம்பைநிக ரெனுமடவார் சொன்ன மேனை நீளூரு முடனுநிலை யிலவரிக்கே யுயிரடிமை நித்த மென்னத் [குன் தாளூருமன்புடையார் தமதுளம்போன் றிறையிறையுந்தணவா தோங் கோளூரு முளதாகு மகரகே தனமகிபன் கொற்ற நாடு. (சஉ)

வேறு

பரம்பொருளீ தென்றுலக மறிந்துய்யப் பண்டொருநா
ணிரம்புகடாம் பொழிகளிறுய் நின்றுவிளித் தறிவித்துத்
திரம்பெறுவான் கிழியறுத்துப் பின்னுளுந் தெரிவித்த
வரம்பில்பெரு நன்றியுடை வழுதியர்நா டிந்நாடே. (சங)

வேறு

இத்தகைச் சிறப்பு வாய்ந்த வீரொன்பான் பதிக டோறும்
வித்தகக் கமலை கேள்வன் மேவிய மேன்மை யோடு
புத்தமு தனைய நீரார் பொருனைசூழ் வளனு மார்ந்த
வுத்தமப் பாண்டி நாட்டி னுயர்வெனு னுரைக்கற் பாற்றே. (சச)

## நகர்.

வேறு

சீரினுயர்ந்து வானளவிச் செல்லுமாடம் பற்பலகொண்
டோரி னெவையுந் தனைநேரா வுயர்வேய் நாம மரிபுரமென்
றுரும் போற்ற மன்னியந்த வமரா வதியுந் தினம்விரும்பு
நீரி னிறைந்த நகரொன்ற தென்று நிற்கு நீர்மைத்தால். (சரு)

வேறு

அப்பதிக் கியைந்து தண்ணென் றூழிய வகழி நோக்கிற்
றிப்பிய வுருவம் வாய்ந்த திருமக ளென்பால் வந்தா
ளிப்பொழு தரியை யுள்ளாள் யானவட் கூண்ப லென்னச்
செப்பருங் கடலே வந்து சேர்ந்தமை மானு மன்னே. (சசு)

---

* அருச்சை - விக்கிரகம். † தோள் பசுந்திகிரி ஊரு, அரம்பை.

மாற்றல ரடையா வண்ண மாற்றுயர் பொன்னி னாக்கி
யேற்றொளி விரிக்கு நீல மினமணிப் பதும ராக
மேற்படக் குயிற்றி நின்ற*வாரலின் றாம மேவத்
தோற்றுரு தாகு மென்று மிரவிங்ஙன் சொல்வ தென்னே. (சஎ)

மண்டலக் கிரணச் சோதி மதியென்பான் பற்றொன் றில்லாக்
†குண்டலத் துலவ லாலே கூடிய மம்மர் நீப்பான்
றெண்டிரைச் சிந்து வேழுஞ் சேர்ந்தெனக் கிடங்கு சூழ்ந்த
வெண்டரு‡மகப்பா மேவி யிருந்துபின் னேகு வானல். (சஅ)

||பாம்புரி யாடை சுற்றிப் படிகத்தி னமைக்கப் பெற்ற
மேம்படு புரிசை நிற்றல் விரிதிரை மணிக டேற்றி
வாம்பெரும் பௌவ மேவி வார்புன லருந்த நிற்ப
தாம்பெரு முகிலே மானு மன்னதற் கைய மின்றால். (சகூ)

இந்திர நீலக் கல்லி னிடையிடைத் தரள மேற்றித்
தந்திடு மிஞ்சி யெண்ணிற் றாரகை வானு நேருஞ்
சுந்தர முகுரம் போலத் துலங்கிக்கே ழிதிகம் வாய்ந்து
சந்திரற் சிரித்து நிற்குந் தன்மையு மேயு மன்றே. (ரு௦)

இரவலர் குறிப்பு நோக்கி யீகின்ற செல்வர் வாழும்
விரவிய மனைக்கண் மேய மின்விடு புருட ராக
மரகதம் படிக நீல மாமணி யெழுக்க ளாக்கி
லுரவியல் காயத் துற்ற விந்திர தனுவொப் பாமால். (ருக)

மகரவா ரிதியிற் றோன்றி மாநில வலய முற்றும்
புகரற வலமா வென்றும் போகின்ற§வென்று மிந்தச்
சிகரியின் சிகரத் துற்ற சித்திரத் தரவைக் காணூஉத்
திகிரியின் மறைவான் மிக்க கதியொடு செல்வ னம்மா. (ருஉ)

வானிடைப் பரந்து நீண்ட மாடத்தி னுச்சிவைத்த
கானுடைத் தரள பந்தி விடுமொளி கஞலித் தோன்ற
றேனுடைத் துளவத் தொங்கன் மிலைச்சிய திருமால் செய்ய
கானுடைப் பாதந் தோன்றுங் கங்கைமற் றொன்றே போலும். (ருந)

---

*ஆரலின்றாமம் - மதிலினொளி.
†குண்டலம் - ஆகாயம். ‡ அகப்பா - மதில்.
|| பாம்புரி - அகழி. §என்று - சூரியன்.

சந்திர காந்தக் கல்லாற் சமைத்துள மனைக ளெல்லாஞ்
செந்திரு வனைய மாதர் சீதமார் நீரில் வேட்கை
வந்துறு தோறுந் தங்கண் முகமெனு மதியா னோக்கி
யந்தநல் விந்து காந்தந் தருகின்ற வறலே யுண்பார். (ருச)

அரதனக் குழுவாற் செய்த வம்மனைச் சாலஞ் சால
விருளினைப் போக்கி நிற்ப தென்பதென் னாளும் வியா
வருகதிர்ப் பருதி * யாலோன் மன்னிய வொளியு மாங்கு
மருவுறச் சமழ்க்கு மென்னின் மற்றிதற் குளதோ வொப்பு. (ருரு)

மனைகளிற் குயிற்றி யுள்ள மரகதத் தொளியை யாயாப்
புனிதமாந் தேவ ராவும் புல்லெனக் குதட்டிச் சாலக்
கனிபயன் பெறுது வாளா மாழ்குதல் கடப்ப தில்லை
தனிமதி யூக மின்றே னுயர்கதி சார்ந்து மென்னே. (ருசா)

அடுக்கலைப் போன்று நிற்கு மனேகமா மாடம் வேகந்
தடுக்கலாற் றளர்ச்சி யுற்ற சந்திரா தித்தர் விந்தம்
படுக்கமுன் னூற்றி நின்ற முனிவனைப் பதிப்ப ருள்ள
மிடுக்கணைத் தீர்க்கிற் போரை யாவரே நினையா ரம்மா. (ருஎ)

மாதரும் வனப்பு வாய்ந்த மைந்தரு மருவி யாடும்
போதவிழ் † துரும சாலம் பொருந்துநல் லுத்தி யானத்
தோதுறு மிசைகள் பாடி யுகந்துதேன் பருகித் தேன்கள்
காதலிற் களிகொண் டாடச் சுரும்பினங் களுல்வ மாதோ. (ருஅ)

குளிர்தரு தருவுய் யானங் குலவுபு சுலவு மென்மை
மிளிர்பசுங் கொடியிற் பூத்த விரைநறுந் துணரின் மன்று
வளியினம் பிரச மாந்தி யணியிசை பயிலத் தொக்க
நளிர்மலர்க் கணையான் செய்கை குறைவற நிமிர்வ நாளும் (ருகா)

வண்டர்க ளுண்ண மேவு மஞ்சரி கொங்கை மானத்
தண்டளிர் புல்லும் வல்லி‡பிருகுடிக் குவமை சாற

* ஆலோன் — திங்கள்.

† துருமசாலம் - மரக்கூட்டம்.

‡ பிருகுடி — புருவம்.

முண்டக குசுமந் தூய முகத்தினை நேரச் சாகை
வண்டலம் புறுதோண் மான மங்கையர்ச் சிவணுஞ் சோலை. (௩0)

வேதனை யுற்றோர்ப் போக்கி மேவுநந் தனத்தார் தாரு
போதநீள் சாகை யென்னுங் கரங்களாற் பூக்க டேவி
மாதவப் பலத்தா லந்த வானநாட் டுறைகின் றோரை
மேதகச் *சபரி யாற்றி விண்ணிட மின்றி நிற்கும். (௩௧)

அந்தரத் துற்ற தேவ ரத்தலத் தெய்தி யோங்கி
யிந்தநற் றருக்க ளீயு மின்சுவைக் கனிக டுய்த்து
முந்தருந் துறுப லத்தி னவாவினைத் துறத்தன் முன்னில்
விந்தையென் மிக்க நன்மை மேவுறின் விழையார் யாரே. (௩௨)

வளைபயி றடத்தின் கூல நிரைநிரை மருவி நிற்குங்
கிளைமிகு தருக்கள் வானிற் கெழுமலா லிடையிற் றோன்றி
யொளிவிடு முடுக்க ணத்தை யுயருமிவ் †விடபி பூத்த
வளியுணு மலரே யென்ன வனைவரு நினைவ ரம்மா. (௩௩)

ஓதமு மழகு நல்ல வுருசியுந் தெளிவு மார்ந்து
காதுறு தரங்கஞ் சூழக் கணக்கில குவளை யாம்ப
றூதுகு கமலஞ் செய்ய வுற்பலந் தளிர்த்துப் பூத்த
போதவிர் விரைய வாகிப் பொலிவுன பல்ல வாவி. (௩௪)

கங்கைகா விரியே யாதிக் கடவுண்மா தீர்த்த மெல்லா
மிங்குற வெம்மான் முன்னஞ் செய்துள வேது தன்னாற்
றங்கிய தீர்த்த ராச சாமிபுட் கரணி யென்னப்
பொங்கபி தானங் கொண்ட புண்ணிய தீர்த்த முண்டால். (௩௫)

மண்படைப் பிப்பான் மேலை மாதவ னுந்தி தந்தான்
சண்பகங் கமலந் தொண்டை சந்திரன் வல்லி நாக
மெண்பெறு பின்ன கொண்டே யிந்நகர் மாதர்ச் செய்தான்
பெண்பிற ரிவரை யொப்பா ரெங்குளர் பேசற் கென்றும். (௩௬)

* சபரி - பூசனை.

† விடபி - மரம்.

கொள்ளைவண் டுண்ணுங் கூந்தற் கோதைய ருந்தி யாய
பள்ளமார் வாவிப் பாங்கர்ச் சக்கர வாகம் பற்ற
லுள்ளவா றெனலா மன்றி யொளியிளம் பிறையின் பாங்கர்க்
கள்ளவிழ் கமலம் பூக்குங் காட்சிமா வியப்பிற் றாமால். (கூஎ)

தீரவே ளனைய ராகிச் செருக்குறு மஞ்சர் நோன்மை
மாரவே ணோக்கி வெல்லன் மதியினா லன்றி யாகா
தோரினென் றிவர்பான் மாத ரல்குலா முயர்தே ரேறி
நேரலா மயங்கி நிற்ப நித்தலும் வென்றி யெய்தும்.. (கூஅ)

வாளென மிளிருங் கண்ணார் * வயினிடை வல்லி போல
நீளுறு முரோம பந்தி நிலையுந்தி யளையி னீங்கிக்
கோளுறுங் கரிய நாகங் கொங்கையா நாக நோக்கித்
தாளில தேனு † முற்றுந் தாளொடு மேற லொக்கும். (கூகூ)

என்கொலோ விடையே யின்றி யெழிலியி னிடையே தோன்று
மின்களே யனைய ராக மாதரை விதித்தான் றாதை
தன்பெரு மனத்தான் மிக்க ‡ பாடவத் தன்மை யார்க்கு
மின்புறத் தெரிப்பான் செய்த வியல்பென மதிக்கற் பாற்றே. (எ0)

மாரனைச் சூட்டு கின்ற மணிமுடிக் கொக்குங் கொங்கைச்
சீரணங் கனைய மாதர் திருமுகச் செவ்விக் கொப்ப
வாரிடை மேவி மேலாம் § வதத்தினை நிகழ்த்தற் கேயோ
நீரச மனைத்தும் புக்கு நின்றன கயங்கடோறும். (எக)

இடுகிடைப் பெரிய கொங்கை யேந்தக லல்குன் மாதர்
வடுவொழி வதன மென்னும் மதிதின மலர்த லாலே
கடல்சூலா வுலகுக் கெல்லாங் ‖ கருடரு மபர பக்க
மடைதரக் காண்பா ரில்லை யந்நக ரிடத்தே யாரும். (எஉ)

பூதலத் தேவ ராய புண்ணிய சரிதர் மேனி
மேதகு மொளியாற் கோடி யாதபர் விளக்கங் கோடப்
பேதமி லறிவு நீங்கா விளமையும் பெற்றுப் பொன்றாழ்
மாதலத் துலவு நித்த சூரிகண் மானா வாரால். (எங)

---

* வயின் - வயிறு. † முற்றுந் தாள்-காரியமுற்றுதற்குக்காரணமான முயற்சி.
‡ பாடவம்-சதுரப்பாடு. § வதம்-விரதம். ‖ கருள்-இருள்.

கொங்கு சேர் * காகதுண்டங் குங்கும மார நானம்
பொங்குவா னிறத்த பூரம் புகலரி சந்த மாதி
யெங்கணு நிறைந்து மிக்க வெழில்செயுங் கூல சால
முங்குள வவற்றின் றன்மை யுரைப்பரி தொருங்கி யார்க்கும். (௭௪)

காவதம் பலவு நீண்டு கணிப்பில வகலம் வாய்ந்து
மேவுவெள் ளிடையொன் றின்றி விரவுமொல் லொலிய வாகித்
தாவில்†வித் துருமஞ் சங்கந் தரளமா மணிக ளின்ன
யாவையுங் கொள்ளு நீரா லாவணங் கடல்போன் மென்ப. (௭௫)

அந்தர தலமீச் சென்றங் கழகுசெய் மாட வீதி
தந்துறு மணிகள் வெவ்வே றொளியினங் குழுமிச் சார்த
லிந்தநன் னகரா மங்கைக் கியையப்பன் மலர்கள் கொண்டு
விந்தைசேர் தொங்கல் செய்து மிலைச்சிய தன்மை மானும். (௭௬)

காற்குன்ற மிவையென் றெண்ணக் கவின்றரு பொன்னிற் செய்த
வேற்கின்ற கொடியால் வானை யளவிடு மிரத பந்தி
சூற்கொண்ட கொண்டல் செய்யுந் துவனியுட் சுருங்கச் சென்று
மேற்கொண்ட வொலிய வாகி விரைகின்ற மறுகு தோறும். (௭௭)

மாகமீ தோங்கித் தூய வான்பிறைக் கோடு தாங்கி
மோக‡மாக் குழுமிச் சூழ்ந்த கடாநதி யினைய மொய்க்கு
நாகமாக் குழுவை § நாக நாட்டவர் பதிப்பேர் வாய்ந்த
பாகமா மணியாங் குன்ற மெனமனப் பதிப்பர் பாரார். (௭௮)

முறச்செவித் தறுகண் யானை மும்மத நீரி னானு
நிறத்தினு முயர்ந்து சென்று நீடிய வுருவி னானும்
புறத்துள விரியல் போகப் பொங்குபு பிளிற லானு
மறப்புயல் சிறிதென் றெண்ண வாக்கிமே லோங்கு மாதோ. (௭௯)

விண்டலம் படர்ந்து செல்லும் பவனமும் விநதை தந்த
வெண்டகு புள்ளி னேறு மனமுமென் றிவைக ளீட்டிக்

---

*காகதுண்டம்-அகில்.

†வித்துருமம் - பவளம்.

‡ மா-வண்டு. §நாகநட்டவர்பதி-இந்திரன்; அவன் பேர்வாய்ந்தமணிக் குன்றம்-இந்திரநீலபருப்பதம்.

கொண்டதொல் புகழை யெல்லாங் கொய்யுளைப் புரவி முற்றத்
தண்டலில் வேகந் தன்னாற் றாழ்த்தித்தா முயர்வ மன்னோ. (௮௦)

வாவுகாற் பரிக்கூட் டங்கள் வன்குரத் தெழுந்த நீற்றான்
மேவுவா னகரைப் பாராய் விளங்கிடப் புரிந்து*போகி
தேவமா வதனைத் தம்மிற் சிறப்பில தாகச் செய்து
பாவுமாப் புகழை யாங்கும் பயன்படுத் தோங்கு மன்றே. (௮௧)

வேலெறிந் தாலுங் கண்ணை மீட்கிலா வெய்ய வாழ்க்கை
மாலெறிந் தோங்கும் போரின் மறப்படை †வீரவாதங்
கோலெறிந் தென்னக் காதிற் கொண்டுமாற் றலர்கண் மானின்
மேலிவர்ந் தேகுங் காற்றின் மெய்ப்பிறப் பவாவு வாரால். (௮௨)

மாலுறு மவிச்சை நீத்தார் மனமெனத் தெளிந்து தூய்தாய்ப்
பாலுறுங் கங்கை மானப் பாவநீத் தாழ்ந்து தண்ணென்
றேலுற வினிதா யார வெழிலுடைத் தாகி நீண்ட
சேலுறு கடலிற் சேருந் தேனதி திகழுந் தென்பால். (௮௩)

அன்றலர் கழுநீ ரோர்பா லழகுசெய் திருக்க வாம்ப
லன்றியோர் பாலிற் சூழத் துறுமிதழ்க் கமல மோர்பா
ணின்றுசெஞ் சோதி வீச நிரைத்தளி யிசைக்க நீல
மன்றலந் தேற லூற்ற வயங்குமம் மதுவி னாறு. (௮௪)

கூந்தல்சை வலமா விம்முங் கொங்கையா நேமிப் புட்கள்
சேந்தொளிர் வனச மென்பூச் செவ்விய முகமாக் கண்கள்
போந்துறு மீன மாகப் பொலிந்துமா மாத ராரின்
காந்தெழின் மேனி காட்டுங் கரைபொரும் வேரி யாறு. (௮௫)

பாங்கிரு பானு நிற்கும் பராரைமா மரங்க ணின்றுந்
தேங்குதேன் றுளிப்ப வீழுஞ் சிறையளி மலரின் குப்பை
வீங்குநீ ரலையாங் கையிற் கொண்டிரு மருங்கு மேவு
மோங்கிய தவத்தார்ப் போற்றி யுஞற்றுமஞ் சலியவ் வாறு. (௮௬)

---

* போகி தேவமா-இந்திரனுடைய தெய்வக்குதிரை.

† வீரவாதம்-வஞ்சினம்.

‡ கல்லோலம்-அலை.

அந்தர தலத்து மீப்போ மகன்பணைத் தருக்கள் கோட்டிற்
றந்தசீர் வரிசைத் தாகித் தழுவிய மலரினின்று
முந்துறு தேன ளாவி யொலிசெய் ‡கல் லோல மாரு
நந்தலி லொழுக்கத் துற்ற நதியியல் கூற வற்றே. (அஎ)

நேரொரு நகரு மில்லா விந்திரன் குபேர னேரும்
பேரிரு பதியு மொன்றிப் பிறங்கிட வெண்ணி வானிற்
காரினந் துஞ்ச வோங்குங் கடிமலர்ப் பொழில்கள் சூழ்ந்த
சீரிய வரியை யென்னுந் திருநக ராயிற் றம்மா. (அஅ)

ஆயிரக் கணக்க வாய கரமுகங் கண்க ளார்ந்த
பாயொளிப் பானு சேடன் பாகசா தனனு மின்னோ
ரேயுமிந் நகரின் சீர்த்தி யெழுதிட விசைக்கக் காண
வாயநல் வலத்த ராவர் மற்றையர்க் காவ தின்றால். (அகூ)

மூவர்செந் தமிழ்வேந் தர்க்குண் முதன்மையார் பாண்டி மன்னன்
மேவியா ணகர மீது விதப்படை யைந்து மேந்தி
மாவுல கெய்தி னோருங் காதலிப் பெய்த மாலாந்
தேவரு ணிறைந்து வீடுந் தருவது திண்ண மாதோ. (கூ0)

நாடு நகருரைத்த சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் கூகூ.

---



# உமாபுரைத்த சருக்கம்.

அலகில் சீர்த்திகொ ளரியையை யொருபரி சறைந்தா
மிலகு மன்னவர் பின்னவர் யாம்புக ழுசர்க்
குலகின் முன்னவ ருயர்புகழ்ப் புகாரினின் றெளிமிக்
குலவு பாண்டி நா டுற்றது முதற்பல வுரைப்பாம். (க)

நேரி வெற்பினன் வலாரியி னகரமு நேராச்
சீரி னூர்பெருங் குடியினர் சேர்தர வோங்கும்
பாரின் முற்றிய விசையுடைப் புகாரெனும் பதியை
யாரு நேர்கிலா தறத்துட னாண்டுவந் தனனால். (உ)

பொதியை வெற்பினன் றன்னகர் குடிகளாற் பொலிதற்
கதிக வாவலன் றனமொடு மளிமர பழியா
மதியு டைக்குடி பற்பல வேண்டுமால் வளவ
விதுநல் காயெனக் கேட்டன னிசைகெழு முறவான். (ங)

அன்ன வாறியற் றுளத்தனுச் சோழனந் நகரின்
மன்னு செல்வத்தின் வணிகரை நோக்கிநீ ரென்பாற்
றுன்னு மன்பின ராதலாற் சொல்வெனிக் கூடல்
மன்ன வன்மன மகிழுமா செய்ம்மினென் றுரைத்தான். (ச)

வேறு.

பொங்குதிரைக் கடல்புடைசூழ் காவிரிப்பூம் பட்டினத்துப் பொருந்தி வாழ்வார், வங்கமிவர்ந் தறநெறியிற் பொருடேடிப் பலதருமம் வழாஅது செய்வார், செங்கதிர்மா முடிச்சோழ னுரை செவியிற் சேர்த்தினராய்த் திறத்தி னெண்ணிப், பொங்குகுல வணிகரெலா மொருங்குகுழீஇ யதற்குள்ளம் பொருந்திச் சொல்வார். (ரு)

தேன்றுளிக்கு *மாரலங்கல் புரண்மார்ப தென்னவன்பாற் சேர்ந்த வன்பா, லேன்றுரைத்த நின்னுரையின் வழிநிற்பே மிராசதண்ட மெமக்கி டாதே, யான்றபெரு மன்பினொடு புரப்பதெனு மருள்வாக்கொன் றவன்பாற் கொள்கென், றான்றுமிவ ருரைக்கிணங்கிக் கைதவனுக் குணர்விக்க வுவனு நேர்ந்தான். (சா)

* ஆரலங்கல்-ஆத்திமாலை.

உரைகடவான் விரைகடவா மலர்மாலை மணியார மோங்க வோங்கி, வரைகடவா வளர்புயத்தான் வையைநதித் துறைவனென வளவ னன்னூற், கரைகடவா நெறிமெய்ம்மை வணிகர்தமை யன் பினொடு கனிந்து நோக்கி, நிரைகடவாப் புகழுடையீர் பாண்டியன் பிற்போயிவண்போ னிலவு கென்றான். (எ)

அந்தவுரை கடைப்பிடித்தா ரந்தமிலா மறைகண்முன *மந்த வூரு, தந்ததெனும் வருணத்தார் புகாரினிடை மும்மருகு சார்ந்த மேலோர், வந்தனராற் † கனவட்டப் பரிமன்னன் மாநாடு வளத்தி னோங்கிச், செந்திருவான் மிகப்பொலிய விவர்வாழ்க்கை நாளுளுஞ் சிறந்த மன்னோ. (அ)

கைதவனார் செய்தவத்தாற் காக்கின்ற தமிழ்நாட்டிற் கணிப் பின் மாடம், மைதவழ்வா னோங்குமிள சைப்பெயர்கொள் பதியினி டை வளைகள் கோடி, செய்தவழும் புகார்நின்று சேர்ந்தாரி லோர்ம றுகிற் சிறந்த ‡ விப்ப, ரெய்திமிகு தனத்தினரா யிசைபலவுந் திசை பலவு மிசைய வாழ்ந்தார். (கூ)

அப்பதியிற் பற்பலநாட் செலப்பின்ன ராங்குறையு மவர்கள் கூடி, யிப்பதியொன் றேயெமக்குப் போதாதிங் கெனவரசற் கிசைத்த லோடுஞ், செப்பரிய நகர்பலவு மந்திரங்க ளிருநான்குந் தென்ன னீந்தா, னெப்புயர்வி லிவரொன்பா னலயத்த ரெனப்பெயர்கொண் டுறைந்தார் மன்னோ. (க0)

சினகரங்க ளொன்பானிற் சிறந்தவயி ரவன்கோயில் செப்பி னொன்றா, வினமிகுந்த வதின்மூன்று பகுப்பினர்க ளுளரென்ன விசைப்ப ராங்குத், தினம்வளரு மதியுடையன் றெய்வநா யகனெ னப்பேர் சேர்ந்த சீலன், § றனபெயர்கொள் வகுப்பினராய் வழி வருவார் தமைப்பகரத் தான்முன் வந்தோன். (கக)

---

* அந்த ஊருதந்ததெனும் வருணத்தார் - அத்துடை பயந்ததென்னும் சாதியார்; வணிகர். † கனவட்டம் - பாண்டியன் குதிரை. ‡ இப்பர்-வணிகர். § வழிவருவார் தமைத்தனபெயர்கொள் வகுப்பினராய்ப் பகரத்தான் முன் வந்தோன் என்க.

குலம்விளக்கு மணிவிளக்காய்க் குறைவிறவ முடையோனுய்க் குலவு ஞான, நலமிகுத்து வண்மையனு யெவ்வுயிர்க்குந் தண்ணளியே நல்கி நாளு, மிலகு*பதந் தருசதுக்கந் தடமாதி பலதரும மியற்றிச் சீர்த்தி, யலர்தலைமா நிலத்திருளைப் புறம்போக்கி யெந்நிலத்து மமைய வாழ்வான். (கஉ)

நன்னடையான் றன்னடையால் விதிவிதிக்கு நூற்பொருளை நன்கு காட்டப், பின்னடையான் முனிவர்தொழு†நாரணன்பாற் பத்திமிகப் பெருகப் பேணிப், பொன்னடையுந் தங்கள்குல தெய்வமென வடுகபுரி பொருந்தி யென்றுந், தன்னடைவார்க் கருள்புரியும் வயிரவன்பால் வழிபாடு தழுவி னுனல். (கஙு)

வேறு.

பங்க யக்கணன் பாலுறு பத்தியை
மங்கு மாறுசெய் வல்வினை முற்றவுஞ்
சங்கை யின்றித் தடுக்குங் கடவுளர்க்
கங்கண் மந்திரஞ் செய்யு மருத்தியான். (கச)

மணியிற் பொன்னினன் மண்டபங் கோபுர
மணிகொள் கர்ப்பக் கிருகம தாதியா
விணையி லாவொளி யேயுஞ் சினகரந்
தணிவி லன்பிற் சமைத்தன னென்பரால். (கரு)

ஆக்குங் கோயி லணியினை வாணிகர்
நோக்கிக் கொண்ட மகிழ்வி னுவல்வரால்
பாக்கி யம்மிங் கிவற்குப் பலித்தவா
வாக்கி னுலுரை வைக்கவுங் கூடுமோ. (கசு)

என்று கூறி யிவற்கிது செய்வதென்
றென்று பட்ட வுளத்த ருரைப்பரா
லின்று தொட்டுநீ யிங்ங னிறைவனுர்த்
துன்று மன்பினை யென்பது தோன்றவே. (கஎ)

---

* பதந்தரு சதுக்கம் - அன்ன சத்திரம்.

† நாரணன்பாற் பத்திமிகப்பெருக வயிரவன்பால் வழிபாடுதழுவினன்.

சிலையி னின்னுருச் செய்து வயிரவ
னிலைகொள் கோயிலின் முன்ன ருறநிறீஇ
யுலைவி லாதுற வோங்கு முருவதற்
கிலகு நல்லுப சார மியற்றியே. (கஅ)

பூதி சாந்தம் புனையு மலர்வினைக்
காதி யாக வளித்தபி னம்மவர்க்
கோது *பண்பினோ டெய்க்குது மிம்முறை
நீதி யாருக நின்வழி யோர்க்கெலாம். (கசு)

என்னச் சொற்றவவ் வின்சொ லிருசெவி
துன்னக் கேட்டுளந் தோன்று முவப்பினன்
வன்னச் செஞ்சடை வள்ள லருளிது
முன்னர்ப் பெற்ற முறைமையென் றோர்ந்தனன். (உ0)

ஞாளி யூர்தியை நாடு மகத்தினன்
மூளு நல்லுணர் முற்றிய சிந்தையா
ளுரு மன்னவ னாருரு ளாலரி
தாளி லன்பு தழைத்தன னுளுமே. (உக)

செய்யு மாதவஞ் செய்யிட னேடினன்
கையி லாழிய னுள்ளங் களிப்பதுந்
துய்ய முத்தியைத் துன்னினர்க் கீவது
மெய்யி னுகு மரியையை மேவினன். (உஉ)

நண்ணி யவ்வயி னற்கரு மத்தினற்
கண்ணன் றன்னைக் களிப்பினை னுக்குவா
னெண்ணிப் பற்பல வாவிதொட் டெம்பிரா
னண்ணுஞ் †சத்திய மாமலை நாடினன். (உங)

நாடும் பத்தியை நாளும் வளர்ப்பவ
னுடுஞ் சத்திய வாவித் திருப்பணி

---

* பண்பு என்றது பாடறிந்தொழுகலை, "பண்பெனப்படுவது பாடறிந் தொழுகல்" (கலித்தொகை.)

† திருமெய்யமலை.

பீடின் மண்டப மேயநன் மாமதி
லோடுஞ் செய்துறை யுத்தமற் போற்றினன். (உச)

போற்றி மீண்டு மரியை புகுந்தரி
தோற்ற நீக்குந் துணைமலர்த் தாள்களி
னூற்று மெண்ணெ யொழுக்கி னிடையறு
தாற்று மன்பினன் சத்துவத் தார்ந்தனன். (உரு)

ஈறில் கேசவ னின்பதத் திச்சையான்
மாறுந் தன்மைய தேவர்கள் வான்பதங்
கூறி வந்து கொடுப்பினுங் கொள்ளுதற்
கேறு சிந்தையி லானிவ னென்பவே. (உசு)

பாலின் வேலையின் பாலுறு *வேலையி
னேல வுற்று மறிவி னியைந்துளான்
சீல மேவும் பயன்கொளச் சேனுள
போலு மாயர்கள் பாடியிற் போவனே. (உஎ)

தேட லின்றி யெதிர்வன சீர்த்தநூற்
றேட மன்றெனச் சொல்லுவ வாமெனில்
வீட லின்றி †யசகர விர்த்தியிற்
கோடல் செய்குவன் கோதில் குணத்தினன். (உஅ)

தன்னை யொக்க வருளுந் தயாபர
னன்னரித் தெய்வ நாயக னெச்சமு
மென்னி னன்புடைத் தாக்குவெ னென்றவற்
குன்னி யொப்பின் மகவைந் துதவினன். (உகூ)

மாய னல்கிய மைந்தர்க ளைவரி
லேயு மூன்றுங் குமரற் கிராமனென்
றூய நாம மறைந்தன னன்னவன்
சேய திக்கிற் செலுமிசைச் சீரினன். (௩௦)

---

* வேலை - கரை.

† அசகரவிர்த்தி - மலைப்பாம்பு கிடந்துழிக்கிடந்து தன்பாலெய்து மிரைவுகளை வாய்க்கொள்வது; அதுபோலத் தானும் ஒருழியிருந்து தன்பால் எய்து முணவுகளை உண்டு சீவித்தல்.

காய மீதுறு கங்கை கலாநிதி
மேய மாதிர மெல்லிய லார்முகத்
தாய வின்னகை சேட *னரத்தினி
லேயு மிவ்விவன் மெய்ப்புக ழென்னவே. (௩௧)

மாத வன்றிருத் தாள்களின் மன்னிய
வோது பத்தியெ னூதியத் தானுளத்
தாத ரத்த வறிஞர்க் கரும்பொருள்
போத வுற்றது போன்மகிழ் வெய்துவான். (௩௨)

தேவர் யாரையுஞ் சிந்தையிற் கொள்ளல
ஞேவ லின்றி யரிபத முன்னுவான்
பாவ நாச பகீரதி விட்டயன்
மேவு மங்கண நீரெவர் வேண்டுப. (௩௩)

இனைய தன்மைய ஞகி யிருந்துழி
வனை†க விப்பர்கண் மாக்குலக் கோர்விளக்
கனைய குப்பா னெனும்பெய ராண்டகை
தனைய ஞகப் பிறந்து தழைத்தனன். (௩௪)

ஓது மன்னவ னெப்பின் றுயரிய
மாத வற்குப் பணிசெய்த மாண்பினுந்
தீதில் தேவ மடந்தையர் செங்கையிற்
கீத வீணைகள் பாடக் கிடப்பதால். (௩௫)

வேறு.

மூன்றும் வருணமிது வென்றுனு முன்னென்றே
யான்றோரு மேத்த வழகியவா ணப்பெயர்கொ
டோன்றுத தோன்றலந்தக் குப்பாற்கு முற்றேன்ற
வின்றுரோ டெல்லா விருநிலமும் பூத்தமகிழ். (௩௬)

தந்தை யொடுதாயுந் தமர்நண்பர் சோதராு
நந்தலிலா நற்பொருளு நாயகனுக் காப்பானுங்

* அரம் - பாதலம்.
† கவிப்பர் - வணிகர்.

சுந்தமல ரம்புயக்கட் கண்ணனே யென்றெண்ணுஞ்
சிந்தையினு னன்னே னடியார்க்குச் செய்பணியான். (௩௭)

தேனுவொடு கற்பகமுஞ் சிந்தா மணியுமம்ம
வான விவன்சீர்த்திக் காற்றுத நாமிந்த
வானே யுறைதறகு மென்றுலகின் வந்திலவேன்
மானவனல் லேற்றம் வகுத்துரைக்க வல்லுநர்யார். (௩௮)

எத்திக்கும் போற்றுபுக ழின்னே னடைந்தார்க்கு
முத்திக்கு வித்தா மரியையெனு மூதூரி
லத்திக்கு முன்வந் தளித்தா னடிபணிந்து
தித்திக்கு மானந்தத் தேனுண் டிருந்தனனுல். (௩௯)

மேதக்க வன்னேற்கு வேளின்மிகு செவ்வியின
னேதப் பெறுநடைய னேங்கமுத மென்மொழியன்
மாதக்கார் போற்று முருகப்பன் வந்துதித்துச்
சீதக் கலாமுகத்து மாதைமணஞ் செய்திருந்தான். (௪0)

மனைமக்க ளாமழலிற் பட்டுழலு வார்க்கிரங்கித்
தனையொப்பி லான்காக்கத் தந்தவந்த மாவிரசை*
நினையின்மிகு சேய்த்தணித்தாய் நின்றுபர வீடளிக்கு
மினையநகர்க் கோனேரி யென்றுபுதுப் பித்தனனுல். (௪௧)

விண்ணே யிடனுக மேவித் தினஞ்சரித்துந்
தண்ணார் மதியுமிவன் றந்த புகழ்த்தவளங்
கண்ணுர நோக்கிக் கரைந்துடல மாமதியா
லெண்ணு வகக்களங்க னுயினு னின்றளவும். (௪௨)

உண்மை துணையா வுறுபொருளீட் டித்தினமு
மெண்மெயற மேசெய்யு மிப்பர் குலமோலி
யொண்மை மணிகளென வுற்றனரின் னேற்கைவர்
†கண்மெய்த் திருமாலே யுள்ளுமனக் கற்பினரால். (௪௩)

---

* விரசை - பிரகிருதி மண்டலத்துக்கும் அப்பிராகிருத லோகத்திற்கும் இடையிலுள்ளதோர் யாறு.

† கண்மெய்த்திருமால் - கருதப்பட்ட மெய்ப்பொருளாகிய திருமால்.

ஆய புகழ்ச்செட்டி யப்பனிரா மன்சீர்மை
மேயமொழி மெய்யப்பன் சாத்தப்பன் சேவகனென்
றேயுமபி தானமிவர்க் கின்னேரி லேதுவிதன்
றாயமதி வண்மைமிக்கோன் தோன்றலிரா மன்மன்னே. (சச)

தீதி லனந்த னூருக்கொண்ட திருமலைபின்
மீது மணியாய் விளங்குதிரு மால்செய்ய
போதா ரடிக்கமலம் போற்றிப்பல் போகமெலாங்
கோதார்த லின்றியென்றுங் கொண்டுகளிப் பார்ந்தனனால். ()

போற்று பலவான் குடியென்னும் பொன்னகராம்
வேற்றாரின் மேயான் விரிஞ்சற் றருதாதை
பாற்றேறு மன்பர் சிகாமணிதன் பண்புதெரிந்
தேற்றமிகு மன்னு னிரும்பதிக்கோர் நாட்சென்றான். (சசு)

சென்றப் பதியிலுறை தெய்வமக யோகியைக்கண்
டொன்றப் படுமகத்தோ யோங்கு*சிங்க வத்திரியார்
மன்றக் கருணையென்பால் வைக்கவருள் செய்தியென
நின்றப் பெரியோனை நேர்ந்து பணிந்தனனால். (சஎ)

இவ்வண்ணம் போற்றுமுரை யேய்ந்த திருச்செவியா
னுய்வண்ண முண்டிங் குறு†காரி நாளுற்று
மைவண்ண மார்நிறத்து மாதவனைப் போற்றுகெனச்
செய்வண்ண நீங்ககிலேன் செப்பியவா றென்றுரைத்தான். ()

பலவான் குடியென் பதிக்கேகிப் பன்னாளும்
நிலவு மிடபமலை நீடு கதிர்மணியை
உலைவிறவத் தாசா னுரைவழியிற் போற்றியுள
மலைவின்றி யம்மா லடிக்கமல மெண்ணுவனால். (சகூ)

எண்ணல் சிறிது மிகவாமெனவ் வேதுவினே
வண்ண லடிநினையா தாங்கொருநாட் செல்லுநெறி
விண்ணை விழுங்கும் விரிதலைய பூதமொன்று
கண்ணி னுறநோக்கிக் கண்ணன் றனைநினைந்து. (ருo)

* சிம்மாத்திரியெனபது திருவேங்கடத்திற்கு ஒரு பெயர்.
† காரிவாரம் - சனிக்கிழமை.

வேதங்க ளேத்தும் விழுப்பொருளே யென்றனனு
லாதங்கந் தன்னன்பர்க் காதற் கிசையாமற்
பூதங்க டோறும் பொருந்து மவனருளாற்
பேதஞ்செய் பூதப் பிணக்கறுப்பா னயினன்.* (ருக)

சென்றிந்த வண்ணந் தினம்போற்றி ராமனங்ங
னென்றியசீர் யோகிநீ யுற்றவரி யைப்பதியே
நின்றரியை யேத்துகென நேரும் விடைகொண்டு
மன்ற வரியைநகர் வந்துபணி வானனன். (ருஉ)

நன்னெறிசே ரைவர்களி னுலாவான் சாத்தப்பன்
முன்னரிய பாண்டவரின் முன்னவன்போ லாரருளு
மென்னயமு மேவு மிவனுற் றிருமாது
தன்னொருநா தன்சீர்த்தி யோங்கித் தழைத்தன்றே. (ருங)

பத்திமிகு மின்னோன் றிருக்குலத்துப் பாம்பணைசேர்
முத்தி யளிக்கு முகுந்தனையே யெண்ணியன்பாற்
சித்த முருகி யுடல்புளகஞ் சேர்ந்துகளிப்
பொத்தார் பலருதித்தா ருய்யவுல கோரேழும். (ருச)

மரபுரைத்த சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் கரு௦.

---

* இப்பூதத்தைக் கொன்றவிடம் பேயின்பட்டி என இப்போது வழங்குகின்றது.

# ௩-சேவகச் சருக்கம்.

சோதரர்க ளவரெனச் சொற்றுரி லந்தத்திற்
சாதமுறு வோனுமஞ் சேவகனே சால்புடைத்தென்
றோதவுடை யானொளியா லாதித்த னெவ்வாதான்
சீதமதி போல்வதனச் செங்கமலக் கண்ணினான். (௧)

வள்ளலிவன் முற்பவத்தின் மன்னியசீர் யோகத்த
னுள்ளபரி சோரா னுலகத் தியல்பன்றே
பிள்ளைமையிற் காண்பவெலாம் பெற்றித்தாய்க் கொண்டாடத்
தெள்ளுபிறை யென்னச் சிறந்துவளர்ந் தேறினான். (௨)

இந்திரிய வெற்றிமிகு மின்னானும் பன்னாட்போய்
முந்தியசீ ரில்லறமே முன்னா மறமென்னும்
புந்தியினா னன்றகுலப் பொற்பின்மிகு கற்புடைய
செந்திருவை நேர்வாளைத் தேர்ந்துமணஞ் செய்திருந்தான். (௩)

கள்ளொழுகு மம்புயம்போல் கண்ணனடிக் கட்புகுதா
உள்ளொழுகு காட்சியின னுற்றபவம் பற்றலிலான்
கொள்ளுமிடை யின்றியகங் கொண்டசுக வெள்ளத்தா
னெள்ளுபுற வின்பங்க ளின்னவெனக் கண்டிலனால். (௪)

யோகத்தி னாரணனை யுன்னியசை வின்றியம
ராகத்த னந்நிலைமை யாய்தந்த புட்களெலா
மாகத்தா றேவந்து மன்னுமிட மென்றுறுமா
னாகத்தார் நாகங்க ணண்ணியிழி யுஞ்சிரத்தின். (௫)

மிக்கவொளி யால்விளங்கி மேவியபே ரின்பத்தி
லொக்கவிளை யாடல்செயு மோங்குதவத் தோங்கலுக்குத்
தொக்க*கர மார்த்தாண்டன் சோமன்கால் கொண்மூவாற்
புக்கவயர் வோடுகளிப் பொன்றேனும் போந்திலவால். (௬)

வேறு.

பின்னொரு பற்று மின்றித் தன்னையே பெட்பிற் பற்றி
மன்னுமோப் பின்றி யன்பின் மாவுருக் கொண்டு நாளு

---

* கர மார்த்தாண்டன் - கிரணங்களையுடைய சூரியன்.

முன்னிநேர் நோக்கு மன்னுன் யோகத்தின் மேம்பா டோர்ந்து
பொன்னையேய் மார்பின் மாயன் போந்தருள் செய்ய வெண்ணி. (எ)

இலக்குமி பூமின் போற்ற வினைபரி வாரஞ் சூழத்
தலத்தினி லடியார்த் தேடுந் தன்மைநன் குடைய வெம்மான்
கலைக்குலம் பிரம னுதி கடவுளர் காண்டற் கெட்டா
விலக்குடை யொருவ னேனு மின்னவன் முன்னர் நின்றான். (அ)

அண்ணலப் *பகுதிக் கெட்டா னணியொளி விரிக்க நிற்பான்
பண்ணுமேழ் பரித்தேர்ப் பானு கோடிமேற் பரந்த'வேனு
மெண்ணினே ரணுவு மொவ்வா விவனையங் ககத்தே யன்றிப்
புண்ணியம் புறத்துங் காணப் புரிந்ததெத் திறமென் பேமால். (கூ)

விழுமெழும் பணியும் பாடு மேற்கரங் கூப்பிக் கூப்பி
யழுமகங் கரையுஞ் சோரு மாடலும் புரியு மேகத்
தெழுதருஞ் சோதி நோக்கு மெளியனே யடியார்க் கென்னுந்
தொழுமவன் செயல தென்னே சொல்லிடை யமையற் பாற்றே. ()

கருணையி னிலைய மாய கமலைவாழ் நிறத்து மாயன்
பொருவரு மின்ப வெள்ளப் புணரிபுக் கோங்கு வானுக்
கிருளுறு பிறவிப் பௌவத் திழித்திடாப் பதத்தை யீவா
னருளுறு முளத்த னுகி யறைகுவா னரிய தென்னே. (கக)

திருமறை நான்கு மின்னந் தெள்ளிதி னறித றேற்றாக்
கருமுகி லென்ன நின்ற கடவுணீ கருதும் யோகத்
தருமுறை யொருவ ரேனு மாற்றிலர் மகிழ்ந்தே யைய
தருமுறை வேண்டிற் றெல்லாந் தக்கவா கேட்க வென்றான். (கஉ)

இன்னணம் புண்ட ரீகத் தெழிலுறு கண்ணன் கூற
மன்னவர் பின்னர் வந்த மாக்குல மணிய னுனு
மன்னமூர் பவனே முன்னு மவருல கழியும் வேட்ட
னன்னிலை யறிவு நின்ற னந்தவில் பதமு மென்றான். (கங)

அடியவர் வேண்டிற் றீயு மண்ணலெம் மமல மூர்த்தி
நெடியவன் கரிய கோல நிரஞ்சன னேமி யத்தன் ,

---

* பகுதி - பிரகிருதி.

வடிதுழாய் மொய்ம்ப னன்பன் வேண்டிய வரங்க ளீந்து
முடியுமே யளித்த தின்னான் முற்றிய தவத்திற் கென்னு. (கச)

பின்னர்த்தேர் தவத்தின் மிக்க பெருந்தகை யானை நோக்கி
நின்னைத்தந் தொப்பின் ருகி நிலவுமிக் குலத்து நேர்வோர்
பொன்னைப்பெற் றெழுக்கங் குன்றாப் புகழையும் பெற்றுப் போத
வென்னைப்பற் றுடையா ராகும் வரனையு மீந்தே னென்றான். (கரு)

இவ்வுரை கேட்ட வேந்த லிறைவனைப் புறத்துக் காணான்
கவ்விய வொளிய கோடி கதிரவ ரொருங்குற் றென்னத்
திவ்விய வுருவ மோடு திகழ்தருஞ் சோதி தன்னை
யவ்விய மவித்து நின்ற வகக்கணே யன்பிற் கண்டான். (கசு)

கண்டவன் பரம ஞானக் கட்டழல் கதுவு மாற்றால்
விண்டவன் மலங்கண் மூன்று மேம்படு தனுது கோயிற்
றெண்டருக் கருளு மாயன் றுணையபா துகைக ணுடித்
தண்டளிர் மலர்க டாங்கிச் சபரியைப் புரிவா னுளும். (கஎ)

பெற்றியி னொருவ ரொவ்வாப் பெருந்தகை நன்கே யாற்றி
யுற்றசீர் யோகப் பேற்று லுறுகணுற் றடைந்தார்க் கெல்லா
முற்றுறு மவாவின் வண்ண முன்னிய வனைத்து நல்கிச்
சொற்றிக ழரியை யென்னுந் தொன்னக ருறைவான் மன்னோ. (கஅ)

ஈங்கிவ்வா றிருந்து பூசை யியற்றுவான் வடாது திக்கி
னோங்குறு பள்ளத் தூரெ னப்புரிக் கோர்நா ளண்மத்
தீங்கொரு வடிவங் கொண்ட தென்னலா மென்னன் செட்டி
பாங்கிருந் திவன்மேற் றாமம் படச்சுருள் பருகி நின்றான். (கக)

சாந்தனுந் தன்மை மிக்க தாபத னவனை யொன்றுங்
காந்திய வுரைகள் கூறான் கண்ணனன் னுமங் கூறிப்
போந்தனன் கண்டு சூழ்ந்த பொறுமையிற் பலவாப் பேசி
யாந்திர மறியாய் போலு மறிவிப்பே னென்னச் சென்றான். (உ0)

சென்றுதன் னிருக்கை மேவிச் சிந்தனை சிறக்க வெண்ணி
நின்றுதன் னினைவின் வண்ண நிரப்புமா காளி தன்னை

யொன்றநல் லுரைக ளோதி யூங்கடை யுவனை யின்னே
கொன்றுநீ வருதி யென்னக் கூறியே தாழ்ந்தான் மன்னோ. (உக)

நோக்கிடி லெவரு மஞ்சு நோன்மைய னவனை யெல்லா
மாக்கிநின் றளித்துப் போக்கு மண்ணலுக் கடிமை பூண்ட
பாக்கிய முடையா னென்னும் பரிசறிந் திலளாய்த் தூர்த்தன்
போக்கிய வண்ண நல்லோன் பொருந்திட நேடிப் புக்காள். (உஉ)

மேவரு முதன்மை யேய்ந்த வேதராஞ் சகனே யாதி
தேவரு மறிய வொண்ணாத் திருமகள் கொழுநன் சீர்மை
யோவலின் றுலவி நிற்கு மன்பர்பா லுதனைத் தாழ்ந்தோ
ரேவல்கொள் சூலி யோரா னெனுமிது வியப்போ வம்மா. (உங)

தொகறரு மொளியே கொண்டு துலங்குமா லடியன் சூழ
லிகலொடு சென்ற காளி யியைதவ வங்கிக் காற்றாச்
சிகியடை கீடம் போலத் தெறலுறு மயர்வு கூடப்
பகலுறு விளக்க மென்னப் பரிபவப் பட்டா னன்றே. (உச)

அடைந்ததம் மடியர் குற்ற மாற்றினு மமையுந் தன்மை
தொடர்ந்ததுமேலோர்பாலிற் றுகளுறுந்தாழ்ந்தோர்க்குண்டோ
விடந்தெரிந் தென்னை யேவா னிவனெனச் சீறி யுள்ளங்
கிடந்ததன் னெண்ணம் பேசு கிற்குமா தொடங்கு கின்றாள். (உரு)

ஏடநீ மாற்றா னாற்றற் கேய்ந்தநன் முயற்சி செய்யும்
பாடவ முடையா யல்லை *பாவகன் பற்றுஞ் சூழ
னாடிய †பதங்கஞ் சென்று நச்சினென் னாற்றுந் தீயில்
வீடுறு தன்மை யார்க்கும் விளங்கிய கிடந்த தன்றே. (உசு)

ஊழியி னங்கி யொக்கு மொளியுநே ரொன்னார்க் குய்க்கு
மாழியா னிடத்து நீங்கா வன்புங்கொண் டமைவான் பக்கல்
சூழிய விருந்த வற்று நோக்கில் துணைக்க ணங்தோ
வாழிய வன்னோனேன் காந்தி வலித்திட வருந்தி னோனல். (உஎ)

---

* பாவகன் - அக்கினி.

† பதங்கம் - விட்டில்.

வல்லவன் செயலை யோரா மதியினை யென்ப தங்ஙன்
செல்லிய தெரிந்தேன் முன்னர்த் தேர்ந்தவை யாய்ந்தே னில்லை
சொல்லுநின் னுரையை மெய்யென் றுணிவினு லொருவற் றேடிக்
கொல்லுமா றுலைந்தே னந்தக் கொள்கைவீண் போவ தின்றால். ()

ஆதலான் மிக்க வன்பி னருமக வுடையா யானக்
காதலன் றன்னை யின்னே காலனூர் பதிக்குச் செல்லு
மேதமில் விருந்தே யாக வியற்றுவெ னென்று கூறிக்
கோதற வரத்தங் கக்க முறித்தனள் குமரன் றன்னை. (உகூ)

புரிந்தன நோக்கி யென்னைப் புரந்ததித் தெய்வ நன்றே
*அரிந்தம னன்பர்க் காக்கு மதுவன்றோ வழகி தன்னற்
றெரிந்துறு மடியர் தாமுஞ் செம்மையே சேர்வ ரென்னுப்
பரிந்தனன் மகனை யேந்திச் சேவகன் பக்கல் புக்கான். (௩௦)

மைந்தனை யேந்தி வந்து மலரடித் தலத்தில் வீழா
வெந்தையே காக்க வென்னு மிவனையு மருளி னேக்கி
யிந்திரை கொழுநன் றூச னிடரிலை தோன்றற் கென்று
பைந்துழாய்த் தீர்த்தங் கொண்டு படிவமீத் தெளித்தான் மன்னே.

கருவடி வடையா யோகர் கருத்தினி லிருத்தி நாளும்
வருவடி வடையா வேட்கை வரத்தொழுங் கமலக் கண்ணன்
திருவடி விளக்கி யுள்ள தீர்த்தமீந் துளவப் போழ்தே
பெருவடி வடைந்து மைந்தன் முன்னையிற் பிறங்கி னனல் (௩௨)

மாதங்கிக் கடிமை பூண்ட வாணிக மென்ன னென்பா
னுதங்க மவளிற் போந்த தகன்றதற் குவந்து கஞ்ச
மாதங்கு நிறத்து மாயன் றொழும்பரே வாழ்வ ரென்னுப்
பாதங்கை கூப்பி மேலோன் பணித்துள விடையிற் சென்றான்.(௩௩)

ஈங்கிது நிகழும் வேலை யெழில்கொள்வை குந்த நாதன்
றேங்கம ழருவிச் சாரற் திருமலை மீது போந்தே
யோங்கிய வடியார்க் காக்கு முண்மையை யுணர்ந்தோர் மாணி
யாங்குதன் மணத்தை முற்று மவாக்கொடு பண்ணுட் போற்ற. (௩௪)

---

* அரிந்தமன் - இறைவன்.

பின்பொரு தினத்திற் சேடப் பிறங்கலிற் பிறங்கும் பெம்மான்
மன்பதை வேண்டிற் றீயும் வள்ளறு னல்ல தில்லை
யென்பதைத் தெரிக்க வெண்ணி வேட்டன்மீ திச்சை வைத்த
வன்புறு மந்த ணாளன் கனவடைந் தறைந்தா னின்ன. (௩௫)

ஆரியன் கும்ப யோனி யமர்தரு *மவாசித் திக்கிற்
சீரிய வரியை யென்னுந் தென்றிருப் பதியி லெம்மைக்
கூரிய புரிவிற் போற்றுங் கொள்கையே தவத்தின் மிக்க
காரிய மென்று காணுங் கலைவலா னொருவ னுள்ளான். (௩௬)

மறையறி யந்த ணாள வள்ளன்மை யுடைய வந்த
விறையிட நேடிச் செல்லி னெண்ணிய வனைத்து நல்குங்
குறையிலை யாமு மின்ன கூறுவாங் கனவி லன்னாற்
கிறையுநீ யைய மெய்தா தெய்துக விரைவி னென்றான். (௩௭)

மாதவ னுரையா லுள்ள மகிழ்தொழு குலத்து வந்தோன்
பாதவ வனங்க ளூடு பற்பல விரைந்து நீங்கிச்
சீதர னுவந்து மேவச் சேவகப் பெரியோன் மேய
வோதரு மரியை யென்னு மொருநக ரடைந்தான் மன்னோ. (௩௮)

அடிகடன் கனவிற் றோன்றி யறைந்ததற் கிலக்கா ரென்னச்
செடியவிப் பிறவி நீக்குஞ் சேவக யோகி நோக்கிக்
கடிகொள்கீழ்த் திசையு திக்குங் கதிரவ னுதீசி† தோன்றிப்
படியுற வருவான் போலும் பண்ணவன் வரவு பார்த்தான். (௩௯)

முன்பரின் முன்ப னாகு மூதறி வுடைய மேலோ
யன்பர்பா லன்பர்க் கென்று மன்பனே யடிக டம்மை
யென்பெருந் தவத்தா னேர்ந்த வின்றன்றோ வெடுத்த தோற்ற
மின்புறு பலத்த தாகி யிசைந்துள தென்னத் தாழ்ந்தான். (௪0)

இடியுறு கொடிய னாதி யாவரு மினிது தங்கண்
முடியுறக் கொண்டு போற்று முண்டக மிரண்டே யன்ன
வடிகளின் பாத தூளி யடைதலா லெளிய னான
வடியனேன் முடியு மிக்க வணிமுடி யாயிற் றைய. (௪௧)

* அவாசித்திக்கு - தென்றிசை. † உதீசி - வடக்கு.

அந்தண் ரேறே மாயோ னருளினா னீவிர் கொண்ட
சிந்தனை முற்று மென்னாத் திருவினிற் குபேர னேனு
மிந்தமா மறையோர்க் கொவ்வா னென்றுல கேத்தச் செய்தான்
செந்திரு நாத னன்பர்க் கீதொரு பெரிதோ தேரின். (சஉ)

மங்கையா ளொருத்தி யோர்நாண் மனத்தழுக் காறு மேயாள்
செங்கையோ னான விந்தச் சேவகற் பிழைத்தா ளாகத்
தங்கிய சூல ளீனுந் தருணத்து மீன்றா ளில்லை
யிங்கிதென் விந்தை யென்னா யாவரும் வியப்புற் றாரால். (சங)

வயாவுறு திங்கள் போயும் வயிறுவாய்த் திலளா லிங்ஙன்
னயாவுறற் கேது வென்னென் றகத்தினி லறித றேற்றாஞ்
செயாவுறு கருமஞ் செய்யச் சீறிற்றோ தெய்வ மல்லாற்
றயாவுடை மாலி னன்பர் தம்மிடம் பிழைத்தாள் கொல்லோ. (சச)

கருவுயிர் மதியந் தன்னிற் காகுத்தற் கடிமை பூண்ட
திருவுயர் மதிய னான சேவகற் றாறி நின்றா
டருகிக ரன்னாற் போற்றுந் தன்மையே யுபாய மிந்தப்
பருவர னீங்கற் கென்னாப் பண்புடைக் கிளைஞர் தேர்ந்தார். (சரு)

பெண்ணைநீ சேறி யந்தப் பெரியவன் பதத்தே யென்ன
வண்ணின ளடிகள் போற்றி யவன்செயு மருளால் யார்க்கு
நண்ணரு மகவை நல்கி நவையில ளாகி வாழ்ந்தா
ளெண்ணுமேலோர்ப்பிழைத்தல் பொறுக்கவென் றிரப்பினுண்டே ()

விண்டுவி னருள்கைக் கொண்ட மேன்மைசேர் யோகி தன்னை
யண்டின ரெண்ணு மாறே யவருளம் வியப்பப் பொன்பூ
கொண்டனேர் கூந்தன் மாதர் குமரர்நோ யின்மை யாதி
தண்டலின் றளிப்பா னாளுந் தனைநிக ரில்லாச் சான்றோன். (சஎ)

மாயனார்க் கன்பி னாட்டு மஞ்சன தீர்த்தங் கொண்டே
யாயபன் னோய்க டீர்க்கு மற்புத மொன்றோ கூறின்
பாயவெவ் விடத்த தாய பாந்தள்வாய்ப் பட்டோ மென்பார்க்
கேயவென் னாமஞ் சொன்மி னென்றுரை யாடிப் போக்கும். (சஅ)

இன்றுமம் மாலிற் கன்ப னிசைவழி வந்தோர் யாருந்
துன்றிய பிணிக டம்மைச் சூழினோர் மருந்து முண்ணார்
மன்றலங் கமல மேய மாதுசேர் மருமக் கொண்ட
றன்றிரு வடியிற் றீர்த்தந் தனையுண்டே யரோக ராவார். (௯௯)

வேங்கட வாணற் கன்பு மேவினார் கருணை யுண்டேன்
மூங்கையும் பேசுஞ் செல்லு முடவனு மில்லா ருள்ளா
ராங்குறு மலடு மீனு மறிவிலான் புலவ னாவா
னோங்கிவர் நீர்மைக் கம்ம வும்பருஞ் சிறிது மொவ்வார். (௱0)

சேவகச் சருக்க முற்றிற்று

ஆகச் செய்யுள் ௨௦௦.

## ௪-தாசர் பிறப்புரைத்த சருக்கம்.

திண்ணிய பத்திமைச் சேவ கப்பிரா
னெண்ணிய சோதர விராம னென்றிவர்
நண்ணுதஞ் சுற்றத்தை நாடி நல்வழிப்
பண்ணிய சிலவுரை பகர்தன் மேயினார். (௧)

மன்னிய மாலலான் மற்றைத் தேவர்க
டுன்னிய கருமங்க டுய்க்கத் தோன்றுவ
ரின்னவர் தருபல னெளிதிற் போமென
முன்னிய மறையினர் மொழிவ ருண்மையால். (௨)

பந்தமாம் வினைதெறப் பட்ட மாக்களைச்
செந்திரு நாதனே திருத்தி யாள்பவ
னந்தலில் பதமவ னல்கு கின்றதே
யிந்தநல் லுரையொருங் கியம்பு மோத்தெலாம். (௩)

தாங்கிய வொளியுடைத் தபன னென்றெண
வீங்குமப் பிரதிவிம் பங்கள் கோடியும்
வாங்கலை சூழ்தரு *வசுதை முற்றுபு
தூங்கிய விருளினைத் துரக்க வல்லவோ. (௪)

* வசுதை - பூமி.

காயமீச் சரிப்பது கலந்த வாயினும்
வாயசம் விநதையின் வயிற்று மாதவத்
தாயவ னசலமும் வேகத் தாற்றலாத்
தூயவ னுடுகணந் தொடர வல்லவோ. (ரு)

மதிதெரு ளில்லவர் *வனமென் றெண்ணிட
வெதிர்தரு கானலங் கதர்சென் றெய்த்தவர்
முதிர்தரு தாபமு மிளைப்பு முற்றற
வுதிர்தரச் செய்யுமென் றுன்ன லொல்லுமோ. (சு)

ஆதலி னீவிரு மந்த வானவர்
மீதமர் நண்பினை விடுத்து மாமறை
யோதுசெந் தாமரை நயனத் துத்தமன்
பாதமே துணையெனப் பற்றி யுய்ம்மினே. (எ)

என்றிவர் சொற்றன விகத்தி லன்றியே
துன்றிய பரத்தினுஞ் சுகத்தை யேதரும்
வென்றிகொ ளுரைமிக விழுமி தென்றவ
ரொன்றின ரிறைவன்பா லோங்கு பத்திமை. (அ)

மற்றைய தெய்வங்கண் மனத்தி லெண்ணிலார்
கற்றவர் புகழுறு கப்ப னற்றவத்
துற்றவ ரைவரு மோங்கு சுற்றமும்
பெற்றனர் மாதவன் பிழைப்பில் பேரருள். (கூ)

மொய்வரு மொளிமணி முற்று சோதியான்
மைவரு மிருள்பொதி வழக்கம் நீங்கிடக்
கைவரு தொழினலங் காட்டு மாறவ
ணைவருங் கோயில்வீ டைந்து கட்டினர். (கo)

வேங்கட மாலிட மிருத்த வன்பரா
யாங்கவன் பாதுகை யமைத்துக் கோயிலி
னீங்கிய பொழுதொடு நிமிருங் காலையு
மோங்கிய பூசனை யுஞற்றி னாரரோ. (கக)

---

* வனம் – நீர்.

இத்தகைப் பூசனை யியற்று வாரிலோர்
சத்துவ குணத்தசாத் தப்ப வள்ளலும்
வித்தகன் பாதுகை மேய கோயில்வாய்
நித்தமும் விளக்கமா னெய்யி லிட்டனன். (கஉ)

அன்னவன் றெண்டறிந் தகிவெற் பண்ணலு
நன்னல மைந்தரோர் நால்வர்த் தந்தனன்
பின்னருங் கிருட்டினப் பெயர்கொண் மைந்தனைப்
பன்னரும் புகழ்கொளப் பணித்திட் டானரோ. (கங)

தந்தவக் கிருட்டினன் றன்ம னத்தினை
வந்தவள் குலத்துளாள் வாய்மை யின்னுரை
சுந்தரங் குணநலந் தொக்க தோகையை
மந்திர முறைவழி மணந்து வாழ்ந்தனன். (கச)

இப்பரின் குலவிளக் கென்னுங் கண்ணனுக்
கொப்பறு சாயைபோ லுடங்கு வைகிய
மைப்படு கண்ணினாள் வயிற்று மூவராந்
திப்பிய குமரர்கள் சிறப்பத் தோன்றினார். (கரு)

தனையர்கண் மூவரைத் தந்த பின்னரு
மினையவண் முற்பவத் தியற்று நோன்பினா
னினையுமா லடியரின் கூட்ட நேர்ந்தவர்ப்
புனையுமா வொளியுடைக் கருப்பம் பூண்டனள். (கசா)

கடுநிக ரிருளையுங் கழித்து மீப்பட
ருடுபதி யெண்ணில வுதித்திட் டாலென
வடிவொளிர் கின்றவம் மாதை நோக்குபு
படுபொரு ளுணர்ந்துளார் பரிவு கூர்ந்தனர். (கஎ)

சாற்றிய குணத்தொடு சாரு மாப்புகழ்
தோற்றுறு மிடனெனத் துலங்க மாயவற்
போற்றுநல் லறிவுடைப் புதல்வற் பேற்றையே
யாற்றுவ ணங்கையென் றறிஞ ரோதினார். (கஅ)

வெள்ளிய வொளிவிடு மங்கை மேனியு
முள்ளுறை மைந்தனுக் குற்ற சத்துவ
வெள்ளருங் குணநிறைந் திவர்ந்தி யாங்கணுங்
கொள்ளைகொண் டதுவெனக் கூறி னைக்குமால். (கக)

மாயவன் றனைமன மலரின் மன்னிட
மேயவன் சுகம்பிற விரும்ப லற்றவ
னேயுமப் புதல்வனை யொப்ப வெண்ணல்போ
லாயுநல் லுணவெலாம் வெறுக்கு மங்கனம். (உ௦)

அணங்கவ ளகட்டிடை யமரு மைந்தனிக்
குணங்கொடி தெனத்தளக் குலைந்து தாமத
மிணங்கவுள் ளிடனிலா தெட்டிப் பார்த்தல்போற்
சுணங்கமர் முலைமுகங் கறுத்துத் தோன்றிற்றால். (உக)

தன்வயிற் றிடைவரு தனய னின்னணம்
பொன்மணி யாதியி லுள்ளம் போக்கில
னென்னுமத் தன்மைமா தெடுத்து ரைத்தல்போன்
மின்னிய வணிகளின் விருப்ப நீத்தனள். (உஉ)

இட்டிடை பெருத்ததா லென்றுந் தன்னிடைக்
கிட்டிய *வயினலங் கிளரு மைந்தற்பெற்
றெட்டருஞ் சீர்த்திமிக் கெய்து கின்றதென்
றெட்டிய மகிழ்விற்பூ ரித்த தொப்பது. (உ௩)

பன்னுமாப் †பகடியிற் பரந்த பூவிது
வென்னுமவ் வறிவினு லியங்க லின்பில
னென்னகட் டுறைபவ னென்று தேற்றல்போன்
மன்னுமா தடிமிக வருந்திப் பேர்க்குமால். (உச)

நங்கையின் னணங்கரு வளர்க்கு நாளிடைப்
பொங்குவண் டினமதுப் புதிதுண் டாடவும்
புங்கவர் மகமிகப் பொலிவி னோங்கவுந்
தங்கிய வசந்தமா மிருதுச் சார்ந்ததால். (உரு)

* வயின் - வயிறு.
† பகடி - பிரகிருதி.

* எண்ணுமேழ் பத்துமூன் றிரியை யாயிர
நண்ணுமாண் டெங்கலி நற்ச யித்திர
வொண்ணுநா †ளாயிலி லொப்பின் மைந்தனைக்
கண்ணனின் மனைபுவி களிப்ப வீன்றனள். (உகூ)

நன்னிலை நாள்வர நங்கை பால்வரு
மின்னியன் மைந்தன்றன் னிசையி னெம்முகம்
மன்னிய தேசுடைத் தாக வைப்பனென்
றுன்னிய மகிழ்வினே வொளிர்ந்த திக்கெலாம். (உஎ)

அப்பொழு தகத்திய வசலம் விட்டிழீஇ
யொப்பறு மாயனுக் கொருவ னன்பினென்
றிப்பெரும் புதல்வனைக் காண்டற் கெய்தல்போற்
றிப்பிய விரைகொடு தென்றல் சேர்ந்ததால். (உஅ)

ஆதிய மறைபுக லந்த ணாளரா
லோதிய மகம்பல வுஞற்று விப்பனிப்
போதக மதியுடைப் புதல்வ னென்றெணி
வேதியர் ‡வேதியின் §முளரி விம்மி ற்றால். (உகூ)

இளப்பருங் கொடையுடைக் கிருட்டி னப்பெயர்
வளப்பெரு நாய்கரின் மனைவி மைந்தனை
யிளப்பற வீன்றன ளென்று சொற்றனர்க்
களப்பரும் பரிசிலீந் தகம கிழ்ந்தனன். (௩௰)

மைந்தனைப் பெற்றவம் மகிழ்வி னன்மறை
யந்தணர் முதலினோர்க் கணிபொ னுடைபூ
பந்திகொள் சுரபிகள் பரிந்த வுள்ளத்தோ
டந்திலீந் தோங்கின னறிஞ ரேறனன். (௩க)

தானமர் தவத்தினூற் றனயன் றோன்றுநாண்
மானவ னிலக்குவன் வந்து தித்தநா

---

* எழுபத்து மூன்று இரிந்த ஐயாயிரம் - நாலாயிரத்துத் தொள்ளா யிரத் திருபத்தேழு.
† ஆயில் - ஆயிலியம்.
‡வேதி - யாககுண்டம். §முளரி - அக்கினி.

ளானதா லொப்பனென் றாசை கொண்டிரா
மானுச னெனும்பெயர் வைத்த ழைத்தனன். (௩௨)

தினந்தொறும் வளர்தரு செல்வச் செம்மலா
ரினம்பெறு மழலையி னினிய சொற்களான்
முனம்புவி யுணுமரி முராரி யாதியாய்க்
கனம்பொரு மேனியா னாமங் கற்றனர். (௩௩)

இப்புவி வருமகா ரிற்றை நாள்வரை
யப்பவென் றம்மவென் றழைத்த லேவழக்
கிப்பெரு மகவுரை யெண்ணின் மாவியப்
பொப்பதொன் றிலையென வுள்ள மோங்கினார். (௩௪)

மூன்றுநான் காண்டுற முற்று மைந்தரோ
டேன்றுறு மாடலி னெய்தி யெந்தைமால்
போன்றமைத் துளவுருப் போற்றிப் பூவெறி
சான்றசாந் திவைதினஞ் சார்த்தி யாடுவார். (௩௫)

குழூத்தரு புலவர்பாக் கொண்டு நாடொறும்
வழுத்தமாப் புகழ்பெறு தந்தை மைந்தரை
விழுத்தவத் தகத்தியன் றந்த மெய்த்தமி
ழெழுத்தறி வித்தன னாண்டைந் தேயுநாள். (௩௬)

இத்தகை மைந்தனார் கற்க வெண்ணல்போ
லுத்தம மிலைநமக் கென்ன வுன்னி நீர்
தத்தலை நதிபல கடலிற் சார்ந்தென
வித்தைக ளிவர்வயின் விரைந்து மேவின. (௩௭)

கற்றுயர் வடைந்தவக் கண்ணன் மைந்தனா
ருற்றதங் குலத்தினுக் கொத்த நன்னடை
பெற்றனர் புலன்களை யடக்கும் பெற்றியா
லிற்றிவர் நிலையென யாரு மோர்ந்திலார். (௩௮)

மனையற னடைந்துதன் மைந்தர் மாதொடு
வினையரி யுவப்பன விருப்பிற் செய்கெனும்

நினைவினுன் குலனொடு குணனு நேருமா
தினைமணம் பொருத்தினன் ருதை சீர்பெற. (ங௯)

மனையறன் விதித்தவா புரியு மாண்புடை
யினையவர் தாமரைக் கண்ணி னெம்பிரான்
புனைமல ரடியிணை பூக்கொண் டேத்திபு
மனனுறக் கொண்டுமா மகிழ்வி னெய்வரால். (௪0)

இரண்டெனுங் குறியினு லியைந்து தாதுவேழ்
திரண்டுமும் மலமுறச் செறிந்த பாண்டமே
யரண்டரு மங்கைய ரங்க மென்றுளந்
தெருண்டன ரிருடிகே சனையுள் சிந்தையார். (௪௧)

அழிவிலா மோக்கமே யவாவி யச்சுதன்
கழலலா தொன்றையுங் கருத்திற் காண்கிலார்
இழிவன விடையமீ திச்சை வைத்துல
கொழிவதென் மதியென வுள்ளத் துள்ளுவார். (௪௨)

மாயவன் பதமலர் மலர்கொண் டர்ச்சனை
யோய்விலா துளுற்றுதற் கூறுூர் நாள்வரி
லாயவந் நாளையே யன்ப ருண்டிலா
தேயுநா ளெனநினைந் தினைந்து விம்முவார். (௪௩)

அன்னவர் நாரணற் கன்பர்க் காணுறி
னென்னமா தவமிதென் றெதிர்கொ டேத்துவார்
மன்னுமன் பிலார்களை நோக்கில் வாளரா
வன்னிபற் றினரென வருந்து வார்மனம். (௪௪)

இல்வழி யிழிந்தெலா மென்று முள்ளதென்
றல்லலி லுழலுமிவ் வறிவி லாதர்கள்
புல்லொடு தாருமாப் புள்ளை நேர்வரா
னல்வழி யடைதலெஞ் ஞான்றென் றுன்னுவார். (௪௫)

மாதர்பொன் மண்ணிடை வந்து போதன்மெய்
யீதறி விலாதவர்க் கின்பம் போலுமால்

ஓதரும் பவக்கடல் கடக்க வுன்னலே
மேதகு செயலென விரும்பி னாரரோ. (சசு)

வித்தக ராயினு மணைக்கண் மேவுவார்
முத்தியிற் செலலரி தென்று முன்னிமா
வுத்தமர் மணை துறந் துவந்து சென்றனர்
தத்துறு தழலினின் றேறுந் தன்மைபோல். (சஎ)

ஆதியி லரியையி லமரு மச்சுதச்
சோதியை யடியிணை தொழுது தொன்மறை
யோதுமக் தணர்மக மொழிவின் றேம்பிடு
மாதவன் கோட்டியூர் மருவி னாரரோ. (சஅ)

ஆவயிற் றாமரைக் கண்ணு மாழியுங்
கோவியல் சங்கமுங் கொண்*டென் றாயிர
மேவிய வொளியினும் விளங்கு நாரணன்
றேவிய ருடனமர் சிறப்பை நோக்கினர். (சகூ)

நாடொறு நாரண னறிய தாமரைத்
தாடொழு தெழுந்துளந் தழைப்ப ரன்பினு
லீடொரு வருந்தமக் கில்லை யாயினர்
சேடனென் றறிந்தபின் செய்வ தென்னையே. (ருo)

தாசர் பிறப்புரைத்த சருக்க முற்றிற்று.
ஆகச் செய்யுள் உருo.

## ரு-சமயந்தெருண்ட சருக்கம்.

வண்டுவீழ் துளபத் தொங்கன் மாதவன் மதத்தே யன்பு
கொண்டன ராயும் ராமா நுசர்மறை குறித்துக் கொள்ளா
வெண்டரு சமய சாலத் தியல்புக ளறியப் புக்கார்
தொண்டருண் மழிசை மன்போற் றுலங்கறி வுடைய தூயார். (க)

புக்கறி வுற்ற மேலோர் பொன்னவன் சமய மாதி
தொக்கபன் மதமு மவ்வப்† புலத்துறை தொகுத்த வாறு

* என்று – சூரியன். † புலம் - நூல்.

தக்கவ ராய்ந்து மற்றச் சமயங்க ளெறிய லாமை
மிக்கனர் தேர்ந்த வண்ண மொருசில விளம்ப லுற்றேன். (உ)

அக்குரு மதத்திற் றேட மகன்றுள காட்சி யொன்றே
முக்கிய மாகி நிற்கும் பிரமாண மொழிபி னேடு
தொக்கனு மான மின்ன சொலிற்பிர மாண மாகத்
தக்கன வில்லை யென்னுந் தன்மைய துடைய தம்மா. (௩)

பேசிய காட்சி யொன்றே பிரமாணங் களிலை யென்று
மாசில தாகி நிற்கு மாற்றல்கொண் டிருத்த னேக்கித்
தேசுள வியாழப் புத்தே டேர்ந்துமற் றிரண்டு மொத்த
மாசுடைத் தென்று விட்டார் மதியுளார்க் கரிய தென்னே. (௪)

காமமொ டிராச நீதி களவினுற் கொத்த தாகி
யாமனு மான மாதி யாலறி விடய மின்றிப்
பூமரு மாந்த ருள்ளப் போக்கினுக் கியைவ தானு
மேமுறு கின்ற லோகா யதத்தினு மினிய தின்றால். (௫)

வேறு.

தேடும் பொருளை யழிப்பதுவாய்த் தினமு முடலை வருத்துவதாய்
நாடின் மிகவு மற்பமதாய் நண்ணுங் குமதி யுடையார்க
வீடின் றிதனுக் கெனத்தங்க ளுதர நிறைக்க வெணிச்செய்த
தோடந் துறுத்த பிறமதங்கள் சுகத்தை விரும்பு மவர்தொடரார்.()

எண்ணும் பற்ப லவையவத்தா லியைபு மிந்த வுடலன்றி
நண்ணும் பிறப்பு மிறப்புமுற நாடு மான்மா விலனதனு
லொண்ணும் பாவ புண்ணியமென் றேதா நின்ற தொன்றுமிலை
விண்ணிற் பகட்டின் மிசையிவர்ந்து மேவும் யமனும் பயமுமிலை. (எ)

குமுதந் தளவங் கழுநீருங் கொண்ட கமல முகமடவா
ரமுத விதழுண் டங்கவரை யன்பிற் றுய்த்த லகத்துவிரை
திமிர்தல் களித்த லிஃதன்றிச் செப்பிற் சுவர்க்க மொன்றிலைநூ
*லிமிழ நசன நோன்பெடுத்த லென்னே பலன்மற் றிலையவமே. (அ)

---

* இமிழ்அநசன நோன்பு -நூல்கள்முழக்கும் உண்ணுநோன்பு.

வேறு.

பாலியத்தைக் கமருகுத்த பயநிகர வாக்காமே
வாலநிகர் விழிமடவா ரல்குலெனுந் தடத்தாடிக்
கோலமுலைக் குவடணைந்து கொவ்வையிதழ்த் தேன்கொண்டு
சாலமதன் பூசைபுரி தவமன்றோ பெறும்பேறு. (கூ)

வேறு

ஓதிற் பெருத்தே னுஞ்சிறுத்தே னென்ன வுணரு முணர்விதனு
லேத மில்லாத் திறன்ஞானி யான தன்மை யிவ்வுடற்கே
போத வுடைய தல்லாது பொருந்து முடலை விடவுடலிற்
றீதி லறிவை யுடைத்தாய வான்மா வொன்று சேர்ந்திலதால். (க0)

என்ற னுடம்பீ தெனுஞான மெய்து கின்ற படியாலிங்
கொன்றும் பேத முண்டென்ன வொண்ணு தென்றே யுரைத்திடுவோம்
மன்றச் சுகித்த தெனதான்மா வென்னு மிடத்து வருபொருள்போ
னின்ற விவனும் பொருள்கொள்ள னீர்மையென்ன நினைதறகும். ()

வைய மப்பு முளரிவளி வாய்ந்த நான்கே தத்துவங்கள்
செய்ய விவைக டம்மியல்பாற் சேர்ந்த வாயி னறிவுடைய
மெய்ய தாகுங் கரியிதற்கு வேறுன் றுரைக்க வேண்டுவதோ
மொய்ய தாய சுவேதசங்கண் முன்னிற் சான்றாய் முற்றிடுமால்.(கஉ)

குருவாற் செய்த விம்மதத்திற் கூறின் மோக்க முடல்விடுதல்
பொருவி லின்ப மாதரொடு புணர்தல் கலவிச் சுகமளிக்கும்
பருவ முடைய மங்கையரே பற்ப றெய்வ மினமாகுந்
திருவி னிறைந்த விச்சமய மறைக்கு மொப்பச் சிறந்துளதால்.(கங)

வேறு.

இத்தகைய பொன்னன்மத மின்பமளி யாதாற்
சத்தமனு மானமிவை தக்கபிர மாணத்
தொத்தவைக ளென்றறிஞர்க் கொப்புவ துரித்தே
நித்தமிரண் டானுமுற நேர்தல்பல காண்டும். (கச)

உண்டுபசி தீருமென வுண்பருல காய்த
ரண்டினர்கள் போந்தநல மாங்குசில வோதக்
கொண்டுறுதி யென்றுமகிழ் கூர்ந்ததனை யெண்ணித்
தண்டுதலி லாதுபல தானமும ளிப்பார். (கரு)

மருந்துபிணி மந்திரமெய் மன்னுவிட நீக்குந்
திருந்துசகு னந்தருவ தீமைநல நூலின்
வருந்திறமி துண்மைவிழி மன்னவெதிர் காணு
திருந்துறுமொர் தெய்வமென வெண்ணவிசை வாமால். (கசு)

ஏலவுல கிசனிலை யேனுநமர்க் கெல்லாஞ்
சாலவுல காய்தருரை தந்தசுக முண்டான்
மூலமுள தேவுலகு முற்றிலவர் கெட்டார்
போலுமிகு நூலுரைகள் போற்றல்வழக் காமால். (கள)

காமமுறை நூல்பொருள்சொ னூல்களவி னூல்கள்
சேமமனை யோடணைதல் சேரவற மீட்ட
லூமமுற வஞ்சர்பொரு ணல்லரசர் வெளவற்
காமெனவு ரைக்குமதி லுலவைது ணிந்தாம். (கஅ)

வேதமுறை சந்திமுதன் மேன்மையுறு கன்ம
மாதரவி னூற்புரித லாவசிக மாமால்
வேதனைபொ ருட்செலவு மேவுமென நீக்கி
லோதுபெரி யோர்நெறியை யொத்தநெறி யன்றால். (கக)

வேறு.

வித்தக மடைந்து * கர்த்தா மேவணு போக்தா வாகி
நித்தனு மாகி யொன்று மவயவ னேரா னுகிச்
சுத்தமாம் † பிரத்தி யக்காய்ச் சுயஞ்சோதி யாகி ‡ யங்கி
யொத்தன னங்கத் தென்று முவன்வேறே யென்னு நூல்கள். (உ0)

வேறு.

விண்ணுல கவாவினல வேள்விபல செய்யென்
றெண்ணின்மறை கூறுதலி னேய்ந்தபல நோன்பு
நண்ணுதலும் வேண்டுமெதிர் நாடலில வேனு
மொண்ணுமுல கங்கள்பல வுண்டெனலும் வேண்டும். (உக)

---

* கர்த்தாவாகி அணுவாகிப் போக்தாவாகி யென்க. † பிரத்தியக்கு—தானே தன்னையறிவது.

‡ அங்கி—அங்கத்தையுடையவனாகிய ஆன்மா.

என்னதென லாய்விழிமு னெய்திவிழி யின்றேல்
மன்னுதலி லாதுசட மாய்வளர்வு தேய்வாய்ச்
சொன்னநிலை யாமையிவை துன்னியவிம் மெய்தா
முன்னரிய நித்தியம துற்றவுயி ராகா. (உஉ)

எனக்குளது நோயுடலி லென்னவறி வோனுய்
நினைக்கி *லொரு தன்மையினை நேர்ந்துமொரு தானு
யனைத்துமறி யோகினிடை யன்றியறி யானுய்
நுனிக்குமுயிர் வேறதனி னெய்யவுடல் வேறல். (உங)

கூறுமனல் வெந்த†வய கோளமெரி யென்றே
நாறுதனி கர்ப்பவுயிர் நன்குமரு வுற்று
வேறறித லின்றியெழின் மிக்கவுட றன்னை
யூறிலுயி ரென்னவிவ ணேதவுறு மன்றே. (உச)

தோய்ந்ததென தின்னுயிர்சு கந்தனையெ னுங்கால்
வாய்ந்துளவவ் வான்மவுரை மன்னுதனை யோது
மேய்ந்தவுட லென்னதெனின் யானுடலென் றுகா
வேய்ந்த‡கிரு காதிகளின் வேறெனலை யொக்கும். (உரு)

பூதமவை யைந்தினொடு போதவுள தத்வம்
வேதமுத னூலுரை விளக்குவன கொண்டே
ஞாதமுறு கின்றபொரு ணட்டமெதி ராதா
லாதலினஃ தில்லையென வாயுமதி யொவ்வா. (உசு)

மல்லலுறு தத்துவமோர் நாலுமரு வுற்றுப்
புல்லுதலி னுலறிவு பூணுமுட லென்னச்
சொல்லுவது மிக்கறிவு தொக்கவர்மெய் வாதத்
தில்லையென நீங்குமெதிர் நிற்கும்வலி யின்றி. (உஎ)

பந்தமுறு சீவனவை பற்றலொரு வித்தான்
சுந்தரவை குண்டநகர் துன்னிமகிழ் வெய்தி

---

* ஒரு தன்மை—வளர்தல் தேய்தலில்லாத்தன்மை.

† அயகோளம்—இரும்பாலாய உண்டை.

‡ கிருகம்—வீடு.

வந்துபிற வாதநிலை மன்னுதனல் வீடா
லிந்தமெய் யலாதுமெய் யிகத்தலது வன்று (உஅ)

ஆதலின்வி யாழன்மத மந்த*வப வர்க்கச்
சாதகமன் றுசுரர்கள் சார்வதுபே ரின்பத்
தோதுமன மேயகுணத் துத்தமர்கள் சாரார்
தீதுதரும் நீத்தறிற மென்றுதெருள் வாரால் (உகூ)

வேறு

இன்னவா தாச ரெண்ணி யிணையிலா வரியை யென்னு
நன்னகர்க் கணித்தா யோங்கி நலன்பல தாங்கி நாளும்
மன்னிய மாயா வாத சமயிகள் வைகப் பெற்றுப்
பொன்னிலம் பொருவுங் கோவி லூரெனும் பதியிற் போந்தார். (௩0)

ஒருபொரு ளறிவா யென்று முண்மையாய்க் குணமொன் றின்றிப்
பொருவிசே டணமிலாம லுளதுமற் றனைத்தும் பொய்யாம்
வருமொரு மோக்க நூலின் வழியறி வதனு லென்னத்
தருமுரை மதத்தைச் சின்னாட் டாசராங் காய்ந்தார் மன்னோ. (௩க)

இம்மத மீசன் பாதத் தேயுமா வடிமைப் பேற்றை
யம்மவோ தந்த தில்லை யாதலி னுயர்ந்த தின்றாற்
செம்மைசேர்ந் துள்ள வேறு மதத்திய றெரிது மென்னுத்
தம்மனத் தெண்ணிப் பாசு பதமதந் தாச ராய்ந்தார். (௩உ)

சங்கரன் சூல பாணி தாணுவி னெழில்சேர் பாத
பங்கய மலர்க ளென்றும் பத்தியிற் பணிவா ராகித்
தங்கிய நண்ப ரோடு சம்புவைக் காண வெண்ணிப்
பொங்குபூம் பொழில்சு லாய சாக்கைமா புரியை யுற்றார். (௩௩)

அவ்வயி னுற்றதாச ரறிவுள ராய முன்னோர்
கவ்வையில் பரம னந்தக் கமலைசேர் மார்ப னென்றே
யெவ்வமி லளவை காட்டி யிசைக்குந ரிதன்க ணுண்மை
தெவ்வரண் கடந்தா யென்பாற் கருணையாற் றெரிக்க வென்றார். ()

முராரியே பரம னென்ன முற்றுணர்ந் தறிந்த முக்கட்
புராரியத் தாச ரையம் போக்கிய கருணை யாலே

* அபவர்க்கம் - மோக்கம்

விராவவர் தோழர்க் கெல்லாம் வில்வமே கரத்தி லுய்த்துப்
பராவுத லுடையார் கையிற் பைந்துழாய் பணிக்கச் செய்தான். (கரு)

ஏற்றவ ரதனை நோக்கி யின்பமிக் குடைய ராகித்
தோற்றுமித் தன்மை யெண்ணித் தோழரைப் பார்த்து முக்க
ணேற்றவர் கருணை யென்னே யுங்கட்கு மெனக்கு மிங்ஙன்
வேற்றுமை தோன்று கின்ற தென்றுற விளம்பி னூரால். (கசு)

கூவிள மதற்கே யென்றுங் கூறிய தான மாகிக்
காவியங் கண்ணி யோடு கலந்தர னன்பர்க் காக
மேவிய கோயி றன்னில் வியப்பிதே யெனது பக்க
றீவிய விரையு யிர்க்குந் திருத்துழாய் சேர்ந்த தம்மா. (கஎ)

ஆதலி னறிவின் மிக்கி ரணைவரு மொருங்கே யாய்ந்து
தீதுதீ ருள்ளத் திர்காள் செய்வதென் னினியா னென்னப்
பேதமி லாதுகண்டு தேறுமின் பிறவிப் பௌவத்
தோதுமோர் கணம தேனு முறமன முடையெ னல்லேன். (கஅ)

எனவிவ ருரைத்து நிற்க வெண்கணுன் றந்தை சூடும்
வனமிவர் திருக்க ரத்தின் மன்னனு மான நோக்கிற்
றினகரற் சிரிக்குஞ் சோதிச் செங்கண்மாற் கடிய ரென்றே
முனமுறு தவத்து வந்து முளைத்தன ரென்ன வுன்னி. (கசு)

சொற்றனர் தாசர் தம்மைத் தோழர்க ணோக்கி யைய
பற்றுதல் பணித லென்றும் பாப்பணைப் பரமன் செய்ய
பொற்றிரு வடியே யென்னப் புண்ணியர்நண்பர்ப் போக்கிக்
கொற்றநீள் புரிசை சுற்று மரிமையைக் குறுகி னூரால். (உ0)

தாமரைக் கண்ண னன்றிச் சார்புமற் றில்லை யென்னு
மாமதி யுடைய ராகி வளமலி யரியை யென்னுந்
தாமமேல் விருப்பி னுற்ற தாமரைக் கிழத்தி நண்பன்
பூமல ரடிக ளுள்ளம் போற்றியாங் குறைந்தார் மன்னோ. (உக)

நத்தொடு வளைகோ தண்ட நாந்தகங் கதைகைக் கொண்ட
வத்தனிக் தாசர்க் காக்க வவாவியத் திரிகு லத்து

மெய்த்திரு வேங்க டாசா ரிப்பெயர் மேலோன் பங்க
லொத்ததொண் டுடைய ராக வூங்கிவர்ப் புரிந்தான் மன்னே. (சஉ)

தத்துநீர் வறந்த கானு மில்வரு தாப நீப்பா
னத்திரி குலத்து வந்த வாரியன் தாசர்க் காங்குப்
பத்தியின் மாலை யெய்தல் பயனென்று மூபாய மென்றும்
தத்துவ மென்று மாயோன் சரண்சர ணென்றுஞ் சொற்றான். (சங)

தத்துவ விளக்க மாதிச் சாத்திரப் பொருளை யோதி
யுத்தம வடியார்க் காக்க வுன்னியக் கமலை கேள்வன்
வித்தகக் குருக்கண் மெய்யை விருப்பொடு பரிப்ப னென்று
சத்துவ குணத்த சான்றோர் சாற்றுவர் தெளிக வென்றான். (சச)

பற்றிய கால மூலப் பகுதிகட் கெட்டா தாகிக்
சுற்றுமா தித்த னங்கி சுடர்மதி விளக்க மூட்க
முற்றிய வொளிய தாய மூதுல காசா னேக்கம்
பெற்றவர் பவத்தி னீங்கிப் பீடுறப் பெறுவ ரென்றான். (சரு)

மாசறு மறிவி னுசான் மலர்க்கணேக் கமுத வாரி
வீசுறு மலைபி லாழ்ந்த மெய்த்தவர்க் களிக்கும் பேற்றைப்
பேசிய நான்கொ டைந்து பெறுமாறு முகத்த ரீயுந்
தேசுடை யார்க ளல்லர் தேசிகர்க் கொப்பி லென்றான். (சசு)

சத்துவஞ் சமநோக் கீசன் சரணுறு பத்தி நூலா
யுத்தம ஞானம் பாவ முறுமைநற் சரித மோடு
சித்தியை யடைந்து தீர்த்த பரம்பரைத் திருவா சானை
நித்தலுந் தன்னைக் காக்க நினைப்பவ னடைக வென்றான். (சஎ)

சாற்றுநற் குணங்கட் கெல்லாந் தாரணு லயமா யெற்குப்
போற்றுறு குருவா யில்லென் பொங்கிய கரள நுங்க
வேற்றவோ டதியாய் மிக்க விசையுளா ரொருவ ருள்ளார்
வேற்றுரு வேற்று வந்த வேதாந்த குரவ ரென்றான். (சஅ)

இலக்குமி புரத்தி னல்லான் குலக்கடற் கேயுஞ் சோதிக்
குலக்கவுத் துவமாய்த் தோன்றிக் கூறுமாப் புகழ்ப டைத்த

கலத்தசக் கிரவர்த் திப்பேர் நாயகக் குரவ னேக்கங்
கலத்தலி னன்றோ மேன்மை கடையெனு மடைந்தே னென்றான். ()

அன்னவர் விடய வாசை யகத்தொரீஇப் பரமன் பாத
முன்னியா னந்தத் தென்று முறைகுவ ருலகை யோம்ப
நன்னிலை யரங்க ராமா னுசனெனு நாமந் தாங்கிச்
சொன்னவா மறைகண் முன்னந் துரியவாச் சிரமம் பெற்றார். (௫0)

தாசரே கேட்பீ ராக வுடையவர் தாஞ்செய் துள்ள
மாசறு நூல்க ளெல்லா மண்ணிடை விரித்த வந்தத்
தேசிக வெதியாய் வந்தார் திருவடி யடையி னின்றே
பேசிய மோக்கங் கையிற் பொருளெனப் பெறுவி ரென்றான் (௫௧)

எனப்பல தன்னைக் காக்க விருக்குரை யொத்த வோதி
மனப்படத் தாசர்க் காசாற் போற்றுமா மாலை யொன்றை
யுனப்பெறு மறிஞ ருள்ள முவப்புற வுபதே சித்தான்
றனைப்பொரு வேங்க டாசா ரிப்பெயர்த் தகைமை யோனே. (௫௨)

௫-வது சமயந்தேருண்டசருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் ௩0௨.

---

# குருவைப் பாராயசருக்கம்.

அத்திரி குலத்து வேங்க டாரியப் பெரியோன் சொற்ற
வித்திய வினையாம் பங்க முலர்த்திட வெயிலோன் போன்ற
இத்துதி மாலை தன்னை யெளியனேன் முன்னுட் செய்த
வத்தவ மகிமை யானே யறைகுவ லென்று சொல்வான். (௧)

வேறு.

எதிரா சருந்தே சிகரும் மெனவே
மதிசேர் பெரியார் மலர்வா யுரைசெய்
முதியா யிராமா னுசமா முனியே
கதிநீ யெனவுன் கழலே புகுவேன். (௨)

சரணா கதிதந் தருளத் தரணிக்
கரணாய் வருவா யலர்பங் கயநேர்
சரணா வெதிக டலைவா புகழா
பரணா மறைதேர் பணவா பணிவேன். (௩)

உனதாள் பணிவா ழுயர்மா நிதியா
ரெனபா வினநின் னிசையா சமுதந்
தனையார்ந் துளதாற் றருமென் றருளாற்
றினமெண் ணுவராற் றிருமா லடியோய். (௪)

பொருளா சையினாற் புவிமீ துடையார்
தெருவா யலைபத் தெறுநோ யறுமா
குருலக் குமணக் குரிசில் புகழா
மொருநற் சுதையே வுறவுண் குவெனால். (௫)

மதனார் வினையான் மடவார் தமையே
துதியே புரியுந் தோமோ விடயான்
கதிரங் கவிலக் குமணா கலைதேர்
எதியார் பதியே யெனவேத் துவெனால். (௬)

விரியுங் கடல்போன் மிகுநின் புகழைத்
தெரிவொன் றிலெனுந் தெரிவோ ரிகழப்
பரிவிற் புகறல் பரவுன் குணனால்
வருநற் செயலா மறைதேர் தவனே. (௭)

கலையுங் குணனுங் கலவும் மிடனே
யலகைத் தனமுண் டவனே பரமென்
றுலகுக் குரைசெய் யுறுவர்க் கரசே
நிலவென் மனநேர் வனநீ யருள்வாய். (௮)

புறமேய் சமயப் புதல்வா ழரவைத்
திறமார் நினசொற் சிகியா லிரிசெய்
யறவோ ரெதிகட் கரசே யுனைநான்
மறவா துரைசெய் வதுமுற் றவமே. (௯)

கவியைப் புனையுங் கலையோர் பலருந்
திவியத் தவநிற் சிறிதும் நிகரார்

நவில்கத் தியோத நாமம் பெறினுஞ்
சவிதா பொருமோ தருமின் மினியே. (கO)

திருவாய் மொழியின் றிகழ்பா டியநூற்
கொருசா ரசங்கி ரகமென் றுயர்நூ
றருமா ரியனின் றனையே தொழுமால்
வருமென் னுடலம் மனம்வாக் கிவையே. (கக)

சீரங் கரமா நுசதே சிகனே
நாரந் துயில்வார் நரனுக் குரைநூல்
பார்தங் குயர்வோர்க் கருளாற் பகர்வா
யாரிங் கிதன்மெய் யறியும் வலரே. (கஉ)

இல்லா மறையோற் கியற்றிக் கிரியை
செல்லார் பொழிலத் திகிரிக் கரியோன்
நல்லா னெனமுன் னவிலும் பெயர்கொள்
வல்லார் குலமா மணியே பணிவேன். (கங)

இரவைக் கடவ விரவிக் கலதில்
லரவக் கடல்சூ ழகிலத் தெனல்போற்
பரவப் பவநோய் பாறற் கொருவ
குரவர்க் கரசே குணவா ரிதியே. (கச)

பூதூ ரெதியார் புகல்பா டியநூன்
மீதே செலலான் விரியும் மதியோய்
தீதோ யிருவே தசிரங் கடமக்
காதா ரகிலன் னறவோ யலதார். (கரு)

பூவாய் கொளுமா லடிசேர் புனிதா
மேவா வுனசொல் விரிசா னவியா
லாவா விலமா தியபங் தமதாங்
* தாவா னலமாய் தமவெற் கருள்வாய். (கசா)

மிகுமா முமுடன் சுவையும் விணின்மே
தகுகங் கைமினுங் தழுவுந் திறனூற்

* தாவானலம்-காட்டுத்தீ.

றெருகுநின் கவியோர் தரமே சொலினா
முருமெப் பவமு முபர்தே சிகனே. (கஎ)

மனத்தா மரைதா மலரப் படலா
லினத்தா ரகமே விருணீக் குதலால்
*வனத்தா ரரியுண் மனலால் முனியே
நினைத்தா னினனாய் நினைத்தேத் துவனால். (கஅ)

இலர்பா லுளர்பா லிசைவிற் பகையிற்
றலனார் துகளிற் றகைசேர் நிதியி
லுலகில் லொருநோக் குடையார் பலரா
னிலவுன் னடியார் நெறிசேர் தவனே. (கசு)

வினையின் †னரலை மிசையுந் திறனிற்
றனைநேர் பொதியிற் றவனே நடையின்
மனனத் துறைசேர் வசிட்டன் முதலோர்
நினையொப் பவராய் நினையப் பெறுப. (உ0)

மதவா ரணமா கியவா திகளை
யதமா வரியே றெனவே யழிசெய்
புதனே யொளியாற் புகழ்மா மதிநேர்
வதனா வெதிகள் வரனே பணிவேன். (உக)

‡மூவா றெனவே மொழிவித் தையெலாந்
தாவா துறையத் தருமா கரனே
நாவாய் கொடுஞா மநவிற் றுமெனைக்
காவாய் விரகக் கனல்போ யறவே. (உஉ)

கண்டா ரிதயங் களிசெய் தலினுள்
ளுண்டா மிருளோச் சுதலிற் சனனப்

---

* வனத்தாரரியுண்மனல்-துளவமாலையையுடையஅரி உள்ளே நிலைபெறுதல்

† நரலை-கடல்

‡ மூவாறுவித்தை-வேதம் ச, வேதாங்கம் சு, உபவேதம் ச, உபாங்கம் ச

பண்டார் கடறீக் கொளுவும் பரிசால்
விண்டோய் சுடர்மூன் றெனவிள் ளுமெவனால். (௨௩)

வேறு.

இரணிய கருப்பம் பாசு பதமத மிரண்டும் போக்கி
முரணிய தாகி நிற்குஞ் சங்கரர் மொழியுந் தாழ்த்தத்
தரணியின் முனிநீ செய்த சாத்திரத் தொகுதி காண்பார்
சரணநீ யெனவப் போழ்தே சார்வது சரத மம்மா. (௨௪)

பெரியரிற் பெரிய ஞான பெருமவே தாந்த மார்க்க
முரியதா யழியா வண்ண மோங்கநீ காத்த லானே
சொருபத்திற் கிசையா பத்தி யெனச்சொல லழித லோடு
விரிபிர பத்தி யாகா சாதன மெனலும் வீயும். (௨௫)

நல்லியற் பூதூர் வந்த நாதனா மெதிசெய் நூலிற்
செல்லிய களித்த லோடு தேசிகன் றிருத்தாட் பூவிற்
புல்லுத லென்று நீங்காப் பொருவரு முளத்து மேலோய்
பல்லிசை யோடும் வாழி பல்லாண்டு பல்லாண் டாக. (௨௬)

தாமத நிலையை நீக்கித் தக்கவே தாந்த வித்தை
யாமதை யென்பா லாக்கி யருள்நிக மாந்த வாசான்
றாமரைச் சரண நீங்கா வுளத்தையுந் தந்தே யாருங்
காமுறு குணச்சீ ரங்க விலக்குவக் குரவ காப்பாய். (௨௭)

எனவிவா றாத்தி ரேய ரிசைத்தவித் துதிநன் மாலை
தனையரி புரத்திற் றாசர் சாமிபுட் கரணி மூழ்கி
வினையொரு வழித்தா யாக்கி நிச்சலுஞ் செபித்து நங்கள்
வினைதெறு வேங்க டேசன் விரைகழல் போற்று வாரால். (௨௮)

குருவைட்பரரயசருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள். ௧௱௦.

# குருவருள் பெறமுயல் சருக்கம்.

மனத்தகத் தன்பினை மருவித் தாசரெத்
தினத்தினு மடிகள்சீர் செப்பு தோத்திர
முனத்துறு பவப்பெருக் கோய வோங்கினு
ரனத்தமில் செயலுளார்க் காகு நன்மையே. (க)

வேறு.

சீரங்க ராமா னுசனெனுமத் தேசிகனுர்
வாரங்கொண் டன்பர் மகிழவிரு வேதாந்த
சாரங்க ளோதியுறை தந்தவரங் கஞ்சென்றூர்
நாரங்கொண் டித்தாசர் நாடியன்னுற் போற்றுதற்கே. (உ)

வேறு.

அப்பதி யிடைப்புகுந் தரங்க நாதனை
யொப்பறு பூமினு ரோடு தாழ்ந்தெழீஇச்
செப்பரும் பொன்னியின் றீரத் தாரிய
விப்பிர யதியுறை யகத்து மேவினுர். (ங)

* சாரிகை சுகமுதற் சகுந்த நீடொலி
சேரிய தவவனச் சிறப்பை நோக்கிநம்
மாரியற் குறையுளா யமர்த லாலிதற்
கோரிலொப் பிலையென வுன்னித் தாழ்ந்தனர். (ச)

பெரியரிற் பிழைத்திடாப் பெற்றி யேதமக்
குரியதென் றெண்ணுவா ரொப்பி லாரியன்
விரிதரு கடாக்கமே மேவ நிச்சலுந்
துரியன்வாழ் தாபதந் தொழுது நிற்பரால். (ரு)

தினப்பணி வுடையரைத் தெய்வ மாமுனி
நினைத்தில னேக்கில னெடிய நாட்டரு
வினைத்திரள் பெரியரை மேவல் போக்குமா
லெனக்கொடு மனநினைந் தின்ன வெண்ணுவார். (சு)

* சாரிகை - பூவைப்புள்.

வணங்கினர்க் கருள்தர *வசுதை தோற்றிய
மணங்கமழ் கற்பக மனைய மாதவ
னிணங்கிய கருணையென் பாங்கி லென்னையோ
பிணங்கிய தெனவுளம் பேதுற் றாரரோ. (எ)

இரங்குமிம் மதியினு லாவ தில்லென
வுரங்கெழு மனத்தரா யுற்ற நற்றவத்
திரம்பெறு குருவருள் சேர வொப்பிலா
வரங்கனு ரடியர ஞாகப் பற்றினர். (அ)

எனவிவை நினைந் தெவர்சர ணெய்தி னுலுமங்
கனையவர்க் களிக்குமவ் வரங்க நாதனு
முனைதர மிகமகிழ்ந் தொப்பி ருசர்பா
னனையிரு மடிகளு ளுடைச் செய்தனன். (கூ)

பின்னரக் குரவனும் பெருகு நாளிவன்
மன்னுநம் பதியிடை வந்து போற்றுவா
னென்னெனி யாயினு மாக வென்றுகொண்
டின்னணந் தன்னுளத் தெண்ணி னனரோ. (க0)

ஈங்குவந் தனைதின மியற்று வோனுளந்
தாங்கிய வவாவினைத் தந்து முற்றுது
மோங்குமதி திதுவென வுரைத்த பின்னரென்
றாங்கவ னகத்திடை யமைத்திட் டானரோ. (கக)

இவ்வழித் தாரிய னெண்ண மென்பதை
யவ்விய மவித்தவத் தாச ராய்ந்திலா
ரெவ்வயி லாண்டுமூன் றெய்த மாமுனி
யவ்வயி னின்றமுந் தூரை யண்மினன். (கஉ)

மாணவக் குழுவொடா மருவி யெம்பிரான்†
காணிகொ டலமுனி காண்டற் கெய்தலும்
பேணிய சத்துவ குணம்பின் சென்றென
மாணுறு தாசரு மகிழ்வொ டேகினர். (கங)

---

* வசுதை - பூமி.

† ஆமருவியப்பன் - அழுந்தூர்ப்பெருமான்.

திருவழூந் தூருறச் சென்று தாசருங்
குருவரு ளென்வயிற் கூட வென்றுகொண்
மருவிரி துளவணி மால்செய் வானெனு
வொருபொழு தொழிவிலா துறுவற் போற்றுவார். (கச)

போற்றுமாண் டாறவண் புகுந்த நாளிடை
யேற்றமார் தாசர்முன் னெதிக டம்பிரான்
றேற்றலு மவனடித் துணைகள் பன்முறை
மாற்றரு மன்பினல் வணங்கி னாரரோ. (கரு)

தன்னடி போற்றிய தாசர் மாட்டருண்
மன்னிய குரவனு மருள்கு சூழ்வரத்
துன்னிய வடியரைத் துணைக்க ணோக்குபு
பன்னின னோருரை பரிவி னலரோ. (கசு)

பூவுறை தேவர்காள் போற்று மின்னவ
னேவயி னிருப்பவ னெக்கு லத்துளான்
சேவையால் வேட்பதென் றெரிய நீவிரே
யாவையுங் கேண்மினென் றெதி விளம்பினன். (கஎ)

எதிவர னுரைசெவி யேற்ற மாணவர்
துதியுறு தாசரைச் சொன்மி யாவெண்
மதியுளார் முடிமிசை மலர்க்கை கூப்பிநின்
றதிபணி வுடனிவா றறைதன் மேயினர். (கஅ)

விண்டுவந் துறைதரு மெய்ய மாமலைக்
கெண்டரு மோசனை யியலு மொன்றரை
கொண்டது திருமகள் கொழுநன் வாழ்வதூ
யுண்டரி புரமெனும் பெயரி னோர்பதி. (கக)

வேறு.

உலகு புகழு மப்பதியி லுயரும் வணிகர் குலத்துதித்தே
னிலகு பெரியோ ரடிச்சார்பே யெளியேற் கென்றும் வாழிடமாற்
பலரும் வணங்கு மெதிமணியின் பண்பேய் கருணை பெறநினைத்தே
யலகி றினங்க ளிகவாம லடியேன் வழிபா டாற்றுவென்னல். (உ0)

வேறு.

மெய்ம்மையின் மலர்மகள் விரும்பு வானடிக்
கெம்மையுந் தொண்டுசெய் திருப்ப வெண்ணுவேற்
கிம்மவிம் முனியரு ளமுத மன்றியோர்
செம்மைசேர் பொருளிலைச் செப்பி னுண்மையால். (உக)

மண்ணொடு பெண்ணையு மற்றவற்றையு
மெண்ணில தென்மன மெதிகட் கீசனார்
கண்ணருள் கருணையாங் கணிப்பி லாப்பொரு
ணண்ணுமோர் திறத்தையே நாடி யுள்ளதால். (உஉ)

ஆண்டுபற் பலமுனி யருளை நாடியே
யீண்டின னின்னமு மெய்திற் றில்லையான்
மாண்டநந் துணைகொடு தீர்த்தன் மாணடி
பூண்டனன் சரணிது பொய்ப்ப தாகுமோ. (உஙூ)

இத்திறம் பூசுரர்க் கினிய தாசராங்
கொத்துள வுரைத்துவாய் புதைத்து நின்றனர்
வித்தையிற் பெரியர்பால் விரித்து ரைத்திடற்
றத்துற வுறுமெனச் சார்ந்த தாவுளம். (உச)

கிளர்தரு தாசருட் கிடக்கை யாவையும்
வளமலி யந்தணர் வகுக்க மாமுனி
யுளமுறு மளவைகண் டருள வுன்னுபு
விளநிலா முகமலர்ந் திதனை யோதினான். (உரு)

மறைவலீ ரிவரெண மகிழத் தக்கதே
யறைபல பிறந்தையி லாகு மாதவ
நிறைவினா லல்லது நெடிய மால்பதத்
திறைகெழு தொண்டுசெய் யிதய மெய்துமோ. (உசா)

பவப்பெருங் கடற்கரை பற்ற வம்பியாத்
தவத்துறை சற்குணர் தரணி யிற்பல
ரவத்தொழி னீக்கிய வவரைச் சார்தலே
யிவர்க்கதி நலனென வியம்பி னான்முனி. (உஎ)

இம்மொழி யாரிய னிசைக்கக் கேட்குபு
வம்மவத் தாசரு மகநெ கிழ்ந்தன
ரெம்மையுங் காப்பவ ரியாவ ரேயென
விம்மித முற்றிவை தம்முள் விள்ளுவார். (௨௮)

பற்பல பகன்முனி பாத பங்கய
நற்கதி நான்மறை நவிற்று நாரணன்
பொற்பத மடைதலுக் கென்று போற்றியுள்
ளொற்கமி லாமிகு முதமுற் றேங்கினேன். (௨௯)

இவ்விடை யாரிய னிசைத்த வாசகஞ்
செவ்விய திருவடிக் கன்பு செய்தலில்
வவ்விய தோவென மனத்தை யாயவேர்
வொவ்விய வுரைகொலோ வென்று மோர்ந்திலேன். (௩௦)

முனிவர னென்னவர் முற்று முற்றுமா
றினியருள் புரியினு மில்லை யென்னினும்
புனையவ னடிமலர் போற்ற லோவலே
னெனமன வூக்கமோ டிறைஞ்ச லுற்றனர். (௩௧)

இன்னணம் பணிபவ ரிலங்கு மாமுனி
தன்னடி குறுகிநிற் றவிர்த்தொர் செல்வமு
முன்னல னெதியர சிதனை யோர்ந்தனை
யென்வயி னருட்கடை நோக்க மீதியால். (௩௨)

என்றுரைத் தனரறிந் திசைகொ ளாரியன்
றுன்றிய கருணையாற் சொல்வ னென்னிடை
நன்றுநீ யன்பினை நாட்ட லுண்மையே
லின்றரி யீயுநீ யெண்ணிற் றென்றனன். (௩௩)

இம்மொழி குருபர னிசைப்பக் கேட்டலு
மம்மவோ நிரப்பினர் செல்வ மார்ந்தென
வெம்மையு மகப்பெறா ரினிது பெற்றெனத்
தம்மன மகிழ்ந்தனர் தாச ரங்ஙனம். (௩௪)

பவவனம் பற்றறப் பற்று மங்கியாந்
தவமுனி மலர்க்கணி னோக்கஞ் சார்ந்தபி
னெவையெவை யடைதர வெண்ணு கின்றன
னவையவை கையடை யாகு மெற்கரோ. (௩௫)

என்றிளைந் திவரமுந் தூரி ருக்குநாண்
மனைதனக் களித்ததங் குலத்து வாணிப
ரினையவிச் செயலிவ ரெய்தல் கேட்டுமா
மனமுறு சினத்தராய் வந்து நேடினார். (௩௬)

தேடினர் திருவழுந் தூரிற் றாசரை
நாடினர் தடுக்கவுண் ணயந்து தேசிகன்
பீடுறி பெற்றியைப் பெற்றி லாமையாற்
றாட்டண மோடகங் கரித்துச் சொல்லுவார். (௩௭)

சிவமதத் துரியராய்த் திகழு நங்குலத்
திவருநன் மேன்மையை யிழித்து நங்களை
யவமதித் தனையெனோ வறிவி லாமைநீ
நவநடை கொடுபுறச் சமய நண்ணினை. (௩௮)

பொருண்மிகக் கொண்டுளா ரென்று புந்தியிற்
றெருளுறீஇ யவாவினாற் சிலவர் கைக்கொள
விருளுறு பொய்ம்மொழி யிசைப்ப மெய்யென
மருளுத லுற்றனை மதியி லாமைநீ. (௩௯)

எனப்பல வாறிவ ரியம்பித் தாசரைத்
தனப்பெரு வணிகர்தம் பாலிற் சார்கென
வனைத்தையு முணர்ந்தவ ரமைகி லாமைகண்
டினத்திவ னிதுசெய லெதியி னாலெனா. (௪0)

இவ்வணந் தேறியோ ரெதியின் சீடர்பா
லெவ்வமில் சிந்தையெம் மினத்த வன்றனைச்
செவ்வன் மெம்முடன் செல்கென் றேவுமா
றவ்வர முனிவனுக் கறிவிக் கென்றனர். (௪க)

ஏதிபதி சீடர்சொல் லேற்றோர் சூழ்ச்சியாற்
றுதியுறு மன்புடைத் தொண்டிர் தாசரை
*நதிபதி யிடைத்துயில் நாதன் கோயில்கொள்
பதிகள்போய்த் தொழுதுறப் பணிமி னென்றனன். (சஉ)

வேறு.

மாதவனு ருரைபிதென மகிழ்வினொடு தாசரெழுந்
தாதரவிற் றிருப்பதிக ளவைதொழுவான் சென்றனரா
லோதரிய ஞானமெலா மொருங்கேயு மோர்குரவன்
பாதமலர் பழிச்சிவழி படுவார்கட் கெய்தாதென். (சங)

எ-வது குருவருள் பெறமுயல் சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௩எ௩.

# அ-தல யாத்திரைச் சருக்கம்.

குரவ னுரைத்த வுரைசிரத்திற் கொடுபோய்ப் பெருமான் றிருப்பதிகள்
விரவி வருவான் விரைகின்றார் விரிநீர்ச் சேது முதனோக்கிற்
பரவி வருமெய் பவப்பெருக்கும் பாறு மென்ன வுளநினையா
விரவி நிகருங் குறுமுனிவ னிசையுந் திசையி லேகினரால். (க)

தாச ரேகு நெறிநோக்கித் தடுப்பான் வந்த வணிகரெலா
மாசொன் றிலரா னற்காலம் வரவே வந்தார் நமதுவழி
வீசி யகலா ரையமினி விடுமின் விடுமி னெனவுரைத்துப்
பேச வரிய மகிழ்வினொடு பின்னர்த் தொடர்ந்து சென்றனரே. (உ)

தன்னைத் தணவா துடன்றொடர்ந்து சாருங் கிளைஞர் தமைநோக்கி
யென்னை யாகு மிவர்செயன்மற் றினிநா மௌனித் திருப்பதுவே
யுன்னி லுயரு முபாயமென வுளத்திற் கருதி யிவர்நம்பா
லென்ன விடயம் வினவிடினும் விடையின் றெனவே திடம்படுத்தார்.

இவ்வா றடிமைத் திறத்துயர்ந்தா ரிருக்கு மோனத் தியல்பத
னைச், செவ்வே யுணர்ந்து மற்றையிவன் றிருப்பக் கருது நமதுளத்

* நதிபதி—கடல்.

துக், கொவ்வா னெந்த விதத்துமென வோர்ந்தே பழங்க ணுடனு
றைவா, ரெவ்வாற் ருனுந் தன்கருத்தை யிவன்போன் முடிப்பா ரிலே
யென்றே. (சு)

பொறையிற் பொதிந்த மனத்தவரும் போற்றி யாசா னடிமலரை
முறையிற் றினம்பூ சனைபுரிந்து முற்றும் போகப் பொருளிலெலா
மிறையு நசையற் றிருந்தனரா லென்னே யாசை யிகந்தோர்க்கு
நிறையி னுலகம் பலபலவு நிகழ்த்திற் றிரண நிகராமே. (ரு)

ஆறு படரு மாறுபடா வடிமைத் திறத்தா ராறுடனென்
றேறு பரியோ னுதயகிரி யேறு மளவி லாறுபதம்
மூறு நறவ முண்டிசையே மொலிக்குங் கமலந் துதை *வெண்மை
யாறொன் றங்க ணெதிர்நேர வதனிற் குளித்தா ரைந்தவித்தார். (சு)

மாயை வடிவே யிவரெனலா மாறு வந்த வினத்தினரும்
பாய வில்லத் தொடர்பதனிற் பற்றே யில்லாப் பெரியோரின்
றாய மனத்தி னிலையறிந்து சோர்வின் றென்ன செய்திடினு
மாய பலனொன் றில்லையென வவரைத் துறந்தே யகன்றனரால். (எ)

சுற்ற மகல வகலாழி துலங்குஞ் சேது கண்டுபவம்
பற்றற் றொழிவான் செல்கின்றார் பரந்த மெய்ப மலைநாதன்
முற்றக் குயிற்று மரதனத்தால் மொய்கொள் சோதி விமானமதைக்
கற்ற மனத்தாற் கண்ணாரக் கண்டவ் வயினே பணிந்தனரால். (அ)

ஆங்கு நின்றும் வழிவருவார் † வாய்மைப் பெயரா ராவிமருங் [யித்
கோங்கி விளங்கு மெய்யமென வுரைக்கு மோங்க லொளிவிளக்கா
தாங்கு தேசம் பொருள்காலந் தம்மா லாகு மளவிலனாய் [னாய்.
வீங்கு சித்தோ டசித்தினைத்தன் மெய்யாய்க் கொண்டு விளங்குவ

கருணைத் தடங்கட் சத்தியநா யகியின் கலவுங் கருமுகிலா
யிருமை யளிக்கும் பெருமானு யெவர்க்குந் தலைமை புரிவானு
மருமை யுடைச்சத் தியநாத னவனை யணிபொற் றிருத்தளிக்க
ணொருமைமனத்தோடுடல்வாக்குமொன்றப்பணிந்தாருயர்ந்தாரே.

---

* வெண்மையாறு—வெள்ளாறு.

† வாய்மைப் பெயராவி—சத்யபுஷ்கரணி.

மெய்ப நகருக் குரியோனுப் விரும்பித் தொழுவார் மெய்யனுமா
யைய மின்றி வேண்டுவன வளிக்குங் கருணைக் கடலையினை
நைய வணங்கிப் பன்னாட்பின் னலமார் வடவேங் கடப்பெருமான்
செய்யு மருளாற் பொலிகின்ற திருவா ரியைப் பதிசேர்ந்தார். (கக)

அந்தப் பதியிற் சின்னாளங் கான்றோ ருரைத்த வுரைகேட்டுஞ்
சிந்தைக் கினிய நூல்கள்பல தெரிந்துந் திருவேங் கடநாதன்
கந்தக் கமலக் கழலிணைகள் கையாற் றொழுதுங் கருத்தகத்தி
லிந்தப் பணிகள் செயல்கருதி யிருந்தார் தவப்பே றெனவெண்ணி.

ஆண்டப் பெரியோர் தன்மையினை யவர்நம் மினத்தா ரறிந்துமிகப்
பூண்ட வியப்போ டித்தகைய புந்திச் சிறத்தோர் தங்கிளையாக்
காண்டற் கருமை யெனவிருப்புக் கலந்த மனத்தோ டவரடிக்க
ணீண்டி மிடைந்து வணங்கிடவு மிவரை யிறையு நோக்கிலராய். ()

ஆர்க்கும் வியப்பை யளிப்பதனோ டசையா நிலைய மனத்தினராய்ப்
பார்க்கு ளுயரு மரியைநகர்ப் பதும மகளோ டணைந்தவனைத்
தேர்க்கட் பார்த்தன் பரிநடத்தச் செங்கைக் கோல்கொள் சீதரனைச்
சேர்த்த வுளத்தி லுறத்தாங்கிச் சேது நோக்கிச் சென்றனரே. ()

வணிக மரபு சிறக்கவரும் வள்ள லாகும் புகழ்த்தாசர்
தணிவில் கீர்த்தித் தயரதன்றன் றலையன் கண்டோர் பிறப்பிறப்புந்
திணிய பவத்தின் சுமைகளுந் தீர்க்க வமைத்த திருவணையை
மணிக ளலைக்குந் திரைக்கடல்வாய் மனங்கண் மகிழ வந்துகண்டார்.

எந்தப் பவங்க ளானுலு மெய்தா தொழிக்குஞ் சேதுவினிற்
சந்தக் குரவர் தமையடையத் தடுக்கும் பவத்தைக் கடந்திடுவான்
பந்த மறுக்கு மடியவரிற் பரக்கச் சிறந்த மெய்யன்பர்
சிந்தை மகிழ்ந்து கடலாடித் திருப்புல் லாணிப் பதிதொழுதார். (கரு)

இன்ன பரிசு திருவணைசென் றெய்தி யலையுங் கடலாடி
முன்னை யறிவான் முதியாரு முறையிற் புரிந்த தவத்தியல்பு
சொன்னோ மிப்பா லாழ்வார்கள் சொல்லின் மாலை புனைபதிக
ளன்னர்ச் சென்று முகுந்தனடி நாடிப் பணிந்த நலமுரைப்பாம்.

வாசங் கலந்த பூமின்கண் மன்னி யிருபா லினுந்திகழ
வீசு திரைநீர் மதித்தடத்தின் பாங்கர் விளங்கு மோங்காரத்
தேசு நிறைந்த விமானத்திற் சேட சயனத் தரங்கனைக்கண்
டாசை யுடன்மே றவரும்விழைபு மருளை யீதி யெனப்பணிந்தார். ()

பூந்தண் பொன்னி வளம்வாய்ந்த பொருவி லுறந்தைத் திருப்பதியி
காந்து மணிப்பூ ணிலையுடன் கமலத் திருவும் பூமாது [ற்
மாந்துந் திறத்தி லெழில்வாய்ப்ப மன்னிப் பொலியும் பரம்பொருளை
யேந்து மார்வத் துடன்மனமே யிறைஞ்சி யுய்க வெனத்தொழுதார்.

கஞ்சத் திருக்குங் கொடிமின்னைக் கவலி யுலகைக் கனற்றிடமத்
*தஞ்ச னென்னும் பகைக்கோடை தணப்பக் கருணை மழைபொழி
விஞ்சு நீல மேகத்தை விளங்கு நார சிங்கமதைத் [யும்
தஞ்ச மாக வடைமனமே யென்று தஞ்சைப் பதிதாழ்ந்தார். (உ௦)

வடிவ மழகி யாரென்னு மாலை யரவிற் றுயில்வாரைப்
படியிற் பிருகுக் கருள நகு வல்லிக் கொடிசேர் பரவொளியை
நெடிய மாட மலியன்பிற் பதியிற் சென்று நிலவியக [ந்தார்.
முடிட்ப் பிணித்து நெகிழ்க்கரிதாய் முன்னின் றிறைஞ்சிப் புறம்போ

செந்தா மரைக்கட் கடைநோக்காற் செகத்தார் பவத்தை யொழித்து
நந்தா வொளிசேர் மணிச்சுடிகை நாகத் தணையி லமர்ந்துபிதா [ருளி
விந்தார் சடிலத் திறைபிவர்கட் களிசெய் புருடோத் தமப்பொருளை
நந்தார் வயல்சூழ் திருக்கரம்ப னூரி னண்ணி மனப்படுத்தார். ()

கள்ளா ரம்போ ருகமலராள் கருத்துக் கியைய முத்தொழிலுந்
தள்ளா தெந்த வுலகினுக்குந் தந்தாள் புண்ட ரீகாக்கன் [யான்
புள்ளா ரொலிக ளோவாத பொழில்சூழ்ந் தெழில்செய் வெள்ளறை
றெள்ளார் மறையுங் காண்பரிய திருத்தா ளுளத்துப் பரித்தாரே. ()

கற்பிற் சிறந்த சானகியைக் களவிற் கொடுபோ மிராவணனை
வெற்பின் சிகர பந்தியென விளங்குந் தலைக ளறவீட்டிப் [னைச்
பொற்பப் புகழார் கார்முகத்தைப் பொருத்தே வல்வி லிராமனை
சொற்பெற் றுயர்புள் ளம்பூதங் குடியி னடிக ளடிதொழுதார். (உ௪)

* தஞ்சன்—ஓரசுரன்.

அப்பக் குடத்திற் கரம்புகுவித் தனந்த *தற்பத் திடைக்கிடந்
தொப்பில் கமல வல்லியுட னொருவா துறையு நெடியவனைச்
செப்பு மப்பக் குடத்தானைத் திருப்பேர் நகரிற் சிறந்தானைத்
தப்பி றுணையா யுறமனனே தாழ்தி யென்னத் தாழ்ந்தனரே.(உரு)

அடியார் செய்த தவப்பேற்றிற் கருள்வா னெழுந்த பரவொளியைப்
பிடிநே ரரங்க நாயகியைப் பிரியா துறையும் பெருமானைப்
படியாண் டளக்கு மப்பனெனப் பகரு மாத னூரிறையை
யடியே னென்னை யாள்வாயென் றடியிற் பணிந்தா ரறிவுடையார்.

வானூர் சோலைத் தேன்பெருக்கை வழங்குங் கால்கள் பலவினுக்கு
மானுத் திரையின் கரங்கொடுமூத் தளிக்கும் பொன்னிக்கரைவாய்ந்த
மேனோர் மாடத் தேரழுந்தூர் மேவா மருவி யப்பனைச்செம்
மானேர் நோக்கின் செங்கமல வல்லி துணையை வணங்கினரே.(உஎ)

ஒளிசெய் நாத வர்த்தனமென் றோங்கு விமானத் திருத்தளியி
லளிசெ யோதி யிந்திரையோ டமரு மருமா கடலையினுந்
தெளிசெய் தரிய மறையறியாத் தேவை வளமார் சிறுபுலியூர்
களிசெய் காயா நிறத்தானைக் கருத்தி லிருத்திக் கரங்குவித்தார். ()

ஏரார் வனசத் திருக்கரமார்ந் தேத்து மடியார் தவப்பேறாய்
நீரார் பொன்னி தனைக்குறித்து நேருந் தவனுக் கெதிர்தோன்றிப்
பேரார் தனது திருவடியிற் பிறந்த நதியின் பீடளித்த
சீரார் சேறை நாயகனைச் சென்று காணூஉக் களித்தனரே. (உகூ)

வேறு.

தலைச்சங்க நாண்மதியந் தவஞ்செய்யத் திருமகளோ
டலைச்சங்கக் கடனீங்கி யவதரித்துத் துழாய்மாலை
யிலைச்சங்க மேவியநாண் மதியமென்னும் பெயரானைக்
† கலைச்சங்க மதிமானங் கலந்தானைக் கைதொழுதார். (௩0)

---

* தற்பம்—படுக்கை.

† கலைச்சங்கமதி -கலையின் திரளையுடையதிங்கள். மதிமானம்-சந்திர விமானம்.

மடந்தைகோ மளவல்லி மறைமுகனுக் காதவனாய்
விடம்பையே யனந்தன்மிசை மேவியவிற் கரத்தானை
யடர்ந்தேயு மொளியாரா வமுதையெங்க ளம்மானைக்
குடந்தைமா நகருறையுங் கோமானைக் கும்பிட்டார். (௩௧)

குண்டிகையிற் காவிரிநீர் கொணர்ந்தளித்தான் மலையமுள்ளான்
றெண்டிரைநீ ராசமித்தான் செய்தவங்கொண் டருள்வானை
வண்டிசைசெய் மலர்க்கூந்தற் றிருமருவு மார்பினனைக்
கண்டியூ ரரன்சாபந் தீர்த்தானைக் கரங்குவித்தார். (௩௨)

ஒருவிண்ணி னதித்தாளி னுப்பிலியப் பனையெங்கள்
கருவிண்ணின் மணிநிகருங் காந்தியனைக் கருப்புகுதாப்
பெருவிண்ண கரையாளும் பெற்றியரு மிறைஞ்சுமவாத்
திருவிண்ண கரைச்சேர்ந்து சீதரனைச் சேவித்தார். (௩௩)

செங்கமலை சேர்சவுரி ராசனைநந் திருமாலை
யங்கமலை மூலமென வன்றருளும் பரம்பொருளைப்
பொங்கமலை நீங்காத புனற்கண்ண புரத்திறையைச்
*சிங்கமலைக் குமைத்தானைச் சென்றுமகிழ்ந் திறைஞ்சினரால். (௩௪)

ஒருவாலி தனைக்கணையொன் றேவியுயி ருண்டபிரான்
குருவாவிப் பசுக்கடனை யடையுநெறி கொடுத்தருள்வான்
மருவாலி வரிவரிகள் மதுவுண்ணு மலர்ச்சோலைத்
திருவாலி மணவாளன் றிருவடியின் பொடுபணிந்தார். (௩௫)

†உருநாகை யனுமனுக்கங் குதவியைக்கண் ‡டிறைஞ்சேத்த
வருநாகை விழிபலவா வாய்த்திலனென் றகங்குழைந்து
கருநாகை யலையுந்த மணியீன்று கரைதவழுந்
திருநாகை யழகியார் சேவடிக்கீழ்ப் பணிந்தெழுந்தார். (௩௬)

---

* சிங்கமலைக் குமைத்தான் -மல்லரைச்சிங்கக் குமைத்தான்.

†உருநாகை-உருவின் இளமையைக் கண்டுஇறைஞ்சியேத்தவரும்விழி,கை நா

‡ இறைஞ்சேத்த - இறைஞ்சு என்பது-வரிப்புனை பந்தென்றதுபோல் இறைஞ்சி என்னும் வினையெச்சப் பொருளில் வந்தது.

அணிமுத்தம் பலவரன்றி யருகலையின் கரங்கொழிக்கு
மணிமுத்த நதியுடைசூழ் திருநறையூர் மாதவனை
நணிமுத்தர் பணிந்தேத்து நம்பியைத்தம் பிறவியெனும்
பிணிமுற்ற றவிர்ந்தொழியப் பேரன்பால் வணங்கினரே. (௩௭)

வம்பியலுஞ் சோலைநறை மணிமுத்த நதிமல்கிப்
பம்பியெழுந் திருநறையூர் பத்தர்பிரான் சென்றணைந்து
நம்பிதிருத் தாண்மலரே நமதுவினைக் கடல்கடத்து
மம்பியென நம்பியகத் தாரன்பி னொடுபணிந்தார். (௩௮)

செந்திருவை யொருவாத செகநாதப் பெயரானை
நந்திபுர விண்ணகர நாயகனை நந்திசிபிக்
கந்திலருள் புரிந்தானை யாரணமோ தரும்பொருளைப்
புந்திமகிழ் வொடுபரவிப் போற்றினர் புகழ்த்தாசர். (௩௯)

பெருவிந்த நிகர்முலையார் பிறங்குவயிற் றிடைப்புகுதுங்
கருவிந்தப் பிறவியொடு காணும லாட்கொள்வா
*னொருவிந்தப் பவநீக்கு மலர்மகளி னுடங்குறையுந்
திருவிந்த ளூரெந்தை திருவடிக்கீழ்ப் பணிந்தெழுந்தார். (௪௦)

இல்லைச் †சித் திவற்கடிமை யில்லாத வெனத்தேவர்
கல்லைச்சித் திரமாதாக் காட்டினான் றிருவடிப்பாற்
றொல்லைச்சித் திகள்பெறுவான் றொழுதுநிற்கத் துயில்வானைத்
தில்லைச்சித் திரகூடத் திருமாலைப் போய்ப்பணிந்தார். (௪௧)

ஓராம லேராய வெனவுரைக்கி லெவர்க்கும் வினை
சேராமற் பவநீக்கித் திருவடிக்காட் கொள்ளுதற்கே
யாராமம் விண்ணகரை யண்மியெழில் செயுங்காழிச்
சீராம விண்ணகரஞ் சேர்ந்தாரைத் தாழ்ந்தாரால். (௪௨)

பேரானைக் கோட்டிணைகள் பெயர்த்தானைத் திருக்கூட
லூரானைப் புள்ளரசை யூர்ந்தானை யொண்டுளவத்
தாரானைத் தானைபல தந்தானைப் பாஞ்சாலிக்
கோரானைத் தன்பெருமை யோர்ந்திறைஞ்சி யுவந்தனரால். (௪௩)

* ஒரு இந்து-அப்பவம் நீக்கும். † சித்து-ஆன்மா.

முடியானைப் பாரதப்போர் முடித்தானை முன்னளந்த
படியானை யாரணங்கள் படிப்பானைத் திருக்கண்ணங்
குடியானைப் பேய்ச்சிமுலை குடித்தானை வரத்தெவர்க்கு
மடியானை நரவரியாய் மடித்தானை யடிதொழுதார். (சச)

பெண்ணமர்ந்த திருமார்பிற் பிறங்கொளிய கவுத்துவமு
மெண்ணமர்ந்த முந்நூலு மிலங்குபத்த வற்சலனை
விண்ணமர்ந்த வுற்பலமா விமானஞ்சேர் பெருந்தளியிற்
கண்ணமங்கைத் திருநகர்போய்க் கைதொழுதார் பொய்தழுவார். ()

கவித்தலத்தி லரவணையிற் கண்டுயில்வா னருணீத்துப்
புவித்தலத்து வானத்துப் பொருந்துமின்பம் பொய்யெனவே
செவித்தலத்து நூலறிஞர் செப்புமுறை தேர்ந்தவர்கை
குவித்தலர்த்திக் கரிவரதக் கோமானைக் கும்பிட்டார். (சசு)

திருவெள்ளி யங்குடியாந் திருப்பதியி லமரர்பதி
யொருவெள்ளி* யங்கமலத் துறுபிரமன் பராசரனுங்
†கருவெள்ளி யியற்றுதவக் கெதிர்வந்து கருணையெனும்
பெருவெள்ளம் பெருக்கியசீர்ப் பெருமானைப் பேணினரால். (சஎ)

கணிமாடு மரதனமுங் கலவியிரு ளோச்சியொளி
யணிமாடம் பலபயின்றங் கழகுசெயு நாங்கூரி
னணிமாடு சென்றுலு நற்கதிக்கே யுய்க்குமென
மணிமாடக் கோயிலெனு மாப்பதிபுக் கேத்தினரால். (சஅ)

‡வைகுந்த விழிமடவார் மயனீக்கி யழியாத
வைகுந்த விண்ணகர்க்கே மன்னும்வழி யாதரிப்பார்
வைகுந்தன் விண்ணகர்போன் மலர்மாதோ டுறைபரனை
வைகுந்த விண்ணகரின் மருவிமல ரடிபணிந்தார். (சகூ)

கரிமேய விண்ணகரக் காவலனு மோதிமவெண்
பரிமேய நான்முகனும் பரம்புமொழி நிரம்பும் வெள்ளிக்

* வெள்ளி-சுக்கிரபகவான்.
† கருவெள்ளி-பிறவியை யிகழ்ந்து
‡ வை குந்த விழி-கூர்வேல்விழி.

கிரிமேய வைம்முகனும் கிளக்கரிய புகழ்ப்பொருளிவ்
வரிமேய விண்ணகரத் தமரரியே யெனத்தொழுதார். (ரு௦)

பெருத்தேயுஞ் சிறுத்துமுறு பெற்றியுடைத் தானுடலங்
கருத்தேயு ணிலையிலதென் காட்சித்தா னினியேனு
மருத்தேர்வண் டுளவணியு மாயனையாம் பணிதுமெனத்
திருத்தேவ னார்தொகைக்குச் சென்றிறைஞ்சிப் பயன்பெற்றார். ( )

ஒண்புருவச் சிலைமடவா ருடைமையுட னேமனனே
பண்புருவ முடையமென மகிழல்பகை யமனுளனு
லெண்புருடோத் தமப்பெயரி னெம்மானைத் திருமாதை
வண்புருடோத் தமந்தொழுது மெனப்புக்கு வாழ்த்தினரால். (ருஉ)

வம்பொன்று மரைமலர்மே லுன்முகனை நிகர்த்தவர்பா
சம்பொன்றத் தவமிழைக்கு நாங்கைநடுத் தலத்தேய்ந்த
வம்பொன்செய் விமானமதி லமர்ந்தானை யலர்மகளைச்
செம்பொன்செய் கோயிலிடைச் சென்றுபணிந் தகமகிழ்ந்தார். (ருங)

வெற்றியந்த ணப்பெரியார் வேதமொடு புராணமுறை
கற்றியம் பொலிப்பெருக்கே கடிமுரசோ டிகனுங்கூ
ருற்றியங் கொளிச்சுடிகை யுரகவணை மீதுதுயில்
தெற்றியம் பலத்தமர்ந்த செங்கண்மால் பதம் பணிந்தார். (ருச)

நணிக்கூடு நாளனைத்து நாமுடலே யோம்பினமா
லெணிக்கூடு நாளையெம னென்செய்து மெனவெண்ணிப்
பிணிக்கூட மருதலுறுப் பேறுபெறத் திருநாங்கை
மணிக்கூட மருவியமால் மலரடிகள் வணங்கினரால். (ருரு)

தருக்காவ லந்தாங்கிச் சமரில்வரு மல்லரைமுன்
முருக்காவ ளர்ந்தோங்கு மொய்ம்பினனை நாங்கைநகர்
மருக்காவ ளங்கூல மன்னுதட மலர்ப்பொய்கைத்
திருக்காவ ளம்பாடித் திருமாலைப் போற்றினரால். (ருசா)

குளத்தானை மூலமெனக் கூவவிரைந் தளித்தருளுக்
குளத்தானை யென்மானங் காக்கெனவோ தொருமாதின்

குளத்தானை மிகநீளக் கொடுத்தானைத் திருவெள்ளக்
குளத்தானை யடைக்கலநின் னடியனெனக் கும்பிட்டார். (ருள)

* இருப்பார்த்த நெஞ்சுடையே னீதறயை யொன்றிலெனு
ஓருப்பார்த்துப் பொருட்பார்த்தே யுவக்குமதி யுதையொழித்து
விருப்பார்த்துன் னடியிணைக்கே மெய்யன்பு செயவருள்வாய்
திருப்பார்த்தன் பள்ளியா யெனத்துதித்துச் சேவித்தார். (ருஅ)

வேறு.

இவ்வண்ணஞ் சோணாட்டி லீரிருப தெனும்பதியு மெய்தித் தாசர், மைவண்ணத் தெழின்மேனி மலர்மகளார் திருநிறத்தெம் மாலைப் போற்றி, யுய்வண்ண முடையோரா யுயர்பாண்டிப் பதிதொழுவா னுள்ளன் பீர்க்கக், கொய்வண்ண மலர்ச்சோலை குலவியமா லிருஞ்சோலை குறுகி னாரால். (ருகூ)

சோலைமலை யினிதேறித் தொடர்ந்துவரும் வாசனையாற் சூழுஞ் சென்ம, மேலைமலை நூபுரப்பேர் விழுநதியிற் றுளைந்தெழுந்து விண்ணி னோங்கிக், காலைமலை மீதிவருங் கதிரவனு நிகரிலொளி கஞலுஞ் சோதி, நீலமலை யெனவளர்ந்த வழகர்திருத் தாள்போற்றி நின்றார் மன்னோ. (சூ0)

அம்மலையி னின்றுதிருக் கோட்டியெனும் பதியண்மி யலர்வாழ் மாதைக், கைம்மலைமுன் னளித்தாரைக் கழறொழுது புறம்போந்து ககனத் தோங்கு, மெம்மலையு நிகரிலெழிற் சத்தியமா மலையெய்தி யிமையோர் கோவை, மும்மலமு மொழிப்பானை யுய்யவந்த நாயகியை முன்னின் றேத்தி. (சூக)

புல்லைநகர்த் திருப்பதியிற் போந்துதெய்வச் சிலையாரைப் பூவாழ் மாதை, மல்லன்மலர்த் தாள்பணிந்து மனத்திருத்தித் திருத்தண்கால் மன்னு மப்பன், சொல்லரிய புகழன்ன நாயகியா மிருவரையுந் துதித்து வானிற், செல்லுநறை மலர்ச்சோலை புடையுடுத்த திருமோகூர் சென்றார் மன்னோ. (சூஉ)

அப்பதியி னுறுகாள மேகமெனும் பெயரானை யழகார் நீல, மைப்புயலுங் காயாவு மரகதமு மறிகடலும் வடிவு கொண்ட, வொ

* இருப்பு நெஞ்சு- ஆர்த்தநெஞ்சு எனவுரைக்க.

ப்பரிய பரம்பொருளை யுலகீன்று காத்தழிக்கு மொருவன் றன்னைத், துப்பிதழார் திருமோகூர் வல்லிதுணைத் தாடொழுது தொழுதார் மன்னோ. (சுங)

திருக்கூடற் பதியணுகி யழகரோடு வகுளவல்லி திருத்தாள் போற்றிக், கருக்கூட லறவொழிக்கும் வில்லிபுத்தூ ரெனும்பதியைக் கலந்தே யாலின், றருக்கூடு மிலைத்துயிலு மொருவனொடு கோதை திருத் தாளுந் தாழ்ந்து, மருக்கூடு பொழிற்குருகை மாறனவ தரித் ததெனை மகிழ்ந்து சென்றார். (சுச)

குருகைநகர் தனிற்பொலிந்து நின்றபிரா னடித்துணைகள் கும் பிட் டேத்தி, யிருகைபடைத் துளபலன்க ளின்றேயா னெய்தினனெ ன் றெண்ணித் தாசர், வருகையொடு போக்கறுக்கும் வழியுலகோ ரெ ளிதுணர்ந்து வாழ வேண்டிப், *பெருகைபெறு மறைவடித்துத் தமி ழாக்கி யீந்தவன்றாள் பேணி னூரால். (சுரு)

பேணியமர் தொலைவில்லி மங்கலஞ்சென் றுயர்தேவ பிரானார் தாளும், வாணிமுத லோர்வணங்கு மரவிந்த லோசனியின் றாளும் வா ழ்த்திக், கேணியுறு தயிலத்தா லுடற்பிணியும் பவப்பிணியுங் கிளரா தோட்டுஞ், சேணிலவு மெழில்வான மாமலையி லமர்திருமா றிருத் தாள் போற்றி. (சுசு)

மலர்மகளைப் புளிங்குடியின் மன்னியகா சினிவேந்தை வந்து தா ழ்ந்து, பலர்புகழுந் திருப்பேரை மகரநெடுங் குழைக்காதர் பதுமச் செல்வி, யுலர்துணையு மடித்துணைகட் கன்பிழைத்து முன்பிழைத்த யாவும் போக்கி, யிலகியொளிர் மதிமான மேவியசீ வைகுந்தத் தெ ய்தி னூரால். (சுஎ)

அவ்விடைவை குந்தபதி யெனும்பெயரி னம்மானை யம்மானே வும், வெவ்விபக்கோ டொசித்தானை வைகுந்த வல்லியுடன் விளங்கு வானை, யெவ்வமறப் பணிந்துவர குணமங்கைப் பதியெய்தி யெம் மோய் மாலைக், கவ்வையொழித் தருள்கவெனக் கழறொழுது திருக் குளந்தை கலந்தார் மன்னோ. (சுஅ)

---

* பெருகை பெறுமறை—பெருகிய அழகுபெற்ற வேதம்.

குளந்தைநகர்க் கண்மாயக் கூத்தனொடு கமலையையுங் கும்பிட் டாரு மளந்தரிய வரியபுகழ்க் குறுங்குடியின் மன்னுநம்பி யையவர் செல்வி யுளந்தவிரா திவரடிக ளுறத்தாங்கி யுவந்தேத்தித் திருக்கோ ளூரில் வளர்ந்தொளிசெய் திருமாதை வைத்தமா நிதியோடு வணங்கினாரால்.

பாண்டியநாட் டீரொன்பான் பதிபணிந்து மலைநாட்டிற் பதும நாபன், வேண்டியநன் களித்தனந்தன் மிசைத்துயிலு மனந்தபுர மேவிப் போற்றி, யாண்டிருந்து வண்பரிசா ரம்புகுந்து திருவாழு மகலத் தெம்மான், றாண்டுசூட ரொளிமேனி தொழுதுதிருக் காட்க ரைக்குத் துன்னி னாரால். (எ0)

துன்னியப்ப னுடங்குறையும் பெருஞ்செல்வ நாயகியின் றுணைத்தா ளேத்தி, மன்னுமெழிற் றிருமூழிக் களத்தானை யப்பதி யின் மருவிப் போற்றிப், பன்னுதிருப் புலியூரின் மாயனொடு பொற் கொடியாள் பாதந் தாழ்ந்து, சென்னிமறை யுறைவானைத் தேவர்க டம் பெருமானைச் செங்குன் றூரில். (எக)

சென்றிறைஞ்சித் திருநாவாய் நாரணனை மலர்மங்கை தேவை வாழ்த்தி, வென்றிவள மலிவல்ல வாட்கோலப் பிரானைமலர் மேவி னானை, நின்றுபணிந் தரவணைமீத் துயில்வானைக் கமலவல்லி நீங்கா தானை, யொன்றுமன னொடுவெண்வண் டூருறையும் பரனடியை யுச்சி வைத்தார். (எஉ)

கேட்டாலும் பவமொழிக்குங் கேசவன்மா வுரகமிசைக் கிளர வோங்கும், வாட்டாறுங் கைதொழுது வித்துவக்கோட் டுய்யவந்த மாலைப் போற்றிப், பாட்டாருந் துளவணியுங் கடித்தான நாரணனை ப் பரவி யார்க்கும், வீட்டாரு நெறியளிக்குந் திருவாறன் விளைவாழ் த்தி மேவி னாரால். (எங)

மலைநாட்டிற் பதியொருபான் மூன்றினையும் வணங்கிநடு நாடு ம ன்னிக், கலைநாட்டு மயிந்தைநகர்த் தெய்வநா யகனொடு கமலை பாதந், தலைநாட்டிப் பெறும்பேறு தணவாது திருக்கோவ லூரிற் சார்ந்து, சிலைநாட்டுங் குடையாயன் றிருக்கோவல் வல்லியிவர் திருத்தாள் தாழ்ந்தார். (எச)

நடுநாட்டிற் பதிபிரண்டு முளநாட்டிப் பணிந்தேத்தி நங்க டா சர், நெடுநாட்ட மொடுதொண்டை வளநாடு தொழும்வேட்கை நிரம் பச் சென்றங், குடுநாட்டி யொளிர்வானம் விதானமென மேலோங்கி யுயருங் கச்சிப், படுநாட்ட மெட்டுடையான் பணிந்தெழூஉ மத்திகி ரிப் பால்வந் துற்றார். (எரு)

அத்திகிரிக் கரிவரதன் பெருந்தேவி யாமெங்க ளன்னை பாதம், பத்திமையிற் பணிந்துசிங்கப் பெருமானைத் தேவியொடு பரவி யின் ப, முத்திதரு மட்டபுய கரத்தாதி கேசவனை முளரி மாதை, நத்தி யடி பணிந்துதண்கா விளக்கொளியை மரகதத்தை நற்று டாழ்ந் தார். (எசு)

அன்னபதிக் கணித்தாய தூப்புல்வரு நிகமாந்த வாசாற் போ ற்றி, முன்னவரும் வேளுக்கை முகுந்தனிரு சரணமலர் முடிமேற் றாங்கிப், பன்னுதிருப் பாடகத்துப் பாண்டவர்க்குத் தூதுபுரி பரம னோடு, மன்னுருக்குமிணிசத்ய பாமையடி வணங்கிமன மகிழ்ந்தார் மன்னோ. (எஎ)

நீரகத்து நிலமங்கை சகதீசற் பணிந்துநிலாத் திங்கட் டுண்டப் பேரமரும் பதித்திங்கட் டுண்டனொடு நிகரில்லாட் பேணிப் போற்றி யூரகத்தி னுலகளந்த பெருமானோ டமுதவல்லி யுவர்தா ளேத்திச் சீரகத்தா ரணிவணிக குலதிலகர் திருவெஃகாச் சென்றார் மன்னோ.

சென்றுசொன்ன வணஞ்செய்த பெருமானைக் கோமளத்தைத் திருத்தாள் போற்றிக், கன்றுகொடு விளவெறிந்த காரகத்தி னுறுக ருணா கரனை வாழ்த்தி, நின்றெழில்செய் கார்வானக் கள்வனையுங் கம லையையு நேயத் தேத்தித், துன்றுபொழிற் றிருக்கள்வ னூராதி வராகன்மா துணைத்தாள் போற்றி. (எகூ)

திருப்பவள வணப்பதியிற் பவளவல்லி பவளவணன் செம்பொ ற் பாதம், விருப்பமிகத் தொழுதுபர மேச்சுரவிண் ணகர்க்கேகி விம லை யோடுங், கருப்பமுறு தொழித்தருளும் பரமபத நாதனிரு கழலு மேத்திப், பொருப்பையொரு குடையாக்கொள் புனிதனமர் புட்கு ழிக்குப் போந்தார் மன்னோ. (அ0)

போர்தந்தப் பதிச்சமர புங்கவனை மரகதப்பேர்ப் பொன்னைப் போற்றி, யேந்துமெழிற் றிருநின்ற வூர்ப்பத்த வற்சலனை யெனைப் பெற்றானைச், சேந்தமரை மலரடிகள் பரசியெவ்வுட் டிருப்பதிபோய்ச் சொர்ன வல்லி,காந்தனராத் துயில்வீர ராகவனைப் பணிந்துமனங் களித்தா ரன்றே. (அக)

நீர்மலையி னீர்வண்ணன் மலர்மங்கை யடியிணைக ணெடிது தாழ்ந்து, கூர்புகழி னிடவெந்தை நித்தியகல் யாணர்கோ மளமாங் கொம்பர், சீர்திகழும் பதயுகளம் பணிந்துதிருக் கடன்மல்லை சென்று பூவி, லேர்மலிய மேவுதல சயனனொடு நிலமாதை யேத்தி னாரால்.

அப்பதியி னின்றல்லிக் கேணியம ரருச்சுனசா ரதியை யெங்க ளொப்பரிய வுருக்குமிணி யுடன்பணிந்து திருக்கடிகைக் குவந்துபோந்து, செப்புமுல கருளமுத வல்லிபடர் யோகநர சிம்ம மூர்த்தி, துப்புறழு மம்புயத்தின் றுணைதாழூஉ விணைதாழத் துலங்கி நின்றார். ()

தொண்டைவள நாட்டினுறு நாலைந்தோ டிரண்டுபதி தொழுது தாச, ரண்டர்தொழும் வடநாட்டி னுளபதிக ளடைந்துபணி யாசைமேன்மேற், கொண்டெழுந்த மனத்தினராய்ச் சிறப்பாகத் திருப்பதிப்பேர் குறித்துக் கொள்ளுந், தண்டமிழி னிலத்தெல்லை யெனநுவலும் வடமலையைச் சார்ந்தார் மன்னோ. (அச)

வடமலைபின் சாரல்புகுந் தாழ்வார்தீர்த் தத்தாடி மகிழுமுள்ளத், திடமலையா தூக்கமொடு மலையேழு மினிதேறிச் செனன நோய்கள், படமலையுங் கோனேரி படிந்தாதி வராகனிரு பாத மேத்திக், கடமலைமுன் காத்தானை யடியவருக் கருள்வானைக் கமலை யானை. ()

வேங்கடமா மலையானை யெங்கள்குல தெய்வத்தை விரும்பித் தென்பா, லாங்கடைவார் தமைப்புரக்க வரியையெனு மெங்கள்பதி யடைந்த மாலைத், தீங்கொழியப் பணிந்தெழுந்து திருச்சுகனூர் சென்றலர்மேற் றிருவின் செய்ய, பூங்கமலக் கழலிணைகள் தொழுதுசிங்க வேள்குன்றம் புகுந்தார் மன்னோ. (அரு)

சென்றந்தப் பதியினர சிம்மனொடு மிலக்குமியைச் சிந்தித் தேத்தி, *யென்றென்றுங் குலத்துதித்தா ரரசுபுரி யயோத்திநகர்க்

* என்று—சூரியன்.

கெய்தித் தாசர், குன்றென்று மிணையில்புயத் தசரதர்க்குத் திருமக னாக் குலவி னானை, நன்றென்ற வெலவர்க்குமரு டருசீதா பிராட்டி யுட னடிப் போற்றி. (அஎ)

சேர்ந்துதவத் தினருறையு நைமிசா ரணியத்திற் றேவ ராசன், வார்ந்தமதுப் புண்டரிக வல்லியிவ ரடியிணைகள் வணங்கி யேத்திச், சார்ந்ததிரு மூர்த்திதிருத் தேவியெனு மிருவரையுஞ் சாலக் ராமத், தார்ந்துபணிந் தனர்பதரி காச்சிரம மெனும்பதியை யடைந்தார் மன்னோ. (அஅ)

அடைந்திணையில் பதரிநா ராயணனே டரவிந்த வல்லி பாத, மிடைந்தெழுந்த வன்புகொடு தொழுதுகங்கைக் கரைக்கண்ட மேவி வேதந், தொடர்ந்தறிய வரியபுரு டோத்தமனைப் புண்டரிகை துணை யைப் போற்றிப், படந்திகழு மரவமிசைத் துயில்வானைத் திருப்பிரு திப் பதியு ளானை. (அகூ)

சென்று *பொறி யொடுவணங்கிக் கல்யாண நாரணனைத் திரு வைச் சங்கந், துன்றுகடற் றுவாரகையிற் பணிந்துவட மதுரைநகர் துன்னி மாலை, யொன்றியசத் தியபாமை யுடன்போற்றி யாய்ப்பாடி யுவந்து கண்ணன், றன்றுணைய வுருக்குமிணி யடிமலர்க ளேத்திமகிழ் சார்ந்தார் தாசர். (கூ0)

பார்க்கடலிற் கடன்மகளோ டரனயனே முதற்றேவர் பரவி நிற்பக், கார்க்கடலொப் பெனவரவிற் றுயில்வ்யூக மூர்த்தியைநங் கருணை மாலை, வார்க்கடங்கா தெழுதனத்து மாதர்மய லிகந்திகலா வழிபா டாற்றில், யார்க்கடந்த நின்பெருமை யிதுசெய்க மெனமன னுக் கறிவித் தாரால். (கூக)

சீர்பெருகும் பரமபதத் திருநாட்டிற் பரவாசு தேவன் றன்னைப், பேர்பெரிய பிராட்டியொடு நித்தியரு முத்தர்களும் பெட்பிற் சூழு, மேர்பெருகு மொளிப்பிழம்பை யனந்தாங்க விமானத்தி லிருக்கின் றானை, நேர்பெறக்காண் குவைநெஞ்சே யடிமையினிற் பிறழாது நிற் றி யென்றார். (கூஉ)

* பொறி - இலக்குமி.

இத்திறமீ ரைம்பதுட னிருநான்கு பதிகளுவந் தேத்தித் தாசர், மெய்த்திறத்துப் புராணங்கள் புகழ்தலமோ ராறுதொழும் விழைவு கொண்டே, யெத்தரமு மிணையிலெது கிரித்திருநா ராயணனை யெய்திப் போற்றிச், சித்திதருஞ்சீமுட்டத் தாதிவரா கன்பாதஞ் சென்று தாழ்ந்தார். (கூங)

எல்லவன்றன் மகளொழுக்கஞ் செய்விருந்தா வனத்தினிடை யெய்தி ராதா, வல்லவனை வணங்கியெழிற் பாபநா சப்பதிவாழ் மாலை வாழ்த்திப், பல்லவஞ்சேர் சண்பகா ரணியமெனும் பதியினிற் கோ பாலற் போற்றிச், சொல்லுமெதி பதிவந்த பெரும்பூதூர்க்கேசவனைத் தொழுதார் மன்னோ. (கூச)

அ-வது தலயாத்திரைச் சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் - சகூஎ.

---

## கூ-சங்குசக்கராங்கனச் சருக்கம்,

---

குருவி னுரையாற் றிருப்பதிகள் கும்பிட் டேத்தி மகிழ்தாசர்
பொருவி லாசா னிணையடிகள் பொருந்தி வணங்கு மவாவீர்ப்பத்
திருவை யகலா வாமருவித் திருமா லுறையுந் தேரழுந்தூர்
மருவி யரங்க விலக்குவனுங் குரவன் பாத மலர்பணிந்தார். (க)

பணியு மடிமைப் பெருமையரைப் பரிந்து நோக்கிப் பகர்கின்றார்
மணியுந் திருவு முறைமார்பன் வதியும் பதிகள் வணங்கிநினை
நணிய சுற்ற மெனத்தொடர்ந்தார் நண்ணு தொழியப் பெற்றுமனந்
திணிய சாந்த மடைந்தனையோ திறம்பா நிலைமைத் தோவென்றார். ()

வேறு.

தேசிக னருணிறை திருக்க ணோக்கினேற்
காசில வினவிய வனைத்து மாயவான்
மாசிகந் துயர்நல மருவிற் றென்பிறப்
பீசநின் னடியனேன் றியைந்த பின்னையே. (உ)

இன்னணந் தாசரங் கியம்ப நற்றவன்
றண்ணடித் தாமரை வண்டிற் சாருமோ
ருன்னுநல் லான்குலத் துதித்துச் சீமுட்ட
மன்னிய சக்கர வர்த்திக் கோதுவான். (௬)

சுற்றிய மனைமுதற் சுற்ற நீக்கியென்
பற்றையே யனைத்துமாய்ப் பற்றுந் தாசரை
நற்றளத் தாமரை நயனன் பத்தரி
லுற்றுறை யொருவராய்ச் செய்ய வுன்னினேன். (௭)

தீர்த்தனற் புகழ்சொலுங் கவியைச் செப்புதல்
பேர்த்தல்கை விரலினைப் பெயர்பொ றித்துமார்
பார்த்தலன் னுன்பெயர் தனக்கு மார்தரச்
சார்த்தரு சியமெனச் சாற்று நூல்களே. (௮)

* வளைவளை யந்தணர் வலத்தி டத்தினி
லளைருக பவமுக வன்ன வாறுபின்
விளைதிரி வருணர்க்கு மேவ லொப்பென
வுளவதர் வணவுப நிட்டதத் தோதுமால். (௯)

புண்டர மூர்த்துவம் பொறித்துச் சக்கரங்
கொண்டெவன் பிரணவங் கூறி யொப்பில
ணண்டிய பராற்பர னந்தர் யாமியாம்
பண்டைநா ரணன்றனைப் பற்று முள்ளுளான். (அ)

அன்னவன் றனைமகா னென்ன வாரெசுர்த்
துன்னிய கடமெனுஞ் சாகை சொல்லுமான்
மன்னுசெந் தாமரை நயன மாப்பவ
மென்னுமக் கடல்கடந் தேற நின்னதாம். (௯)

சங்குசக் கரங்கடந் தோள்க டாங்கியு
மங்கலி லாயுத வகையை முன்னையோ
ரங்கமீ தணிவரென் றிருக்கி லாய்தரத்
தங்குபாற் கலமெனுஞ் சமிதை சாற்றுமால். (௧௦)

---

* வளை - சக்கரம். வளை - சங்கு.

தோட்டுணை * வளைத்துணை துலங்கு வோன்பவம்
வாட்டுவ னென்னமற் றுளிகள் மாழ்கமேற்
காட்டுமா தேசுடைத் திகிரி கைத்தலந்
தீட்டுதல் கடனென வெசுரிற் செப்புமால். (கக)

சக்கர மாதிய தரித்தொர் சேனமுஞ்
சக்கரத் தான்பரி வாரஞ் சார்ந்ததாற்
† சக்கரத் துழல்பவ னீங்கத் தாங்குக
சக்கர மெனச்சொலு மிருக்குஞ் சாமமும். (கஉ)

மாயவ னாயுதக் குறிகள் வாய்த்திலின்
மேயினும் விண்டுவின் பதத்து மேவுவ
ராயதா லப்பொறி யண்மி யாமுமத்
தூயகந் துன்னுமென் றதர்வ ணஞ்சொலும். (கஙு)

தேவர்க்குப் பலஞ்செயுந் திகிரி பாவகன்
தாவமேய் தரவென் றரிக்க லுற்றன
னுவனே பவமொழித் தழிவில் வைகுண்ட
மேவுவ னெனுமுறை யிருக்கில் விள்ளுமால். (கச)

பவித்திர மென்பது பாவ கற்சொலுஞ்
‡ சவித்திரத் ததனுரை சகத்தி ராரத்தைத்
தவிர்த்தில தன்னது சாற்று நேமியைப்
புவித்திரு நாயகன் பொங்கு நேமியால். (கரு)

உட்விடைத் தாபமுற் றுடைய னெய்துவன்
றடையில்சா லோகசா யுச்ய மென்றவை
யடைவுறு கீதத்தா லமல னின்புற
நடைபெறு சாமமா மறைந விற்றுமால். (கசா)

வேறு.

ஙங்கு நிறைந்து பவித்திரமென் றிசைக்குமாழிப் பெருமானே
தங்குஞ் சகத்தின் பதிமேனி தணவாச் சூழு முன்னலே

* வளைத்துணை – சங்குசக்கரம்.
† சக்கரம் – பிறப்பு.
‡ சவித்திரம் – ஒளியின் நிலைப்பு.

பொங்குந் தாப மடையாத * புரத்த ரடையார் பிரமத்தை
யங்க தடைவோர் தரிப்பவரே யாமென் றறையு மறைமூன்றும். ()

சரணம் விதநம் பவித்திரமாய்ச் சாற்று மொளிய தெதுவெதனாற்
றரணக் குறியோன் பவக்கடலைத் தாண்டப் பெறுவ னந்தவெழிற்
கிரணத் திகிரி யினற்சுத்தி கிளர்ந்து பகவற் பத்திக்கு
முரணைப் புரியும் பவமனைத்து முற்று தொழித்துக் கடக்கின்றும்.

ஒளியு மழகு முடைத்தாகி யொப்பின் றுயர்ந்து பவித்திரமாய்
மிளிரு மோக்கந் தருமாழி மேவுஞ் சுகங்க ணமச்குலகி
லளியோ டளிக்கக் கடவதென வறையு மந்தக் காடகத்திற்
றெளிய வின்னும் பலநூல்கள் செப்பு மவற்றுஞ் சிலசொல்வாம். ()

ஆக்கை யுடையா ராழிவளை யடையக் கடவ ரவைகொண்டு.
சேக்கை யிருக்கை யொழித்துமகார் சேரும் பசுக்க ளுடன்மனையிற்,
பூக்கும் பொருள்க ளெவற்றினுக்கும் பொருந்தக் குறிகள் புரிகவெ
னத், தூக்கி மறையி னுண்மைநன்கு துணிந்த சாண்டி லியர்சொன்
னர். (உ0)

திருமா லாழி புயத்தினிடைச் செறிந்த மனித ரன்றியெவர்
வருமா வுலகி லெமனணை கடக்க வல்லா ரெனவிண்டு
தருமோத் தரத்தி லெமனெடுகிங் கரன்முற் புரியுஞ் சம்வாதந்
திருகா துரைக்கு மின்னுமிவர் செப்பல் செப்பும் பராசரனே. (உக)

அவையா தென்னில் யமனுரைப்ப னறத்தா றெழுகுங் கிங்கரனை
நவையு மழிவு மிலாச்சொருப நண்ணும் விசுவம் பரனெவன்பாற்
கவையின் றுறைவா னவ்வுயர்ந்தோன் கரத்தி லாழி நமது பலக்
குவையை யொழிக்கு மவனெக்கு மிடநாங் கூட லரிதெனவே. ()

என்ற னாழி புயத்திருத்தி யெனக்கே யடிமை யெனவொருவன்
றுன்று முலகிற் கிடைப்பரிது †சூரன் புதல்வன் கொடியவுரை
யொன்று முலவா தவன்செவியி லுயனே யவனின் மேலானே
னென்று மச்ச மெனுநூலி லெழில்சேர் திருமா லிசைத்துளனல். ()

---

* புரத்தர் - உடம்பினர்.

† சூரன்புதல்வன் — இயமன்.

வேறு.

அருச்சுன வேறு தெய்வ வாலயம் புகுதல் போற்ற
லுரித்தல நீக்கியென்று மூலகுடம் பாய வென்பா
லிருத்திடு மனத்த ராகி யெனதையா யுதங்கள் மேனி
தரித்திடல் வேண்டு மெந்தத் தலத்திடைச் சார்கின் றுரும். (உச)

மங்கல வணியே மாதர் மகிழ்நரை யுடையா ரென்ன
வங்கறி வுறுத்தல் போல வணிவளை யாதி தோளிற்
றங்கிடத் தரித்த லீச சம்பந்தங் காட்டு மென்னப்
புங்கமேய் விண்டுதத்வ மென்பதிற் புகன்றான் மாயன். (உரு)

விண்டுவி னடியாற் காணுஉ யமபடர் வெருவா நிற்ப
ரெண்டரு மவர்பாற் குற்ற மியற்றிடி னுலகை மாய்க்குங்
கொண்டனோர் வணத்தெங் கோமான் பெருமையா னரக மன்னோர்
கண்டமக் கெட்டு கிற்குங் காட்சிய தாகா தென்றும். (உசா)

காண்பவர் பாவந் தீர்ப்பா னாழிசேர் கரத்தின் மூல
மாண்பினர் கங்கை யாதி தீர்த்தங்கண் மாட்சி யெய்தச்
சேண்பெறு கூல மேவித் திகழ்கின்றா ரெனவுஞ் செப்பு
மேண்பெறு நூலிற் சேர்த்த விதிகாச சமுச்ச யந்தான். (உஎ)

வருணவாச் சிரமந் தப்பா வழியொழு குநராய் நாளு
மருணனோர் திகிரி தோளி லார்ந்தநால் வருணத் தாராற்
கருணைசேர் கமலை காந்தன் கைதொழற் குரியா னென்னப்
பொருள்பொதி யைந்தாம் வேதம் புகலுறும் பொருந்த மன்னோ. ()

வேறு.

பத்தன் புயத்தில் வளைநேமி பரித்தே திருமா லடியிணைக
ணித்தம் போற்றக் கடவனென்று நிகழ்த்து மிவ்வா றேபுரிவோன்
முத்த னாகி யடைந்திடுவன் மோக்க மெனவு மொழியுமெழிற்
கத்த னரியே பரனென்னக் கழறும் பதும புராணநூல். (உகூ)

தவத்தை யிழைத்தல் செபம்புரித றழன்மீச் செய்யு மோமங்க
ளுவத்த றருமா தானங்க ளுவைக ளாதி யுளுற்றுகின்றோர்
பவத்தை நீக்குந் திகிரிபுயம் பதித்தோன் முன்னிற் செயிலொன்றே
நிவத்த பலன்கள் பலவளிக்கு மென்னநிகழ்த்தும் பாகவதம். (௩௦)

வேறு.

புயந்தணி திகிரி யாளன் புகுமிடஞ் சுரந்தி வெப்ப
மயக்குறு கள்ளர் துன்ப மன்னிடா வந்த மேலோன்
நயத்ததோ ளாழி காண்பார்க் காண்டுசெய் பாவ நண்ணு
துயத்தகு மெனவும் பாக வதமினி துரைக்கு மன்னே. (௩௧)

விண்டுநாந் தகத்தை மார்பில் வில்லினைச் சிரத்திற் சேர்த்த
தண்டினை நெற்றி மீது சக்கரம் வலமார் தோளி
லண்டிய விடத்தோள் சங்க மணிருக பத்தி மிக்குக்
கொண்டிடு மனத்தோ டென்னக் கூறுமா லாக்கி நேயம். (௩௨)

ஐந்தெனு மாயு தங்கட் கம்மனுப் பதிட்டை செய்து
வெந்துறு தீயின் வைத்து விதிமுறை பூசை யாற்றித்
தந்தம மேனி தோறுந் தருங்குறி கொளக விவ்வாற்
செந்திரு மணாளன் வைகு முலகிடைச் சிறப்ப ரென்ப. (௩௩)

வரமுனி வரர்கள் சொற்ற வாமனம் வராகம் வாயு
திரமுறு தித்தங் காந்தந் திகழ்தரு கருட மாதி
யுரமுறு நூல்க ளெல்லா மின்னவா றுரைக்கு மேலாந்
தரமிலா வற்ப நூல்கள் சாற்றுதல் குறிக்கோ ளன்றால். (௩௪)

புண்டரோர்த் துவத்த னாகிப் பொருந்துபல் போகத் தாலே
கண்டடை பரம வீசற் கருதியே தியானஞ் செய்வோன்
பண்டைய பாவ தன்மப் பற்றினைத் துரப்பா னென்னக்
கொண்டுப நிடதங் கூறுங் குவலயந் தெளிய மன்னே. (௩௫)

ஊர்த்துவ திலகந் தீட்டி யுயர்பர மேசன் றன்னை
யார்த்தியிற் புருட சூத்த மந்திரார்க் கியங்க ளாலும்
பூர்த்தியெய் பூசை செய்வோன் பொருந்துமங் கவனை யெண்ணச்
சேர்த்தகா டகந்தா னன்கு செப்பிடுந் தெரிய மாதோ. (௩௬)

யாகச ரீரிபூசை யென்பவை யூர்த்து வத்தோ
டேகமா மனத்திற் செய்வோ னிலக்குமி காந்தன் றானம்
வாகையோ டடைவன் வந்த வழியெழு குலத்துள் ளாரைச்
சேகறு கதிக்க னுய்ப்பா னெனப்பல்ல சாகை செப்பும். (௩௭)

மாலடி யார்க ளன்றி மற்றைய ரேனுந் தங்கள்
பாலமீ தூர்த்து வத்தைப் பரித்தவி செபதானங்க
ளேனுறப் புரிவா ராயி னிவர்பல னெய்து வாரிஞ்
ஞாலமீ தெனவு நன்கு நவிற்றுமாற் பல்ல சாகை. (௩அ)

நங்கண்மா லடிவைப் பென்ன நடுவெளி யுளதா யோங்கும்
புங்கமாம் புண்ட ரத்தைப் பொருந்துவோன் புண்ய வானுய்ச்
செங்கண்மா லுவப்போ னாகிச் சேருவான் மோக்க மென்னச்
சங்கையி லாது சாற்று மதர்வண வேதந் தன்னில். (௩௯)

நீரிடை மூழ்கி மேனி நின்மல னாகிச் சிந்தை
யோரிடத் திருத்தி நேரே யூர்த்துவந் தரிக்க வென்று
நேரிய விளையாட் டேயுங் குறுக்கிட னீக்க வென்றுஞ்
சீரினக் கினிவேச் சிய கிரகியஞ் செப்பு மன்னே. (௪0)

பூசனை செபமோ மாதி புரிகின்ற வந்த ணாளர்
நேசமோ ரூர்த்து வத்தை நிகழ்மூன்று காலந் தப்பா
தாசரித் தணிக சுத்தி யஃதன்றிச் சாரா தென்னத்
தேசினிற் சிறந்த போதா யனமுனி செப்பி னானல். (௪௧)

பூசுரர் குறுக்கே பூசிப் பூசனை புரிய லாகா
தாசிலா தூர்த்து வத்தை யணிகென மச்ச நூலு
மேசி னூர்த் துவத்தை யின்னு னின்னவா றிடுக வென்னப்
பேசுமா னார தீய மென்னுமா னூலும் பெட்ப. (௪௨)

வெள்ளிய திருமண் கொண்டு வேதியர் முதல யாரு
மொள்ளிய லலாட மீதி னூர்த்துவ திலகந் தன்னை
நள்ளுற வணிந்து வேத நவிற்றிய வாறு கன்மந்
தள்ளுறு திழைக்க வென்று தட்டற வுரைத்த லோடு. (௪௩)

பகவனுன் மணத்தைக் கொண்ட பானஞ்செய் தனபு சித்த
மிகவுறு புண்ணி யற்கே மேவுவ தினைத்தற் கென்றுஞ்
செகமிசை யவற்கே யாரு நிவேதனஞ் செய்து சுத்தி
தருமவை புசிக்க வென்று மாவுப நிடதஞ் சாற்றும். (௪௪)

அன்புகொள் மனத்தின் மேலா மரியினைத் தியானித் தன்னோற்
கின்புடன் பாவித் தன்ன நிவேதன மியற்றி யஃதை
முன்புறு பிராண னாதி மொழிமறை களினு லோமந்
துன்பற முயற்று மென்ன வியாதர்வே தத்திற் சொன்னார். (சரு)

முகுந்தன்முற் படைத்த வன்ன முதலிய புசிக்க வென்று
மிகுந்தசீ *ரிலேகர் போற்றும் விட்டுணு தாசர் கட்கே
யுகந்தந்த வன்ன மாதி யுண்ணிய வளிக்க வென்றுஞ்
சுகந்தகச் சொல்லும் போதா யனர்சொலும் விண்டு கற்பம். (சசு)

சானகி யுடனி ராமன் றரும்வகை புலன டக்கி
யானநல் லவிவை நாரா யணற்கோமஞ் செய்து சேட
மானதக் கொள்கை முற்ற மகிழ்ந்துண்டு துயில்வா னென்ன
ஞானநன் கருளி ராமா யணநூலி னவிலு மன்றே. (சஎ)

நல்லவா மனத்த னாயி ரகசியா மநாயந் தன்னிற்
சொல்லிய வாறே யாம செபஞ்செயுந் தூய்மை யோர்க்கு
மல்லியங் கமலக் கண்ண னடியர்க்கு மவன்கொள் சேட
மொல்லநன் களிக்க வென்ன வுரைக்குமா லந்நூல் பின்னும். (சஅ)

பற்பல வுரைப்ப தென்னே பகவனை வேத்தி யத்னத
யற்பொடு புசிக்க வென்ன வறைபிர மாணங் கோடி
முற்படப் புகன்ற விந்தப் பிரமாண மொழிகண் ஞான
விற்பனர் மேலோர் யாரும் மெய்யெனக் கொண்ட வாகும். (சகூ)

இன்னவா றீச னாணை யிருத்தலி னுதார தீர
மன்னுநந் தாச ருக்கு வளைபுயத் தணிந்து மாலின்
றுன்னிய வடிய ராகச் செய்கவித் தூய கன்மம்
பொன்னணி மார்பி னாற்கு மகிழ்நனி புரியு மென்றார். (ருo)

ஆரிய முனிவ னிவ்வா றறைந்தசொல் லமுத மூற்றுந்
தாரைநே ரெனவே வேத சாரமாய்ச் சக்ர வர்த்திச்
சீரியன் சிரமேற் கொண்டு திருந்தகு தாச ரோடு
நேரிய விடைபெற் றுன்ற நெறியிற்றம் பதிக்கட் புக்கார். (ருக)

---

* இலேகர் - தேவர்.

ஆரியர்ச் சீர்த்த சக்ர வர்த்தியா சாரியார் தாஞ்
சீரிய வரங்க ராமா னுஜமுனி செப்பும் வண்ண
நேருறத் தன்னைப் போற்றி நிற்கின்ற தாசர்க் காங்கே
சார்தரு விதிவ ழாது சக்கராங் கனத்தைச் செய்தார். (ருஉ)

புண்டரந் தாப நாமம் புகலுமந் திரமி யாக
மெண்டரு மைந்தில் யாக மந்திர மிவற்றை நீக்கிக்
கொண்டனர் சக்ர வர்த்திக் குருபா னிடத்து மூன்றும்
பண்டையா கூழ்முன் னின்ற பாக்கிய மதனாற் றூசர். (ருங)

வணிகர்தங் குலதீ பம்போல் வந்தவ தரித்த தாச
ரணிகலன் மணிபொன் னுசை யம்பரம் வெண்பட் டாரும்
பணிதருங் குருவிற் கம்ம பற்றுதம் மனத்தி னுசைப்
பிணிதவிர்ந் தொழியத் தந்து பெரிதுபூ சனைபு ரிந்தார். (ருச)

சங்குசக்கராங்கனச் சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ருஉக.

---

## கO—மந்திராராதனச் சருக்கம்.

---

சக்கர வர்த்தி யாசான் சங்கசக் ராங்க னத்தான்
மிக்கொளிர் புயத்தி னோடு மேவிய தாசர் தம்மைத்
தக்கசீ ரரங்க ராமா னுசமுனி தயைமீக் கொண்டே
யக்கணந் திருக்க ணோக்கா லருள்புரிந் திட்டான் மன்னோ. (க)

இம்முனி வேந்தன் பாத விணைமலர்ச் சார்பி னீங்காச்
செம்மையி னொழுகிப் பன்னாட் செல்லவோர் நாளி லன்ப
ரம்முனி யடிகை கூப்பி யாகமந் திரத்தை யாக்கைச்
சும்மைதாங் கடியே னுய்யத் தெருட்டுக வெனத்து தித்தார். (உ)

துதித்திடு தாசர்க் கந்தத் தூரியவாச் சிரம தீர்த்த
னுதித்தநற் கால மென்றைக் குறுகின்ற தன்று வானிற்
குதித்தெழுந் தருவி பாயும் வேங்கடக் குன்றத் தெம்மான்
கதித்தெழு மருளால் வேட்ட காரியங் கூடு மென்றான். (ங)

குற்றமு மொப்பு மில்லாக் குணகணா லயமாந் தாசர்
நற்றவத் தாசான் பாத நளினநா ளும் போற்றி
முற்றுமந் திரமி யாக மொழிதரற் கடிக ளென்பா
லுற்றருள் புரித லென்றே வெனக்கவன் றுறையு நாளில். (ச)

தேசிகன் கனவில் வந்து திருமகண் மணாளன் கூற
மாசிக லன்புந் தன்பான் மறைகொளு மவாவு நோக்கித்
தாசரிற் சிறந்து ளார்க்குத் தருவென்மந் திரமின் றென்ன
நேசமோ டரங்க ராமா நுசமுனி நினைத்தா னன்றே. (ரு)

வேறு.

நந்திரு நாதனுக் கடிய னானவன்
சுந்தர வடியிணை தொழுத லேசெய
லந்தமில் லவைக்கவன் சரணஞ் சார்கெனு
மந்திரப் பொருளையு மகிழ வோதினான். (சா)

தினத்திடைப் பகலிராத் திருத்த வேண்டுவ
வினத்ததா மைவகை யாக மீதெனத்
தனைச்சரண் புகுந்துள தாச ரோருமா
றனத்தகு குருபர னுணர்த்தி னானரோ. (எ)

கண்டுயி லொரீஇயடி கழுவி யாசமித்
தெண்டரு மெழுமுறை யரியென் றோதிப்பின்
கண்டுபே ரன்பையக் கரிக்கு வீடருள்
கொண்டலை யுளத்திடைக் கொள்ளல் வேண்டுமால். (அ)

முன்பல பிறந்தையின் முற்றி நீக்கொணாக்
கொன்பல கன்மங்கள் குறித்தி ரங்குறுப்
பின்பித மளிப்பதும் பிரிய மீவது
மின்புற வுளத்திடை யெண்ணல் வேண்டுமால். (கூ)

தாய்பணி புரிந்திலேன் றந்தை யாதியா
மேய்தருங் குரவரை யிறைஞ்சு கிற்றிலேன்
வாய்புக ழறஞ்செயேன் மாலைப் போற்றிலேன்
றேய்வுறு மென்பவந் தொலைவ தெங்ஙனே. (க௦)

நித்திய வின்பமாய் நிலையி லின்பினை
வைத்துள மயங்கினேன் மறலி வன்சினந்
தொத்துறு கொடும்பயோன் மத்தச் சொல்லெனுங்
கத்துறு விடக்கடல் கடப்ப தெத்திறம். (௧௧)

இன்னணம் பவப்பல னெண்ணிப் பேரிடர்
மன்னிய திசையினை மாற்ற வேண்டியே
யுன்னிய மனம்விருப் புதவு சத்துவந்
துன்னிய திடத்தினைத் தோய்தல் வேண்டுமே. (௧௨)

போனநீர் குறித்துளம் புன்க ணெய்துறு
தானநீர்க் கணைசெயு மவரின் முற்செயு
மீனமார் செயற்கிரங் காம விம்மையின்
ஞானமோ டியற்றுவ நாடல் வேண்டுமால். (௧௩)

பின்னரத் திருமக டலைவற் பேணியே
துன்னிய பொழுதினைத் துரப்ப லென்றெணிப்
பொன்னிகர் குரவனைப் பூமின் னுதனைக்
கன்னிகர் மனனெனக் கணித்தல் வேண்டுமால். (௧௪)

மாலடி யார்படி வாவி யாதிய
சாலுமவ் வயிற்செலீஇத் தனக்கு மூழ்குதற்
கேலுநற் பொருள்களை யிழிவி லாததோர்
பாலுற வைத்துப்பின் னிருதி பக்கமாய். (௧௫)

சென்றுமூன் றிரண்டுவிற் கடைக்குச் சேணதா
யொன்றிய மகத்தினுக் கொழித்த புல்லிலை
யென்றவை புவியிடை யிட்டுக் காலையி
னன்றுற வடமுக மாக நண்ணியும். (௧௬)

இரவிடை தென்முகத் திருந்து மாறதன்
பரவிய கரைமலை பாழி செல்வழி
விரவுவர்ப் பூமிமண் கட்டி மேவிய
துரைதொழு சாம்பர்நீர் தவிர்ந்த வோர்வயின். (௧௭)

மலசலம் விடல்விதி மாதர் மாருத
நிலவனல் கதிர்தளி நியதி யந்தண
ருலவைகொள் பிப்பில முவைக ணேக்கியே
சலமலம் விடுபவன் சார்வன் பாவமே. (கஅ)

இத்திற மோசன மியற்றித் தூய்துறச்
சுத்திசேர் கரைமடு வாதி துன்னியே
யெத்திறஞ் சாத்திர மிசைக்கு மவ்விதி
தத்துற வின்றியே சவுச மாற்றுக. (கக)

அடிகரஞ் சுத்திசெய் தடிய ரின்குழாம்
படிதரு நீர்நிலை யொன்றின் பாற்செலீஇ
முடிமறை முகுந்தனை முன்னி யன்னவ
னெடிவறு நியமன முற்று மூழ்குக. (உ0)

விதிமுறை மூழ்கிப்பின் னறுவை வேய்ந்துதாள்
வதிதரு சுத்தனாய் வயங்கி யாசமித்
* ததிசித மண்ணினு லழகொ டூர்த்துவம்
பதிதர வணிகுக பன்னி ரண்டிடம். (உக)

வேறு.

நெற்றியிற் றரிக்கும் போது நிகழ்கர ஞன்கி லாழி
பற்றியுஞ் சுவண வண்ணம் பரந்தொளிர் மேனி கொண்டு
முற்றகே சவனென் றோது முயராபி தானம் வாய்ந்த
நற்றிரு மாலை யெண்ணி நண்பொடு வணங்கல் வேண்டும். (உஉ)

நீர்தருங் கொண்ட றன்னை நிகர்தருங் காளம் வாய்ந்த
வோர்தரு மேனியோடு மோங்குநாற் புயத்துஞ் சங்க
மார்தரத் தரித்த நாரா யணனெனு மவனை யெண்ணி
யோர்தரப் போற்றி நாமம் வயிற்றிடை யிடுதல் வேண்டும். (உங)

நீலமா மணியி தென்ன நிகர்சொலு மேனி யானைச்
சாலவார் கரங்க ணன்கிற் கதைகளைத் தரித்து ளானை
யேலமா தவனை யெண்ணி யிறைஞ்சிநன் றுக நாமங்
கோலமார் தரவே மார்பிற் குறித்தினி தெழுதல்வேண்டும். (உச)

* அதிசிதமண் - அதிகவெள்ளையான திருமண்.

பூரண மதிய மென்னப் பொலிதிரு மேனி யானைச்
சீரணக் கரங்க ளுன்கிற் சேர்ந்தசா ரங்கத் தானை
யாரணப் பொருளைக் கோவிந் தாவென்றஞ் சலித்தே யெண்ணி
யேரணக் களத்தின் மீது நாமநன் கிடுக மாதோ. (உரு)

வேறு.

செந்தா மரையின் கேசரம்போற் றேசிற் சிறந்த திருமாலை
நந்தா தொளிரு நாற்கரத்தி னலங்க டாங்கு நாயகனை
பந்தா திகளின் பற்றொழிக்கும் விண்டு வெனவே பராஅய் நினைந்து
முந்தார் நாமந் தனைவயிற்றின் வலப்பா லணிக முறையாக. (உசா)

மட்டு நிறையுஞ் செங்கமல மலர்போன் மேனி நிறத்தானே
யிட்ட முடனற் கரநான்கி லிலங்க முசலந் தரித்தானே
துட்ட மதுவை யடுமதுசூ தனனே யென்னத் துதித்தெண்ணிப்
பெட்ட வுளனுய் வலக்கரத்துப் பிறங்க வணிக திருநாமம். (உஎ)

அங்கி நிகருந் திருமேனி யழகு நிறையும் பரம்பொருளைத்
தங்கு மொளிய *நாந்தகத்தைத் தாங்கு நான்கு கரத்தானைத்
துங்கத் திருவிக் கிரமனெனச் சொல்லி வழுத்தி யுளத்திருத்திப்
புங்க முறுவான் களத்தில்வலப் புறத்தி லிடுக புண்டரநேர். (உஅ)

பிள்ளை யிரவி யெனமேனி பிறங்கி யெழில்சேர் பெம்மானை
யுள்ள கரங்க ளீரிரண்டி லோங்கும் வயிரப் படைசேரக்
கொள்ளு மவனை வாமனனைக் கும்பிட் டுளத்திற் குறித்தெண்ணி
வெள்ளைத் திருமண் கொடுவயிற்றில் விளங்க வாமத் திடையிடுக.()

வெண்டா மரைபோற் றிருவுருவம் விளங்கு முலக காரணனைக்
கொண்டா ரொளிய †பட்டசங்கள் குலவு நான்கு பாணியனை
வண்டார் துளவச் சிதரனை வழுத்தி வணங்கி யிடக்கரத்திற்
பண்டா ரணங்கள் சொலுந்திருமண் பரிவி னிடுக பத்தியொடும். ()

மின்னி னொளிபோ லெழில்வடிவ மேவும் பரனை நாற்கரத்துந்
துன்னு ‡முற்க ராயுதனைத் துலங்கு மிருடி கேசனையுண்

* நாந்தகம் – வாள்.

† பட்டசம் – கத்தி.

‡ முற்கரம் – உலக்கையின்பேதம்.

மன்ன நினைந்து கரங்குவித்து வழுத்திக் கரத்தி னிடப்புறத்திற்
சொன்ன முறையின் விதிதழுவித் துலங்க விடுக திருநாமம். (௩௧)

கோடி தபன னுதயநிகர் கொள்ளும் படிவ முடையானை
யிடின் றிலங்க வைம்படையு மேந்து மிறையை யெத்தேவு
நாடும் பதும நாபனையுண் ணுட்டிப் பணிந்து வெரிந் மீது
பீடு பெறவே யூர்த்துவத்தைப் பிறழா தணிக வெழில் பெறவே. ()

செய்ய விந்த்ர கோபமெனச் சிறக்குங் காந்தி மேனியனை
வெய்ய பாசா யுதமதனை விரும்பு நான்கு திருக்கரனை
வைய நுகர்தா மோதரனை வணங்கி மனத்திற் றியானித்துத்
துய்ய திருமண் பின்கழுத்திற் றுலங்கும் வண்ண மணிகுகவே. (௩௩)

மதிய *மயுதஞ் சரற்காலத் துதித்தா லொத்து வயங்கொளிய
துதிசெய் வியூக மூலமெனச் சொல்லும் வாசு தேவனையும்
பதிய விதய மலரகத்துப் படுத்திப் பரந்த வன்போடுங்
கதிவே றிலையெற் கெனவிரண்டு கரங்கள் குவித்தஞ் சலிபுரிக. (௩௪)

முன்ன ருரைத்த படிமனுவின் முற்றும் பொருளை யறிந்ததனிற்
சொன்ன வழியிற் றியானித்துத் துலங்கூர்த் துவபுண் டரமதனை
மன்ன விடங்க டொறு மணிந்த பின்னர் மாலா ராதனத்தோ
டுன்னு மடியார் பூசனையு மொருவா தன்பி னுஞற்றிடுக. (௩௫)

இந்த வாற்றி லபிகமனத் தியைந்து தன்ய னுயவவன்
முந்து பூசைக் குரியமலர் முதல கொணர்க வவையுளவேற்
சிந்தை தெளிய வாழ்வார்க டிருப்பா சுரங்கள் பொருளாய்ந்து
புந்தி மகிழ்வா னுபாதான கால மதனைப் போக்கிடுக. (௩௬)

வெய்ய கதிரோ னள்ளுறவே விளங்கும் போழ்திற் கால்கரங்க
டுய்ய வாக்கி மானியமத் தருகு சென்று துளங்கு மொளி
மெய்ய வனக் பரிசனங்கண் மேவ விளங்குங் கண்ணனைநன்
குய்ய மனத்திற் சிந்தனைசெய் துறுமா வணக்கஞ் செய்திடுக. (௩௭)

பற்றும் பவமும் பாற யழ குடைத்தாய் மனத்தாற் பற்றுவதாய்க்
குற்ற மொழித்துப் பகுதிபரி ணும மிலதாய்க் குலவியுயர்

---

* அயுதம் - பதினாயிரம்.

வுற்ற திருமா லடிவணக்கத் தோங்கு மகிழ்விற் கொருவீடாய்
முற்ற வவனா ராதனத்தை முறையி னோடுஞ் செயவேண்டும்.(௩அ)

ஈச னாரா தனத்திடையூ றியலா தொழிக்க வாரியனை
னேச முடன்முன் னருடுவய மனுவின்* பொருளை நினைத்தனனாய்
வாச மரையின் மலரானை மன்ன மருமத் திடையேற்றான்
றேசு திகழுந் திருவடியைச் சரணம் புகுந்து சிறந்திடுக. (௩௯)

இவ்வா றகச் சரண்புகுந்த வியல்பிற் குவந்தான் றிருவருளாற்
செவ்வே யமல சிந்தையனாய்த் திகழுமதுசூ தனன்மேனி
தவ்வா தெண்ணு தலில்வந்த பரமா னந்தந் தனையுந்த
வெவ்வா றகும் விதியெனவாய்ந் தியற்ற றிருவா ராதனமே. (௪0)

முன்னர்த் திருமா மகணிறத்து முதல்வ னருளாற் பூசனைக்கு
மன்னு நிமல மேனியனாய் மனத்தாற் பூசை தனையாற்றிப்
பின்ன ரிறைவன் றனக்குவப்பாய்ப் பீடார் புறத்தி னுபசரிப்பாற்
றுன்னு திருவா ராதனத்தைத் துறவா வன்பிற் செயல்வேண்டும்.()

வேறு.

அருக்கியபாத் தியத்தினுட னாசமன மஞ்சனஞ்சர் வார்த்த மென்றும், வருக்கமுறு மைந்தினுக்கு முரியநீர் பெயவைந்து கலங்கண் மண்ணிப், பெருக்கமுறு மொருதிருக்கா வேரியெனும் பாத்திரத்திற் பிறங்கு நீரைச், சுருக்கமுறா திருக்கும்வகை பாத்திரங்களிந்தினி லுஞ் சொரிக மாதோ. (௪உ)

வேறு.

திருமா றனக்கங் குபசரிப்பான் சேர்க்கும் பொருள்க ளவற்றினையு, மொருவா தாக வருக்கியநீ ரதனா லொன்றப் புரோக்கணித்து, வருமா லெட்டக் கரமலது மன்னு மூர்த்தி மனுக்கொண்டு, தருசோ டணமா தியபுரிந்து சாரு மன்போ டினிதளிக்க. (௪௩)

அளிக்கும் பொருளை வணக்கமுட னங்கை யேந்தி முகமலர்ந்து
களித்துத் திரியா மனனாகிக் கடவு ளிதனைக் கடாட்சிக்க
வுளத்திற் பற்ற வுவைதரும்போ தற்ற பிழையும் பொறுத்தருள்க
வளத்தற் கரிய புகழானே யென்ன வவனை வேண்டிடுக. (௪௪)

---

* துவயமனு - த்வயம்என்னும்மந்திரம்.

யோக பீடத் துறைபரனை யுலகுக் கொருகா ரணப்பொருளா
யாகு முத்தி யுறுங்காலத் தடையும் பயனா யதற் கிசைந்த
மோக மகற்றுஞ் சாதனமாய் முன்னற் கரிய தாயதிரு
வாகந் தனதிச் சைமயினாலே யடைந்தா னென்றெண் ணிடவேண்டும்

கமலத் துறையு மயன்முதலாங் கடவுள் போற்று மடித்துணையா
யமல மான குணக்கடலே யமர்மங் கலமா மிவ்வுருவில்
விமல நாத விப்பூசை முடியு மளவும் வீற்றிருப்பாய்
தமரி லொருவ னிவனென்னத் தருக நின்ற னருளெனக்கு. (சரு)

ஈச மந்தி ராதனம திங்க னுள்தாற் போந்தருள்
வாசி லிந்தப் பாதுகைக ளணிக வணிந்திவ் வாசனத்திற்
றேசு திகழ வெழுந்தருள்க செவ்வே மதுர கம்பீர
வாச மலரின் கடைக்கணிப்பால் மன்ன வருளைத் தருக வென்க. (சள)

அடியே னளிக்கு மருக்கியபாத் தியத்தோ டாச மனநீரு
முடியக் கடைக்கண் பார்த்துவந்து முற்றுங் குற்றம் பொறுத்தருள்க
வெடிய கந்தந் திமிர்ந்துமலர் வேய்ந்து தூப முகந்திடுக
கடிய தீப நோக்கிமணங் கலந்த வடைக்கா யுகந்தருள்க. (சஅ)

செகத்திற் சிச னனதிரு மாலே திருமஞ் சனபீடத்
தகத்தி னுவப்போ டெழுந்தருள்க வடியே னதனுக் காமவற்றைத்
தொகுத்து நேடி வைத்துளனற் றொலைவி லானே யெனையென்றும்
மிகத்த வில்லாத் தாசனென வெண்ணி யருள்க வெனவுரைத்து. ()

வேறு.

தந்திடுபாத் தியமாச மனநீ ராட்டந் தனக்குரிய வறுவையினு ஞ் சாரும் பாத்ய, முந்திடுமா சமனமெழிற் பாது கைகண் முரலொடு நாவிளக்க முற்றுங் காட்ட, மந்தமுறத் திருமுகம்வாய் தூய வாக்க லாசமன மாடிகரஞ் சுத்தஞ் செய்தல், கந்தமுறு மடைக்காய்நற் றாயி லந் தேய்த்தல் கழுவுசிகைக் காய்கொள்ள றந்தச் சிக்கம். (நுo)

உலர்ந்திருக்குந் தூசினுடன் றிருவொற் றுடை மஞ்சனீரொடு ம ஞ்சனநீ ரொண்பொன் னுடை, நலந்திகழு முபவீத மமைந்த பாத்ய மாடியுறு மாசமனங் குசையிற் செய்த, பொலந்திகழும் பவித்

திரமார் சாந்தம் பூவினொடு நற்றூப மொளிருந் தீபஞ், சலந்திகழு மாசமன மாடல் பாட *றனிதமுறும் பல்லியங்க டழுவா நிற்கும். ()

இத்தகைய வுபசாரங் கவரினீ ராடி யிலங்குகருப் பூரத்தா லெழி லாலத்தி, யொற்றிடுதற் குரியதுகி லுலர்ந்த வாடை யொளிர்விடு பொன் னுடைகுசை யுபசா ரங்க, ணத்தியுளம் பற்றியருள் புரிகநா யே னுறைந்தேவரீர் நளின பாதப், பத்திமிகுந் திடுமுளத்தி லடிய னேவன் பரியுமுன தருளென்பாற் பதித லாலே. (ருஉ)

பங்கயக்கட் பரம்பொருளே பணிகண் மாலை பாடீர முடைகள் குடை கவரி யாதி, துங்கமுறு முபசாரப் பொருள்கண் மன்னத் துல ங்கியவூன் றுவதெனச் சொல்லு மிந்த, வங்கமுறு மலங்கார பீட மீ தி லமர்ந்தருளி யருள்புரிக வர்க்ய பாத்யந், துங்கமுறு சமனீய மம் பொ னுடை துலங்கணிகண் முன்னூலா சமனங் கொள்க. (ருங)

எப்பொருட்கு மிறைவமலர் நயன மீதி லிட்டிடுமை யூர்த்துவபு ண் டரங்கண் ணுடி, செப்புநறு விரைத்தூபந் திகழுந் தீபஞ் செய்த லுறு மாசமனம் பதாகை பிச்ச, மொப்பரிய சீகரமா மிவையு மேற்க வொண்பணிலந் திருச்சின்ன முரசெக் காளஞ், செப்பிடுமிவ் வியங்க ளையு நிருத்த கீதஞ் செய்யுமிவை களையுமுளஞ் சேர்க்க மாதோ. ()

என்றியம்பிப் புரிந்ததற்பி னிணையிலாசா னிசைத்தபடி யெட் டெழுத்தா மனுவே யாதி, துன்றியமந் திரங்கள்கொடு திருமால் பாதத் துணைமலரின் மலரணிந்து சூழ்ந்து தாழ்ந்திங், கொன்று திரு வாய் மொழியா தியபா வாலே யுறப்போற்றி யெனையடிமை கொள்ளென் றோதிக், குன்றிடினு மெத்தகைய வுபசா ரங்கள் குறைநீக்குஞ் †சாலி யரி கொள்ளல் வேண்டும். (ருரு)

விரைமல்கு மடைக்காயர்க் கியமுங் கொள்க விரும்பிநித முனை ப்போற்றும் வேட்கை கொண்டே, னுரையெளியார்க் கோருறவே ய முது செய்ய வுறும்பொழுதிற் குற்றதுவாய் வகைக ணுன்காய்ப் புரைதபு நல் லுணவார்ந்த நான்காமிந்தப் போச்சியா சனத்தினிது போற்ற மேவி, வரைதருபாத் தியமாச மனமு நன்கு வைத்திருக்கு மருகணும் படனே பின்னும். (ருசா)

* தனிதம் - ஒலி †சாலி அரி - நெல் அரிசி.

சுவையிழுது சருக்கரைதேன் றயிர்பா லின்ன சொரிந்தவுண வா சமனந் துகளர்ந் தூன்ற, கவையுறு கோட்டுணைச் சுரபி பைம்பொன் காந்தி கஞலு மணி யையுமேற்றுக் கருணை செய்க, நவைபொழிய வடுமன்னம் வியஞ்ச னங்க ணற்கிழங்கு கனிதயிர்பா னறுந்தே னாதி, யிவைகளை நான் முறையுனது சிந்தைக் கேற்ப விந்துள்ளே னுளமுவப் போ டேற்க வென்க. (ருள)

சத்தியத்தி னுடன்சவுசந் தணந்தே மிக்க தாழ்வுடையேன் ஞானமிலேன் சாமிக் கேற்கேன், மெத்தியதூர்ப் புத்தியுள்ள வடிய னேனை மேவு பொருளா நினையல் கருணை மிக்கே, யொத்துறநா னமைத்த வன்ன முதல யாவு முயர் வாக்கி யுனக்கு முடங் குறை மாதர்க்கும், பத்தி யுடன் யானளித்த தெனவே கொண்டு பயன் படுமா திருவுள்ளம் பற்று கென்க. (ருஅ)

திருநோக்காற் குறைதபுத்த நெய்சா ரன்னந் திருவுளத்திற் கொள்கபர சேடனத்திற், கருகணும் பிவையன்றித் தாகந் தீர்க்க வமைத் துடைய பானீய முடிவி னீர்மோர், பொருவின்முக சோதனத்துக் குரிய தூநீர் புரியுமா சமனீயங் கரந்து டைத்தன், மருமலியுஞ் சாந்த மடைக் காயென் றின்ன வகைகளையு முளம்பற்றி மகிழ்க வென்க. ()

நாட்டுமுயர் வொப்பிகந்த பரனே மீட்டு நறுங்குசையி னுற்று டைந்துச் சுத்தி யேய்ந்த, சேட்டமுறு மைந்தாவ தாகு மந்தி ராசனத்தி லெழுந்தருளித் திகழும் பாத்யந், தேட்டமுறு சமனீயங் கந்த புட்பந் தீபதூ பாசமன முகவா சத்தோ, டீட்டமுறுந் தாம்பூல மெளியேன்றந்த வின்னவைகொண் டெனையடிய னாக்கு கென்க. ()

செங்கமலத் திருநயன திருவார் மார்ப செறியுமறு குணமுடைய ய் விண்டு தேவே, யங்கருணை யம்புதியே விரையா ராரு யடிகியசை யாசனத்தை யடைந்து பாத்யம், பங்கமறு மாசமனம் பூவின் மாலை பணிபட்டு முன்னூலா சமனஞ் சாந்தங், கொங்குமலர் புகைவிளக்கா சமனத் தோடு கொண்டடைக்கா யருந்தியருள் கூர்க வென்க. (கக)

ஆழ்வார்கண் முதலாய மேலோர் பாவா மமுதவெள்ளத் தாலநந் த னமல னென்றும், வீழ்வாரும் பூரணு னந்த னென்றும் விளம்புவ ரப் பாக்களினு னின்னை யானுந், தாழ்வேகப் போற்றியெந்த விடஞ்

காலத்துந் தருமவத்தை யெவற்றினிலுஞ் சலசநேருஞ், சூழ்வாரு
ங் கழலிணையா யுனக்கு நாயேன் றொண்டுபூண் டிருத்தலே. துணி
ந்தே னென்க. (௬௨)

இவ்வகையா யுலகெவைக்கு மீச னுண விலக்குமிகாந் தனையிலங்கு
மன்பினோடுஞ், செவ்வையுற மனிதர்கள் பூசிக்க வேண்டுந் திறமெ
னுநற் றாசருக்குச் செப்பினாற், கவ்வை யொழி யரங்கநா மானு
சப் பேர்க் கலைவலோ ரவைசெவியிற் கலந்த தாச, ரெவ்வமற விதி
யனைத்துங் குறைபா டின்றி யிருணீங்கு மனத்தினிடை யிசைவித்
தாரால். (௬௩)

இனிமுனி கருணையா லிப்பி றப்பெனு
நனியுறு துன்பமேய் நரலைக் கோடமாந்
தனிசர ணாகதி தன்னைச் சேர்தலே
யுனிநமக் கெய்தவேண் டுவதென் றுன்னினார். (௬௪)

மந்திராராதனச் சருக்க முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் ௫௮௫.

---

## ௧௧- ஆழ்வார் வைபவச் சருக்கம்.

தாசர் குருவி னடிமலர்க டாழ்ந்து போற்றி யதிபதியி
னேச மிகுத்த சரித்திரமு நிகரில் பொய்கை யார்முதலாத்
தேசு திகழு மாழ்வார்கள் கதையுந் தெளிய வடியேற்குப்
பேசி யருள்க வெனவன்பு பெருகப் பணிந்து வேண்டினரால். (௧)

குரவ னென்னுங் கருணையலை கொழித்து நிலவும் பாலுததி
விரவும் பிறந்தை கலைபொய்கை யாழ்வார் முதலா மெய்யன்பர்
பரவு சரிதை யெனு மமுதப் பெருக்கைத் தருக்கைப் பற்றறுத்துக்
கரவு நீக்கி யொளிருமனத் தாசர் களிக்க வீந்தன்றே. (௨)

முத்தி யளிக்கு நகரேழின் முதன்மை வாய்ந்த கச்சியினி
னத்து மினிய நீர்ப்பொய்கை நளின மதனிற் றுலாமதியிற்

*பத்தி லிரண்டு முதலீ றும் பற்று நாளிற் சங்கமெனு
நித்த சூரி யமிசையெழி லிலவ வுதித்தார் பொய்கையார். (௩)

உலகை யளிக்கத் திருநெடுமா லோங்கு தலத்திற் றிருக்கண்வளர்ந்
திலகு பதியாங் கடன்மல்லை யென்னும்புரியி லைப்பசியிற்
குலவு மவிட்ட நன்னாளிற் கொங்கு விரியுங் குவலையத்தின்
மலருந் தியினன் கதைக்கூறாய் மன்ன வுதித்தார் பூதத்தார். (௪)

மயிலைப் பதியி லைப்பசியின் மன்னுஞ் சதய நன்னாளிற்
கயல்க ளுகளுங் கிணற்றில்வெறி கமழு மாம்பற் பூவினிடைப்
புயலி னொளிய மாயவனுந் தகத்தி னமிசை பொலிந்தோங்க
மயலை யுலகுக் கறுத்தருள்வான் வந்தங் குதித்தார் பேயாழ்வார். (௫)

இந்த வாற்றி னவதரித்த வினையின் முனிவர் மூவர்களும்
பந்த வுலகர் தமைக்கூடிற் பற்றும் பாவ மெனநினைந்து
கந்த மலர்க்கட் கடவுளடிக் கமலத் துணையே துணையாகச்
சிந்தை நிறுவிக் கடல்புடைசூழ் புவியிற் சரித்துச் சிறந்தனரால். (௬)

வேறு.

செங்கமலை சேர்மார்பர் செப்புமிவர் பாசுரமாம்
வங்கமது கொண்டுலகை மன்னுபவக் கடலேற்றத்
துங்கவுளத் தெணிமழையை மாருதத்தைத் தோற்றுவிக்க
இங்கவற்று லிவர்கோவ லிடைகழியிற் கூடினரால். (௭)

அவ்வயினந் தரியாமி யானசரு வேச்சுரன்று
னெவ்வமிலன் றூர்நடுவி லெய்திநெருக் கந்தரலாற்
கவ்வையுறு மழைகாற்றிற் கஞ்சிவந்து கலந்தோமை
யிவ்வயினூர் நெருக்குகின்ற தெவனென்ன விசைத்தனரால். (௮)

நெருக்கமுறச் செய்கின்று னிலையறியப் பொய்கையா
ருருக்கமெனு மிளக்கேற்ற வன்புகொடு பூதத்தார்
திருக்கொழிக்கு ஞானமெனுந் தீபிகையேற் றப்பேயா
ருருக்கமொடு திருக்கண்டே னெனவோதிப் போற்றினரால். (௯)

---

* பத்தின்கண் முதலிலும் ஈற்றிலும் இரண்டு பற்றுநாள் உமஉ ஆம்நாள் அது திருவோணம்.

அன்னபொழு திற்கோவ லாயனுர் மூவருக்குந்
தன்னெளிய மெய்யுருவந் தனைக்காட்டத் தொழுதவன்சீர்
மன்னவுளத் திடைக்கொண்டு மகிழ்ந்துலக முய நூறு
துன்னுவெண்பா வந்தாதி சொற்றனர்மூன் றினைமூவர். (௧0)

திருக்கோவ லூருறையுந் திருமாலைத் தொழுதந்த
விருக்கோவி லாதுறைக்கு மிசைபாடி யியங்குமனத்
தருக்கோவு மானந்தந் தழைத்தோங்க வொருமூவர்
பெருக்கோலக் கடலுலகம் பிறங்குபயன் பெறச்சரித்தார். (௧௧)

வேறு.

உலகுறு பதிக டம்பி லுயர்திரு மழிசை மேவி
யிலகுறு தவத்தின் மிக்க பார்க்கவ னியற்றும் வேள்விக்
கலகில்சீர்த் திருவி னுத னருடர வாழி யஞ்சம்*
பலர்புகழ் தேவ மாதின் பாலனுன் பால னுக. (௧௨)

மகரமா மதிபிற் சேர்த்த மகத்தவ தரிக்க மாதா
புகவிய னுலகிற் றந்தை போய்த்தவ மிழைக்கக் கானில்
மிகவிளங் குழவி விம்மி யழக்கண்டு விமலை நாத
னுருதரத் தாப சோப முற்றரு ணுக்கஞ் செய்தான். (௧௩)

அருள்பெறு மழிசை யாழ்வா ரெனுமபி தானச் சேயை
வெருடரு வட்டை செல்லோர் வேட்டுவ னோக்கி யற்றுன்
பொருள்கண்டா னென்னக் கொண்டு போந்துசே யில்லா வில்லாண்
மருமலர்க் குழலிக் கீய வந்துபால் சுரந்த தன்றே. (௧௪)

சுரந்தபா லுண்ணு தாழ்வார் தொல்லுல கிறும்பூ தெய்த
நிரந்தரம் வளர்தல் கண்டு நிரம்பமூப் பார்ச துர்த்தன்
பரந்துறு மன்போ டாவின் பாறின மளிக்க வுண்டார்
வரந்தரு மப்பாற் சேட மாதொடு விருத்த னுண்பான். (௧௫)

பயந்தரு சேட மில்வாழ் பயன்றரு வதுவா யன்னோர்க்
குயர்ந்தநன் மகவை யீய வுவர்கணி கண்ணா னென்னும்
வயந்தரு நாமந் தந்து மைந்தனை வளர்க்க வன்னு
னயந்தரு நூல்க ளெல்லா நனியறிந் தொளிர்ந்தான் மன்னே. (௧௬)

* அம்சம் - கூறு.

ஆயசீர் மழிசை யாழ்வா ராண்டெட்டிற் கலைகள் யாவு
மேயுமா றறிந்தே யெல்லாச் சமயமு மின்ன தன்மை
மேயவென் றவற்றி னுண்மை மேதகு வாய்ந்து மாவாழ்
மாயவ னன்றித் தெய்வ மற்றிலை யென்று தேர்ந்தார். (கஎ)

பரம்பொரு ளாகி மோக்கம் பாலிப்பான் மாலே யென்னத்
திரம்பெற வுளத்து நாடித் தியானஞ்செய் மழிசை யாரைக்
கரம்பெறு களத்து முக்கட் கடவுள்விண் செல்வான் காணூஉ
வரந்தர வுவந்தேம் வேண்டும் வரமெம்பாற் கொள்க வென்றான். ()

வேண்டுவ வில்லை யொன்றும் விருப்பப வர்க்கத் தாமா
வீண்டதை யீய வல்லை யெனிலளித் திடுக வென்ன
மாண்டரு மோக்க மீவான் மாலன்றி யிலெனன் றோத
வாண்டதே லிந்தப்* பொல்லத் தூசிபோ மாற்றி னாலும். (கக)

செலவருள் புரிதி யென்னச் செப்பலு முக்கட் டேவ
னிலவிய நெற்றிக் கண்ணி னெருப்பெழ நோக்க வாழ்வார்
குலவுகாற் கண்ணி னங்கி கொண்டதை வெல்லச் சூழு
மலகையோ டாடி மால்பா லசஞ்சல பத்தி யுள்ளாய். (உ0)

ஆதலிற் பத்தி சார னுமென வைய நின்னை
யோதலிவ் வுலகென் றோதி யோங்குவே† தண்டம் புக்கான்
மாதவ யோகத் துற்றார் மழிசையார் முதலாழ் வார்கள்
பூதலத் தலங்கள் போற்றிப் புகறிரு மழிசை போந்தார். (உக)

அப்பதி யுற்ற மாலை யன்பொடு பரவி யோகந்
தப்பறப் புரியும் பத்தி சாரரைக் கண்ட ளாவிச்
செப்பரு மல்லிக் கேணித் திருநகர்க் கவரோ டேகி
மைப்புயன் மேனி யானை மலரடி வணங்கி மூவர். (உஉ)

மற்றுள பதிக டாழ்வான் வழிக்கொள மழிசை யாழ்வார்
சுற்றுகாக் கச்சி மேவிச் சொன்னவா செய்த மாலி
னற்றுள வணியும் பாத நளினங்கள் போற்றி யோகம்
பற்றினர் பன்னா ளண்டு பணிகணி கண்ணன் செய்ய. (உங)

---

* பொல்லம் - துவாரம் † வேதண்டம் - கைலைமலை.

இன்னண நிகழு நாளிற் சொன்னவர் றியற்று மெம்மான்
சன்னிதி மெழுகிக் கோலந் தருமொரு மூப்பி னாளே
மன்னுமிப் பணிகள் செய்ய மங்கையா யிடுதி யென்னச்
சொன்னலக் கவியோன் றானே கணிகண்ணர் சொற்று ரன்றே. (உச)

அம்மையார் பாலே யாகி யரிதிருத் தளியி னுளுஞ்
செம்மைசேர் பணிக ளாற்றுந் திறமறி பல்ல வக்கோன்
சும்மைகொண் மணியுந் தூசுங் கணிகண்ணர் துணைப்பொற் பாதத்
தம்மவே வைத்துப் போற்றி யருள்கவெள வனமெற் கென்றான். ()

நின்னுரைப் படியான் செய்ய நேர்ந்திலே னென்ன மன்ன
னென்னுடை நகரமேவா தேகுதி புறத்தென் றோத
வன்னவா செய்வே னென்ன வறைந்துபின் மழிசை யாழ்வார்க்
கின்னண மரையன் செய்கை யெனக்கணி கண்ணர் சொற்றார். (உரு)

அய்யநிற் குதவாத் தான மாகுமோ வெமக்குமென்னச்
செய்யவண் மணாளன் முன்பு சென்றுமன் செயல்சொற்றன்பு
பெய்கணி கண்ண னோடு பெயரமால் விரைந்து தானும்
பைவிரி நாகப் பாயல் சுருட்டிப்பின் படர்ந்தா னன்றே. (உஎ)

மற்றுள பெரியர் மன்னன் மாலடி யார்பாற் குற்ற
முற்றன னின்னுன் றேத்தி லுறைகிலோ மென்று போகத்
துற்றின பலவுற் பாதந் தோன்றலும் வெரீஇயம் மூவர்
பற்றிய வருந்து நாடிப் பாதமீப் பணிந்து சொல்லும். (உஅ)

புகுவதை யறியா தேழை புணர்த்திடு புன்க ணீக்கித்
தகும்வகை யாளுந் தன்மை யடிகட்கே சரண்மற் றின்றென்
றுகுதரு கண்ணீர் மன்ன னுரைக்கவுள் விழைந்து மாயோ
னகுமடி யார்முன் போத நண்ணினன் பொழில்சூழ் கச்சி. (உகூ)

வேறு.

கார்க்கண நெருங்குபொழிற் கச்சிநகர் நீங்கிப்
பார்க்கவர் தருந்தனையர் பற்று*புலி யின்பே
ரூர்க்கிடை புரச்சுருதி யோதியிடு முன்னோர்
பேர்த்துறை யெடுத்திலர்கள் பின்னரிவ ரென்றே. (௩௦)

* புலியின்பேரூர் - சிறுபுலியூர்.

இந்தமுனி யின்பெருமை யின்னதென வாயர்
வந்தவப சாரமத னன்மறையில் விட்ட
தெந்தவிட மென்றறிகி லாதுதடு மாறச்
சிந்தையவர் தேறமுனி செய்தன னுபாயம். (௫௧)

என்னையெனி லோர்கருநெ லேந்தினர் நகத்தாற்
பின்னமுறு மாறுபுரி பெற்றியி னுணர்த்த
வன்னகுறி யெண்ணிமறை யாளரறி வுற்றார்
மன்னுபுலி யூரின்மக மாற்றுமரி பத்தன். (௫௨)

அப்பதிய பொற்பதியி னணைசிர மேந்தி
யிப்பெரிய மாமுனியை யேயுமக சாலைக்
கொப்புரவி னிற்கொடுப சாரமுன மாற்றச்
செப்புமழ லோம்புமவர் சென்றனர் சினந்தே. (௫௩)

அன்னபொழு தந்நகரி லச்சுதனவ் வாழ்வார்
தன்னையுல கோரவவர் தந்தகவி கேளா
முன்னுற வந்தருள் மொய்த்துமுனி வோர்க
ளென்னவிறும் பூதிலைதென் றெந்தையடி தாழ்ந்தே. (௫௪)

இத்தகைய மாப்பெருமை யெய்துதிற மோரா
துத்தம பிழைத்தனம் தொன்றுமுள் மீதே
வைத்திடுத னீக்கமழி சைப்பெரும வென்னச்
சித்தமகி ழக்கருணை செய்தவரை யன்னோர். (௫௫)

அந்நகர் நீங்கியெழி லார்திரு குடந்தைச்
செந்திரு மணாளனடி சேவைபுரி யாவங்
குந்துபல வற்சரமி யோகினிடை யுற்றே
யந்தமில தாம்பர பதத்தையணி செய்தார். (௫௬)

வேறு.

உலகமிசை மழிசையர்கோ னுதித்தவுகந் துவாபரமா முறைந்த நாள்க, ளிலகியநா லாயிரத்தோ டேழுநாற் றிரண்டாண்டென் றிசைக்கு நூல்கண், மலர்புரையுந் திருவாயான் மலர்ந்ததிரு வந்தாதி தொண்ணூற் றுறேழு, டலகிறிருச் சந்தத்திற் கவியொருநூற் றிருபதிவ ராக்கி னரால். (௫௭)

வேறு.

தென்ன னிறைமை கொளுநாட்டிற் சிறந்திவ் வுலக திலகமெனத்
துன்னுங் குருகா புரியெனும்பேர்ப் பதியொன் றுளது துவாபரத்தின்
மன்னன் றரும புத்திரனு லரசு புரியு மாண்புடைய
தன்ன நகரிற் றிருவழுதி நாட னெனும்பே ரமர்சதுர்த்தன். (௩௮)

திருமால் பாத மலர்க்கன்பு செய்யு மவர்க்குக் குணக்கடல்போன்
றொருமா சேயொன் றுதித்துமகி யுவப்பத் தரும முளுற்றுதலாற்
றருமா நாமந் தருமதர னென்னத் தாங்கிச் சக்ரகர
வருமா நாமற் றரவன்று னளித்தா னச்சு தன்றனையே. (௩௯)

அவனற் றனயன் பெயர்சேந்த னன்னுன் பாட லாக்கனெனும்
புவனத் திரயம் புகழ்புதல்வற் பெற்று னவன்போர்க் கழியானென்
றவனிற் சிறந்த சேய்தரவத் தவனுந் தான்செய் தவப்பேற்று
லிவனுக் கிணையா ருலகிலென வெழிலார் காரி தனைத்தந்தான். (௪0)

காரி புவியிற் கலியிருளைக் கடிந்து கமலக் கணன்பாத
வேரி மலரி னறுந்துளப மிலைச்சித் திருவாழ் மார்பனருள்
வாரி யறலிற் கரியகுழன் மங்கை யுடைய நங்கையெனும்
பேரிற் கியைய வெக்குணமும் பெருக வுடையா டனைமணந்தான். ( )

நங்கை பிறந்த வகத்திருந்து நாதன் குருகா நகர்க்குவரு
மங்க ணிடையிற் குறுங்குடியி னமரு நம்பி பதம்பணிந்து
செங்கட் கமலப் பெருமானே திருந்துங் குணமா ரொருமகவை
யெங்கட்கருள வேண்டுமென வேத்தித்தங்க ளிலஞ்சார்ந்தார். (௪௨)

வளத்திற் சிறந்த குறுங்குடியின் மன்னு நம்பி காரி நங்கை
யுளத்திற் கிடக்கை நிரப்பவெணி யோங்கு சேனு நாயகரா
மளத்தற் கரிய திறலாரை யழைத்துக் காரி யார்மனைபாற்
கிளத்தற் கரிதா மன்புடையாய் கேடின் மகவாய்ச் செல்கென்றூர். ( )

வேறு.

*சாங்கியசௌ கதங்களினுற் றடுமாற றவிர்ந்துயர்வை
யோங்கியவே தாந்தமத முறப்புரிவா னுழ்வாரா

* சாங்கியம் - நிரீச்வரசாங்கியம். சௌகதம் - சுகதனுற் செய்யப்பட்ட பௌத்தம்.

யாங்குவரச் சேனையர்கோ னருந்ததியே யனையநங்கை
தாங்கு *வயின் வயின்மேவத் தழைத்தன்று லெழினாளும். (சச)

வேறு.

இந்து நுதலி கௌசலைமுன் னிராமற் பெற்ற ளெனநங்கை
நந்து கலியெ னுகம்பிறந்த நாலு பத்து மூன்றுநா
ளுந்து மிடப மதியில்விசா கஞ்சேர்ந் துவக்கும் பூரணையில்
வந்த †வுசனர் வாரமதின் மகவைப் பயந்தாண் மடவரலே. (சரு)

பேச வரியார் பிறந்ததவப் பேற்று லுலகம் பிறங்கமணம்
வீசி மந்த மாருதமு மெல்ல வியங்க மேலோர்க
ளாசின் மனமு மிகத்தெளிய வழுக்கற் றுளிரத் திசையனைத்தும்
வாச மலரை யமரர்குழாம் வானின் றிறைக்க வழங்கிற்றால். (சசு)

மன்னுந் திருமா லருளேக்கான் மயர்வு நீங்கு மதிநலத்த
பொன்னங் குழவி யெனச்சேனை முதல்வர் புகுதுஞ் செயலறிந்தே
பன்னு மோரா யிரந்தலைய பாப்புக் கரையன் குருகைநகர் [தனைனால்.
தன்னின் முன்னுஞ் ‡சிந்தகப்பேர்த் தருவாய்த் தோன்றித் தழைத்

மதியின் மயர்வை யொழித்தவெழின் மதலை யழுத றனமுண்ணல்
விதிபி னுலக சிசுக்களைப்போன் மேவ லின்றி மாறுதலாற்
புதிய செயலீ தெனப்பெற்றார் பொருந்த மாற னெனுநாமங்
கதியை யளிக்கு மகற்களித்தார் காண வீரா றாகியநாள். (சஅ)

தோயும் பகுதி விகாரமிலாத் தூய ஞானத் திருக்குழவி
வாயின் மலர்ந்த திலையொன்றும் மவுனித் §தனந்த வெகினத்தே
போயங் கிருந்து தனைப் பொருவும் புருடற் காண யோகத்து
மாய னருளாற் பதினாறு வருடஞ் சமாதி மன்னிற்றால். (சகூ)

காரி மாற னிவ்வண்ணங் கலக்கச் சமாதி துவாபரத்தி
னேரில் குமுத ரெனுநாம நித்ய சூரி திருக்கோளூர்
சாரும் பனவ புரச்சூடர் தமக்கு மதுர கவியெனும்பேர்
சேரு மகவாய் மதிமேடஞ் சிறக்க வுதித்தார் சித்திரைநாள். (ருo)

* வயின் வயின் - வயிற்றிடம். † உசனர்வாரம் - சுக்கிரவாரம்.
‡ சிந்தகம் - புளி § அனந்தவெகினம் - ஆதிசேஷனாகிய புளி.

தூமது சாம சாகைமுதற் சகல வேத பாரகரா
யெமது பெருமா னுறைதலங்க ளிசையி னிறைந்த நறும்புனல்கள்
சுமதி யுடைய மதுரகவி யாழ்வார் துலைந்து தொழுநாளில்
யுமதிக் கதனி லொருசோதி யெழுந்து நிலவிற் றிணையிலதாய். ()

அந்தச் சோதி தனைநோக்கி வருவா ரளவில் காவதங்கள்
பிந்தக் குருகை நகர்காணூஉப் பெருகு மன்பாற் பணிந்தெழுந்தே
யிந்தப் பெரியோர் தத்துவத்தோ டிதமும் புருடார்த் தங்களுமென்
பந்தப் பகுதி யொழித்தருள்செய் பரம குரவ ரெனக்கொண்டார்.

நங்கை புதல்வர் மதுரகவி நண்ணுஞ் செயலை யுளத்தோர்ந்து
செங்கண் விழித்துப் புறநோக்கித் திருமாற் கடிய ரெனவொருவர்
நங்க ணடைந்தா ரெனுமகிழ்வா *னயனத் துவத்து நிறையுமருள்
பொங்கி வழியக் கடைக்கண்ணாற் பொருந்த நோக்கம் புரிந்தனரே.

முன்ன மியோகி னிடையந்த முளரிக் கணனே பரனாவா
னென்ன வறிந்த வநுபவத்தை யெளிதா யுலக முணர்ந்துய்ய
மன்னு கமலை யகலாத மாய னுரையான் மாறனார்
சொன்னார் நான்கு மறைப்பொருளுந் துதைய நான்கு பிரபந்தம். ()

சீர்பெற் றிலங்கு திருவிருத்த நூறு கவியா மாசிரியப்
பேர்பெற் றுடைய கவியேழு பெரிய திருவந் தாதியென்ப
தேர்பெற் றெண்பத் தேழாகு மிசைசேர் திருவாய் மொழிப்பாக்க
டார்பற் றளவை சகத்திரமுஞ் சதமுந் துவமுஞ் சார்ந்தனவால். ()

அந்தக் கவிக ணான்கொழிந்த தாமா யிரத்து முந்நூறு
முந்த மதுர கவியோலை கொள்ள மொழிந்து முற்று பொரு
ளிந்த விதமா மிதற்கென்றே யிசைக்க வனைத்து முளந்தாங்கிப்
பந்த மறுக்கு மாரியன்போற் பரமாம் பொருண்மற் றிலையென்று.

மாற னிடத்து மாறாத யாறனிடத்து மாப்பணிவேய்ந்
தூறு மன்பாற் கண்ணிநுண் சிறுத்தாம் பென்னு முதுமுதலாக்
கூறு கவியா லாழ்வாரின் குணமோ டருளைக் குறித்தவர்செய்
வீறு ஞான பாசுரங்கள் விருப்பி னோதி விளங்கினரால். (ருஎ)

---

* நயனத்துவம் - கண்ணிரண்டு.

மறையின் பொருளை யெளிதெவரு மறையாப் பொருளா யறி
ந்தரியே, யிறைவ னென்று கொண்டுகதி யெய்தும் படித்தாய்ப் பி
றமதங்கள், குறையுற் றெதிரா தொழிந்தேகக் கூறு மாறன் கவிப்
பொருளாய்ந், தறைவர் பெரியார் பராங்குசனே யாகு நாம மிவர்க்
கென்ன. (ருஅ)

முன்னஞ் *சடக்கா லொழித்துதித்த முறைமை நோக்கிச் சடகோப
ரென்னும் பெயரு மான்றோர்க ளிசைப்பர் குருகை நகர்த்திருமான்
மன்னு மாழ்வார் கவிமகிழ்ந்து மணந்து மணத்த மகிழ்மாலை
துன்ன வளித்தார் துளவமெனத் துலங்கிற் றந்தத் திருமாலை. (ருகூ)

மாலை யழித்தார் தமக்குமகிழ் மாலை யளித்தார் மாலென்ன
வேலை யுலக மபிதானம் விளம்பி வகுளா பரணரெனச்
சால வுரைக்கக் குருகைநக ராதி நாதன் றனைப்போற்றி
யேல முப்பா னைந்தகவை யாழ்வா ரிருந்த திவ்வயினே. (சுo)

மலைய நாட்டில் வளஞ்சிறந்த வஞ்சி நகரிற் சேரர்குலத்
தலைமை பூண்டோன் மன்பதைபாற் றணவா வளிய னுயர்வேய்ந்து
கலைக ளறிந்தோன் மால்பதத்துக் கலங்கா திலங்கு பத்திமையா
னுலக நாமந் திடவிரத னென்ன வோத வுளனொருவன். (சுக)

நண்ணு மவற்குக் கலிபிறந்த நாலே ழாண்டிற் குடமதியி
லண்ணு நாளப் புனர்வசுவி லரிமார் பகலாக் கவுத்துவத்தி
னெண்ணு மிச மபிதான மேய்ந்து குலசே கரரெனவிம்
மண்ணி லுதித்த ததன்பெருமை வழுத்த யாவர் வல்லுநரே. (சுஉ)

அந்தக் குலசே கரனெனும்பே ரரசர் தனுமா மறையினுட
னெந்தக் கலையு மறிந்துமுடி யேந்தி யகிலம் புரந்திடினும்
பந்த மொழிக்கும் புராணஇதி படனம் பெரியார் பாலென்று
முந்து மன்பு கொடுகேட்பா ரொருநா ளிராம கதையிடையில். (சுரு)

கரனூர் முதலா மிராக்கதர்கள் கலந்த களத்திற் றசரதி
யுரனூர் படைகள் கூட்டின்றி யுடற்று கின்ற ரொருவரெனும்
வரனூர் காதை செவிப்புகுதப் பெருகு மன்பின் மாண்பினுற்
புரனூர் சேனை யொருநான்கும் போருக் கின்னே யெழுகென்றார். ()

* சடக்கால் - சடமெனப் பெயரியதோர் வாயு.

சேனை யெழுக வெனச்சினந்து தானு மெழலும் புராணிகரோ
டேனை யவரு மன்பின்வழித் தின்ன நிகழ்ச்சி யெனத்தேர்ந்து
சோனை மாரி பொழிந்தம்பாற் றுணையி லிராம னெனுஞ்சீய
மானை நிகருங் கரனாதி யவரை யழித்த தெனமகிழ்ந்தார். (௬௫)

அளியா ரரசன் வைணவர்க ளகலாத் தொடர்பா லித்திறத்தன்
முளியா னவரைத் தோமின்றி முனிவை யுபாயத் தியற்றுதுமிங்
கெளிதா யென்ன வமாத்தியர்க ளெண்ணி யாரா தனப்பெருமா
னொளிதா மாரந் தனைமறையா வதுபோ யொழிந்த தெனப்புகன்றார்.

புகல மகிப னெவ்வண்ணம் போயிற் றார மெனவவர்க
ளகல கில்லா வைணவரே யதுகைக் கொண்டா ராவரென
விகலி னுரைப்பிர் பரனன்பர் கொள்ளா ரியானே சூளதற்குப்
பகர்வ னரவக் குடத்திடைப் பாணி புகுத்தக் கொணர்கென்றான்.

கொணர்ந்த குடத்திற் கரம்புகுத்திக் கூறு மடியார் பாற்சோர
மணைந்த தில்லை யெனவரச ரறைய வரவங் கரமுகப்ப
வணங்கி யமைச்ச ரென்செயுமோ மன்ன னென்ன வுளதுரைப்பக்
குணங்க ணிறைந்தோ ரவர்புரியுங் குற்றம் பொறுத்துக் கொண்ட
னரால். (௬௮)

பின்னர்க் குலசே கரப்பெயர்கொள் பெரியார் தமது புதல்வனுக்கு
மன்ன னாகென் றபிடேகம் வைத்துத் துறந்து வளநகரைத்
துன்னு மடியா ருடன்பதிக டொழுவா னெழுந்து திருவரங்கம்
பன்ன வரிய புகழ்க்கச்சி பரமன் வடவேங் கடக்குன்றம். (௬௯)

இன்னும் பலவாம் பதிகளுஞ்சென் றெங்க டிருமால் பதம்போற்றி
மன்னு மறையின் பொருள்வாக்கி வைத்தாற் போல விருளிரிய
வென்ன வெடுத்துத் திருமொழியென் றிசைக்கு நாமப் பாமாலை
சொன்ன விலக்க மொருநூறோ டைந்து சேரத் தொகுத்தனரால்.

செய்ய கமலை யெனமாயன் றிருமார் பிடமாத் திகழ்கின்றோர்
வெய்ய முய்ய வவன்பணியால் வந்து குலசே கரப்பெயரி
னய்யைந் தாண்டு புவியிலமர்ந் தழியா வொளியே யெஞ்ஞான்றுஞ்
செய்யுந் தான மாம்பரம பதத்திற் கணியாய்ச் சென்றனரே. (௭௧)

தானே பரமாம் பொருளென்னுந் தன்மை யுலகுக் கறிவிப்பா
னூ வடிமைப் *பெரியதிரு வடியை நோக்கி வில்லிபுத்தூர்
மானு மறையோன் புரச்சூடன் மன்னு மென்பா லன்புடையோ
னூ னவன்பா லவதரிப்பா யென்ன வறைந்தா †னரிந்தமனே. ()

திருமா லுரையைச் சிரந்தாங்கித் திகழுங் கலியி னூற்றானேழ்
வருமா வாண்டின் மிதுனமதி மன்னுஞ் சுவாதி நன்னாளி
லொருமா நாமம் பட்டர்பிரா னென்ன விதித்தங் கோத்துமுதற்
றருமா கலைகண் முழுதுமுணர் தக்கோ ரானார் சான்றோரே. (எங)

அகலாக் கமலை யகலத்தார்க் கடிமை முறைமை யெனவாய்ந்து
புகலாப் புகுந்து நந்தனமொன் றியற்றிப் பூவின் மணமாலை
தொகலாப் புனைந்து வடவிலையிற் றுயில்வார் மணிக ளிராவினையும்
பகலாக் கொளிய விமானத்தார் பாத மலர்க்கே தினமணிவார். (எச)

பூணும் வளத்த தென்மதுரா புரியி லரசு புரிபவன்சீர்
சேணுஞ் செலுஞ்செவ் வேற்செழியன் செறியு மிரவி னகர்ச்செயலைக்
காணு மாறு சரிக்கின்ற காலத் தோரந் தணர்பெருமான்
மாணுந் தத்வ ஞானவளம் வழங்க மகிழ்ந்து கேட்டனனால். (எடு)

காலை யெழுந்து கலைகளறக் கற்ற பௌரோ கிதர்த்தாழ்ந்து
சீல முடைய பரம்பொருளைத் தேவே தெளிய வுபாயமெனக்
கேல வுரைக்க வெனச்சங்க மிங்குக் கூட்டிக கிழியறுப்பின்
ஞாலந் தெளியு நீதெளிவாய் யாமுந் தெளிவே நன்றென்றார். (எசா)

நன்று புரிது மெனவரச னூல வைத்துப் பொற்கிழியை
யொன்றப் பரமாம் பொருளிதுவென் றோதி யுதலை யறுக்கவலார்
சென்றிங் கணைக வெனச்செப்பச் சேர்ந்து புலவர் தத்தமதம்
வென்றி யடையு மெனக்கருதி வெவ்வே றுரைத்து வெள்கினரால். ()

வேறு.

பட்டர்பிரா னெனு நாமம் படைத்தபிரான் வடந்துயில்வா
ரிட்டருளுங் கட்டளையா லெழுந்தருளிச் சங்கத்துச்
சிட்டர்தொழு மறையோதிச் சீதரனே பரனென்னக்
கட்டியபொற் கிழியற்றுக் கான்மாட்டு வீழ்ந்தன்றால். (எஅ)

* பெரியதிருவடி - கருடாழ்வார். † அரிந்தமன் - திருமால்.

கண்டுமகிழ்ந் தாசனொடு கவிஞர்களும் பட்டர்பிரான்
விண்டுசித்தர் பெரியாழ்வார் வில்லிபுத்தூ ராரெனப்பேர்
கொண்டவரே யெனவேத்திக் குலவுமத களிறேற்றிக்
கொண்டலென வியமியம்ப நகரைவலங் கொளுவித்தார். (எகூ)

தென்மதுரா புரியைவலஞ் செயும்பொழுது *ககபதிமேற்
பொன்மருமப் பரந்தாமன் போந்தருளப் பட்டர்பிரான்
முன்மருவு ககனமிசை முகில்கமலம் பலபூத்து
மின்மருவப் பொற்குன்றின் மிசைவருவ தெனக்கண்டார். (அ0)

உடங்குவரும் பரிசனத்தோ டுவ்விருவர் தமைப்போற்றி
யடங்ககிலாப் பேரின்பத் தாழ்ந்துபர வசராகி
மடங்கலூரு †விடங்கமலர் மங்கைவளை முதலெவைக்குஞ்
‡சடங்கமறை நிகர்பாவாற் பல்லாண்டு சாற்றினரால். (அக)

பல்லாண்டு பல்லாண்டே யெனப்பாடக் கேட்டருளி
மல்லாண்ட திண்டோளின் மணிவண்ணன் மறைந்தனனாற்
செல்லாண்ட கைச்செழியன் சீர்த்தபர மாரியனே
நல்லாண்டா னெப்பொருட்கு நாரணனே யெனத்தெரித்தாய். (அஉ)

என்றிறைஞ்சி யாழ்வாரை யிணையிலருள் பெற்றேகச்
சென்றுகிழி யறுத்தபிரான் வில்லிபுத்தூர் சேர்ந்துவிரை
யொன்றுமலர் தொடுத்தணியும் பணியொருவா துடையாற்கு
நன்றுபுரிந் தனர்நாளு நந்தனமும் வளர்ந்தோங்க. (அங)

வளர்த்துவரு நந்தனத்தின் மண்மகளோர் பெண்மகளாய்
விளக்கமுறத் துழாய்மூல மேவினடொண் ணூற்றெட்டாக்
கிளக்காண்டி விக்கலியி லாடிமதிக் கேழ்பூரத்
தளக்கரிய புகழ்கொள்பெரி யாழ்வார்கண் டகமகிழ்ந்தார். (அச)

வேறு.

பெண்ணைக் கரத்தின் மிசைத்தாங்கிப் பேணிக் கொடுபோய்த்
தமதில்லி, னண்ண வைத்துக் கோதையென நாமஞ் சாற்றி வளர்த்
திடுநா, ளண்ணல் வடபத் திரசாயிக் காழ்வார் தொடுக்கு மணமாலை
வண்ணக் குழலி லணிந்தழகி தென்னவைப்பாண் மடவரலே. (அரு)

* ககபதி - பக்ஷிராஜன். † விடங்கம் - அழகு. ‡ சடங்கம் - ஆறங்கம்.

நாளு மிந்த வாறுபுரி நங்கை செயலை யாழ்வாரோர்
நாளி லுணர்ந்திவ் வாறியற்ற நங்கா யடுக்கா தென்மொழியக்
*கோளி துயில்வார் பெரியாழ்வார் கனவிற் போந்து கோதைகுழ
லாளுங் கோதை யேவிரும்பி யணியுங் கோதை யெமக்கென்றார். ()

நேடிக் காணாப் பரம்பொருளே நேர்ந்து கனவி லிந்தவுரை
யாடிப் போந்த திம்மங்கை பெருமை யறிய வரிதென்றே
சூடிக் கொடுத்தா ளெனும்பெயருஞ் சூட்டிப் போற்றச் சின்னாளிற்
கூடிற் றிருக்க யௌவனமுங் கோதை யாரை யாழ்வார்தாம். (௮௭)

எவர் நுமக்குக் கணவரென் விழையு முள்ளம் யாமந்தப்
†பாவ முணர வுரைமினெனப் பகர்வார் மனிதர்ப் பற்றிலென்றாற்
றேவ தேவன் மணிவண்ணன் றிருமா றனக்கே யெனையளிக்க
லாவ தென்ன வெப்பதியி லமர்வா னன்னா னெனக்கேட்டார். (௮௮)

பொருந்துந் திருமா றலமனைத்தும் புகல்க வென்னப் பெரியாருந்
திருந்து மங்கை யுரைப்படியே செப்ப மாது செவிக்குணவா
யருந்தும் போழ்தி லணியரங்க விபவங் கேட்டங் ககநாணி
யிருந்த பரிசை யுணர்ந்தெவ்வா றியையு மிதுவென் றெண்ணினரால்.

அந்தத் தினத்தி னள்ளிரவி லாழ்வார் கனவி லரங்கமுதல்
வந்தொப் பரிய நின்மகளாங் கோதை மாதை மணம்புரியு [ங்நன்
முந்தொப் பனையோ டெம்பதிக்குக் கொணர்வா யென்ன மொழிந்தி
சொந்த வடிமைச் செயலினர்க்குஞ் சொற்றார் கனவி லழைத்திடுவான்

பெரியார் புலரி பெருந்திரவிற் பெருமா னுரைத்த வுரைகடமக்
குரியார் பக்கல் விதந்தோதி யொளியால் விளங்கும் புவிமகட்குப்
புரியா நின்றார் மணவணிசில் போதி லரங்கர் பரிசனங்க
டிரியா வரிசை பலதாங்கிச் சென்று கண்டா ராழ்வாரை. (௯௧)

கண்டு பெருமா னியமனத்தைக் கூற வாழ்வார் மகிழ்மிக்குக்
கொண்டு வடத்திற் றுயின்மாய னருளுங் கூடக் கோதையையென்
மண்டுஞ் சிவிகை மிசையேற்றி மன்னு மியமா தியமுழங்க
வண்டு பாடுந் துழாயரங்கன் வாழு நகரம் வந்தடைந்தார். (௯௨)

---

* கோளி - ஆல். † பாவம் - அபிப்பிராயம்.

வந்தா ரரங்கன் றிருத்தளியில் வழுத்து மழகார் மணவாளன்
செந்தா மரைநேர் துணையடியிற் சென்று வணங்கி நிற்கவெழில்
சிந்தாக் கோதை மணவாளன் றிருமுன் சென்று மறைந்தருள
மூந்தா தரத்த வாழ்வாரே முதலோர் காணூஉ வியந்தனரால். (கூங)

அப்போ தரங்க ரருச்சகரா லாழ்வார் மாம னார்முறைமை
யிப்போ தானு ரெமக்கென்ன விசைத்து மாலே முதல்வரிசை
கைப்போ தகத்தி லளித்துவிடை கழறக் கொண்டு பரவசரா
யொப்போ தரியார் புதுவைநக ருடன்வந் தவரோ டடைந்தனரால்.

அடைந்து தாமத் திருத்தொண்டை யயரா தியற்றி யெண்ப
தின்மேன், மிடைந்த வகவை யைந்துபுவி மேவிப் பரம பதஞ்சார்ந்
தார், தொடங்கிப் பல்லாண் டெனநானூற் றெழுபான் மூன்று சொற்
றனர்பா, மடந்தை கோதை யாரொருநூற் றெழுபான் மூன்று வழ
ங்கினர்பா. (கூரு)

உலகிற் சிறந்த திருமண்டங் குடியென் றுளதோர் பதியதனி
னிலவுங் கலியி லிரட்டுநூற் றெண்பா னொன்பா னேராண்டிற்
பலனன் களிக்கு மார்கழியிற் கேட்டை நாளிற் பரந்தாமன்
மிலேயும் வனமா லேயினமிச மேவி யுதித்தா ரோர்புதல்வர். (கூசு)

பாரார் வியப்ப மறைமுதலாம் பலவாங் கலேயு முணர்ந்துவிப்ர
நாரா யணரென் றொருநாம நண்ணி யரங்கர் நியமனத்தாற்
றூரார் நந்த வனமொன்று தாமே யமைத்து மலர்கொய்தே
யேரார் பெரிய பெருமாளி னிணைத்தாட் கென்று மிட்டுவப்பார். ()

இன்ன பெரியார் பத்தியறி வியைபுந் துறவு முணர்ந்தான்றோர்
நன்னர்த் தொண்ட ரடிப்பொடியென் றுறைத்தார் நாம நாரணனு
மன்னு மிரசோ குணப்பெருமை மாந்த ரறியச் செயவுளத்தி
லுன்னி நந்த வனத்தாழ்வா ருடனீர் பாய்ச்சு மொருத்தியின்பால்.

சால்விப் பிரநா ராயணரைத் தகுமன் புடையா ராப்புரிந்தான்
மால்கொண் டவளே யவர்மருவி மகிழ்வுற் றிடுங்கா லோர்நாளில்
வேல்கொண் டிலவு விழிமடவாள் வேட்ட தளிக்குந் திறனிலராய்
மேல்கொண் டுற்ற வணங்கின்மன மெலிந்தா ரரங்க னோர்ந்ததனே.

மறையோ னொருவ னெனவடிவம் வாய்ந்து தனது தளியிலுள
விறைசேர் சுவணத் தொருவட்டி லெடுத்துத் தாசி யிலம்புக்குப்
பொறைசேர் தொண்ட ரடிப்பொடியார் தந்த தென்று புகன்றீய
முறைசே ருளத்தா ளாழ்வாரை முன்னிற் சிறக்க முயங்கினளால்.

வேறு.

அந்நிலையின் மற்றையநா ளரங்கர்திருத் தளியிலுளார்
பொன்னியற்று மொருவட்டில் போயிற்றீ தெவர்கொண்டா
ரென்னவுறு மிடந்துருவி யெவ்வயினுங் காணாராய்
மன்னியசீர்த் தொண்டரடிப் பொடியாழ்வார் மகிழ்தாசி. (கoக)

மனைவயினிற் கண்டுவட்டின் மற்றவளோ டாழ்வாரை
யினையசெயல் புரிந்ததென்னே யெனவருத்த வவ்வருத்தந்
தனைவருத்த வரங்கேசன் றுசர்தமை வருத்தாதீர்
மனமகிழ்வா னாழ்வார்க்கா மற்றதுசெய் தேமியாமே. (கoஉ)

என்றுவிண்ணி லசரீரி யாலிசைக்க வத்தலத்தார்
நன்றுதெளிந் திறும்பூது நண்ணிவிப்ர நாரணரை
யின்றறியா தியாமிழைத்த பிழைபொறுக்க வெனத்தொழுதா
ரன்றரங்கர் திருவருளுக் ககமகிழ்ந்தே யாழ்வாரும். (கoங)

மாதொருத்தி பால்வைத்த மயற்கயர்ந்து கழுவாயை
யோதுவிதிப் படிபுரிந்தக் கும்பர்பிரான் கருணையினாற்
றுதலர்ந்த திருமாலைத் தனித்தொண்டு முன்னையிற்செய்
தாதரவால் வேதார்த்த மமைந்ததிரு மாலைப்பா. (கoச)

சீர்பெறுநாற் பானைந்துந் திருப்பள்ளி யெழுச்சிபத்து
மேர்பெறச்செய் தரங்கன்று ளிடைவிடா துளத்திரீஇப்
பார்மிசைநூற் றைந்தாண்டு பணியரங்கர்க் காற்றிப்பின்
நீர்வரிய பரமபதத் திருநாட்டிற் சென்றனரால். (கoரு)

வேறு.

செல்வமலி சோணாட்டிற் றிருவுறந்தைத் திருப்பதியிற் றிருமான் மார்பி, னெல்லொளிய சீவற்சத் தெழிலமிச மொருமதலை யெனச்செஞ் சாவி, நல்குகலி யிடைக்கலியின் முன்னூற்று நாற்பத்து

மூன்று மாண்டின், மல்கநலக் *தேட்டிங்கள் வருமுரோ கணிநாளின் †மதலை நின்று. (க0சு)

உலகளிக்க வந்தருளு மொப்பினர வரியென்ன வுதித்து மேவ, நிலவுதவத் தொருபாணன் றன்மனையோ டந்நெறியி னேரு மெல்லை, யிலகுகதி ரிடைக்கதிரி னெழில்காட்டுங் குழவியைக்கண் டெடுத்து வந்தே, சலசநிகர் முகத்துணைவி கரத்தளிக்க வவண்மகிழ்ந்து தாங்கிப், போந்தாள். (க0எ)

இருவருந்தாம் வதிசேரி யிடைப்புகுந்த பின்னவ்வை யெழின் மைந் தர்க்குப், பருகமுலைப் பாலளிக்க மைந்தருண தறிந்துபசுப் பாலை யூட்டத், திருவமிக வளர்ந்துயர்வா ரோதாதே யனைத்துமுணர் திருப்பா ணாழ்வார், பெருகுபுனற் காவிரியிற் புகுந்தாடித் திருவரங்கப் பெருமான் மேவும். (க0அ)

ஆடகத்தி னொளிவிசும்பை யணவியெழும் விமானத்தை யன்பிற் போற்றி, மாடகஞ்சேர் யாழ்வருடி விஞ்சையரு மதிசயிக்க மாயோன் சீர்த்தி, பாடியுள நெக்குருகி மயிர்பொடிப்ப வானந்தக் கண்ணீர் பாய்ந்து, நீடெழில்செ யுடனனைப்பப் பரவசரா யசைவின்றி நிற்பர் மாதோ. (க0கூ)

இவ்வண்ணம் வைகறொறுங் காவிரியி னீராடி யிசைசேர் யாழைக் கைவண்ண மலர்க்கொண்டு திருவரங்கன் புகழ்பாடிக் களிக்குநாளின் மைவண்ணத் திருமாலு மலர்மாதுங் கானவிசை மகிழ்ந்து கேட்பா ருய்வண்ணந் தொண்டுசெயு முலோகசா ரங்கமுனிக் கோரி ராவில்.

கனவிடைநம் பெரியபெரு மாடோன்றிக் காவிரிமாட் டணுகிப் பாடி, மனமுருகு நம்மன்பன் பாணனைநின் றோளேற்றி வருக வெம்மு, னெனமலர்வாய் மலர்ந்தருள வுலோகசா ரங்கமுனி யெழுந்து காலை, புனைவனத்தன் றிருக்கோயிற் புகுந்துகனத் திறம்யார்க்கும் புகன்றுன் மன்னே. (கககு)

இத்திறங்கேட் டதிசயிக்கு மேவரொடு மம்முனிவ னெழுந்து பொன்னித், "தத்துமலைக் கோடணைந்து திருப்பாணர்க் கரங்கர்நியமனத்தைச் சாற்றி, யெத்தவம்யான் புரிந்தனன்கொ லிப்பணிக்கெ.

* தேட்டிங்கள் - விருச்சிகமாதம். † மதலை - தூண்.

ண் ருழ்வாரை யேற்றித் தோளின், முத்திதரு திருவரங்கன் றிரு முன்னர்க் கொடுபோந்து முறையி னுய்த்தான். (ககஉ)

அரவணையிற் றிருக்கண்வளர்ந் தருள்பரம புருடனைக்கண் டன்பிற் பல்காற், பரவிவிழுந் தெழுந்துநின்றெம் பெருமானார் திருமேனிப் பண்பு நோக்கி, வரவமல னுதிபிரா னெனவெடுத்து மாண்பு பெற மலர்மென் வாயால்*, விரவிவர வாபாத சூடமொரு பாப்பத் தால் விளம்பிப் போற்றி. (ககங)

வேறு.

அங்குளார் பலருங் காண வாழ்வார்தென் னரங்கத் தெம்மான்
மங்கள மேனி புக்கு மறைந்தனர் மலரின் மாரி
புங்கவர் சொரிந்து நின்றூர் புராணமாப் புருடற் பாடி
யிங்கிவர் புவியில் வாழ்ந்த திருபதாண் டென்ப மாதோ. (ககச)

வேறு.

நீடுவளம் பொலிபொன்னிச் சோணாட்டின் றிலதமென நிகழ்த்து மாலி
நாடுதனிற் றிருநகரிப் பதிக்கிறைவ னுரணன்பா னுளு மன்பு
கூடுவள வன்சேனைக் கதிபதியாய்க் குலவலைகள் கொழித்து முத்த
மாடுசொரி தடமண்ணித் தென்பாலேய் மணிமாட மங்கை வேந்தாய்.

தேமருவு துழாயலங்கற் றிருமாலுக் கடிமைபுரி திறத்து நீல, நாமமுறு மொருசதுர்த்தன் புரிநவத்தா னளினியிறை தாங்கு சார்ங்க, மாமையுறு மமிசமொரு கான்முளையா யிரண்டொழிய மன்னு நாளுா, ருமகவை தனிற்கலியிற் கார்த்திகையிற் கார்த்திகைநா ளழகுற் றோங்க. (ககசு)

திசையோங்கப் புவியில்வளஞ் செழித்தோங்க வறமோங்கத் திருமால் பாத, மிசையோங்கு மன்பர்மன மிகவோங்க வந்தணர்க ளோதும் வேத, விசையோங்க வானவர்க ளிறைக்குமல ரோங்கவெலை னவெங்கு மோங்க, நசையோங்குந் தந்தையுள நனியோங்க வுதித் தந்த நாளின் மன்னோ. (ககஎ)

மகவுதிக்க நீலனெனப் பெயரளித்து மறையவர்க்கு வழங்கிச் செம்பொன், மிகவுவப்பத் தாதையிள மதியமெனத் திருமகனார் மே

*மென் வாய் - மெல்லியவாய். "செய்புன்யானை" என்பது போலவந்தது.

ன்மே லோங்கித், தகவுறுமைந் தகவையுறத் தமிழையிலக் கணத் தோடு தாழா துள்ளம், புகவுணர்ந்து தமக்குரிய பொருபடையின் றிறமுற்றும் போதக் கற்றார். (கக௮)

தந்தையெனு நீலனுமப் பிணைச்சாரச் சோழன்பாற் றனை வே ந்தாய், மைந்தனார் முகிறுஞ்சு மதின்மங்கைப் பதிக்கரசா யமைச் சர் நால்வர், சிந்தனையிற் றேர்ச்சியுளா ருடங்குறைய வாடன்மாச் செலுத்தித் தெவ்வர், வெந்திறலை யொழித்திடலாற் பரகால னெனு நாம மேவி னாரால். (ககக)

விதுவணவு மலர்ச்சோலைத் திருநாங்கைத் திருவெள்ளக் குளத் தின் மேவு, மதுவிரியு மலர்வாவிச் செங்குமுத மலர்மாட்டெம் மா யோ னேவப், புதுவெழிலார் குழவியெனப் புத்தேண்மா தொருத் தியுறப் போந்தாங் குற்ற, முதுவைசிய னெடுத்துமனை கரத்தீந்து *முதமுற்றான் முன்னை நோன்பால். (க௨௦)

மகள்வடிவந் தாய்நோக்கி மகிழ்ந்துவளர்த் திடவளரு மாது மா ங்கே, தகவுதரு மணப்பருவந் தனைமேவ யார்க்களிக்குந் தகைய ளெ ன்ன, மிக்வுமனத் திடைநாடித் தந்தைதாய் கவற்சியுறும் வேலை தன்னி, லிகல்கடிந்த பரகாலற் கிசைத்தனர்பல் லோரிம்மா தியற் கை தன்னை. (க௨க)

மாதியற்கை திருச்செவியிற் புகுமளவின் மங்கையர்கோன் மகி ழ்ந்து காண, மீதிவரும் பெருவிழைவால் வேங்கடமா லுறைவெள் ளக் குளத்தின் மேவித், தாதியலு மலர்க்கணைவே டனிவென்றிக் கொடிநிகராத் தயங்கு மாம்பற், போதில்வரு மடமானை யுயிர்வாய்ந் த வோவியத்தைப் பொற்பக் கண்டார். (க௨௨)

முக்கோலுங் கற்றாசுங் கமண்டலமுங் கொண்டுடைய முனிவ ரேனு, மிக்கோல மகட்காணி லென்புரிவ ரருந்தவமே யியற்றும் யோகர், செக்கோல மனக்கதவந் திறக்கும்வலி பெற்றுடைய செய ய கோலோ, வக்கோலக் கடலுலகி லநங்கனார் செங்கோலோ வறியே மென்றார். (க௨௩)

---

* முதம் - மகிழ்ச்சி.

முத்தநகைக் கரியகுழன் முழுமதிநேர் திருமுகத்திம் மாதை முன்னி, லெத்தகைய மங்கையரு மாடவராந் தன்மையினை யெண்ணி நோற்பா, ரித்தகைய திருமகணிற் கெவ்வண்ணங் கிடைத்தனளென் றிசைப்பத் தாதை, புத்தமுதத் தடவயினோர் குமுதமல ரிடைக்கிடைத்த புதுமை கூறி. (கஉச)

வளையாதி புயத்தேந்தி யூர்த்துவபுண் டரந்தீட்டி மால்பா லன்பே, யுளனாகி யவனடியார்க் கோதனமா தியவளிக்கு மொழுக்கினாற்கிவ், விளமாதர் மனையாவ ளெனுநியம முடையாளென் றிசைப்பக் கேட்டே, யுளமூறு மகிழ்க்குறைய லூர்க்கலிய னவ்வண்ண முறுவ லென்னா. (கஉரு)

மெய்க்குரவன் றனையடைந்து விதிமுறையாற் பணிந்தேத்தி மேவு சங்க, சக்கரலாஞ் சனராகிக் குமுதமல ரிடைப்பிறந்தா டாதை பால்வந், திக்குமதி மொழிமுகத்துன் மகணியம மெமக்கியைந்த தியாமே கொள்ளத், தக்கவளம் மடமயிலைத் தருதிமண வினைமுடிக்கத் தாழா தென்றார். (கஉசா)

அதற்கிசைந்து மலர்மகளை யவனளிக்க வதுவைவிதி வழுவா தாற்றி, மதற்குமிலா வடிவுடைய மணமகனார் மனைவியொடு சுற்றஞ் சூழ, *வுதக்காசைக் கிறைநகரு மொப்பரிய செல்வமங்கை யூர்வந் தெம்மால், பதத்தார்வ முறப்பணிந்து பைம்பொனு லியற்றிடுதம் பவனஞ் சார்ந்தார். (கஉஎ)

வேறு.

குமுத வல்லி கொழுநற் றெழுதன
நமுத னாரண னற்றொண்ட ராயிரர்க்
குமுத மெய்தக் கொடுத்தன் றி வைகலு
மமுத மேனு மருந்திலெ னென்றனள். (கஉஅ)

நங்கை வாய்மொழி நம்பி நயந்தரு
டங்கு மாயவன் றொட்கன்ப ராயிரந்
துங்க வேதியர்க் கோதனந் தோமிலா
தங்க ளூரு மகமகிழ்ந் திட்டனர். (கஉகூ)

* உதக்காசைக்கிறை - வடபுலக்கோன் (குபேரன்)

இன்ன வாற்றி லிவர்மகிழ் வெய்துநாட்
சென்னி மன்னன் பகுதி செலுத்தில
ரன்ன தானத் தமையு நிதியெலாந்
துன்ன வேசெல விட்டனர் சோழனும். (கரு0)

நின்ற தூதரை நேருற நோக்கிநீர்
சென்று நந்திறை சேனைக் கதிபனு
மொன்று நீல னுதவிலன் வாங்கியே
யின்று வம்மி னெனவவர்க் கோதினான். (கருக)

காலிற் காலிற் கடுகிய வேவலர்
வேலில் வீரம் விளக்கிடு மங்கைமன்
பாலி னேகிப் பகுதிப் பணயநீர்
சீல மேவச் செலுத்துதி ரென்றனர். (கருஉ)

தூதர் மாற்றந் துணைச்செவிக் கேற்றனர்
யாது மன்பண மென்வயி னின்றுநீர்
போதி ரென்னப் புகன்று *படர்க் கொடு
மோதி நீக்கினர் மொய்ம்பதிந் தேகினார். (கருங)

போன தூதர் புகன்மொழி கேட்டனு
மான சீற்றத் தரச னணித்துள
சேனை நாத னொருவற்குத் தேர்முத
லானை பாய்பரி யாட்படை கொண்டுநாம். (கருச)

ஆடன் மாவல னும்பர காலனைக்
கூடி வென்றுகைக் கொள்வமென் றோதித்தன்
சாடு தானைத் தலைவனு டன்பொர
மாட மங்கை வளநகர் முற்றினான். (கருரு)

மன்னன் சேனை வளநகர்ச் சூழ்தனு
மின்னு வாள்கர மேவிக் கலியனு
முன்னு மந்திரர் நால்வ ருடன்படை
துன்ன வாடற் பரிமிசைத் தோன்றியே. (கருசா)

* படர் - ஏவலாளர்.

ஏற்றுச் *சென்னி யெதிரி லவன்படை
தோற்று மாயத் துணித்துத்தம் வாளினுற்
கூற்ற மென்னக் குலாந்திற மோர்ந்தொரு
மாற்ற மோதுவன் வஞ்சகங் கொண்டுமன். (கஙஎ)

வெற்றி கொள்பர கால வியந்தன
முற்ற நின்னுடை †யோதனந் தன்னையா
நிற்றி போரொழி நேயங்கொண் முன்னையிற்
சற்று மஞ்சலை சாருதி நம்பதி. (கஙஅ)

என்று கிள்ளி யிசைத்திடு பொய்யுரைக்
கொன்று பட்ட வுளத்தொடு முன்செலச்
சென்று மன்பதி சேர்பர காலரை
யன்று தன்றிறைக் காக்கினன் காவலே. (கஙகூ)

காவ லிற்பர கால ரமைந்துழி
யோவ லின்றி யுஞற்றன்பர் பூசனை
மேவு ருத விதமெண்ணித் துன்புளம்
பாவ லாலுண வுண்டிலர் பத்தர்தாம். (கசo)

ஆய காலையி லத்திகி ரிப்பதி
மேய பேரரு ளாளர் விமலர்தா
நேய மங்கைக் கரசர் நிலைதெரீஇப்
போயொர் மாற்றம் புகல்வர் கனவிடை. (கசக)

மிக்க பத்திமை மேதகு நோன்பையே
தக்க செல்வ மெனக்கொளுந் தன்மையாய்
புக்கு நந்தளிப் பக்கற் பொருள்கொளீஇத்
தொக்க துன்பந் துடைத்தியென் றோதினர். (கசஉ)

ஓது சொப்பன மோர்ந்தெங் கலியனார்
மாத வன்செயற் குள்ள மகிழ்ந்தியான்
கோதி லும்பொன் கொடுப்பென் சிறைசெய்விர்
போது மெம்மோ டெனப்புகன் றேகினர். (கசங)

* சென்னி - சோழன். † ஓதனம் - போர்.

பொருவின் ஞானப் புரவலர் முன்செல
மருவு காவல்செய் வார்கள்பின் சென்றிடத்
திருவ மேவிச் சிறப்புறு கச்சியி
லொருவன் பேரரு ளாள னுறைதளி. (கசச)

மன்னிப் போற்றி வலங்கொடு மாலுடன்
பொன்னி றப்பெருந் தேவி புனைகழற்
சென்னி கொண்டு திருந்த வணங்குபு
பன்னி யேத்தினர் பற்பல வாறரோ. (கசரு)

எந்தை யேயுல கெங்கு நிறைந்துளாய்
பந்த நீக்கும் பரம்பொரு ணீயெனச்
சிந்தை முற்றத் தெளிந்தவ ரோதுநின்
கந்த முந்து கழறந்து காக்கென. (கசசா)

அறைந்து பேரரு ளாள ரருளினன்
மறைந்து றைந்த நிதிகொண்டு மன்னனாற்
பறைந்த தாகும் பகுதி யடியர்கை
நிறைந்து மேவ நிரப்பிமற் றெஞ்சிய. (கசஎ)

செம்பொன் கொண்டு திரும்பித்தம் மூர்புகுந்
தும்பர் நாத னடியவர்க் கோதனம்
பம்பு மன்பிற் பரவி யளித்தனர்
வெம்பு காவலர் வேந்தன்மு னெய்தியே. (கசஅ)

வாங்கி வந்த வளநிதி யாவுமன்
பாங்கர் வைத்துப் பணிந்து நடந்தவவ்
வோங்கு மற்புதச் செய்கை யுரைசெய
வீங்கு காவிரி வேந்தன் வெரீஇ யெழீஇ. (கசகூ)

அன்ன பொன்னோ டளவில் பொருள்கொடு
மன்னு மங்கையர் கோன்முனம் வந்துநின்
றென்னை யாளுதி யென்பிழை யாற்றியிப்
பொன்னை யேற்றெனப் போற்றி வணங்கினன். (கருo)

வணங்கு மன்னர்க் கருள்செய்து மங்கைமன்
மணங்கொ ளாம்பன் மலர்வரு மின்னொடே
யிணங்கு வேதிய ராயிரர்க் கேற்றன
குணங்கொள் பூசை குறைவற வாற்றுவான். (கருக)

வேறு.

கைப்பாலி னுள்ள பொருளேக மன்னர் கலர்கொண்ட பொருளை வவ்வி, மெய்ப்பாலி னுகு மவர்கொள்ள வீதல் விதியென்ன வோது நூலென், றெப்பாரின் மங்கை யுறைவார்த முள்ள முறவுன்னி நீழன் மறைவான், றப்பான தாளு துவனீர் நடப்பன் றேலாத வல்வ ழக்கன். (கருஉ)

எனவோது நான்கு மதிதே ரமைச்ச ரிவரோடு கூடி வழியின், மனமே யிரங்கி யளியாரை மாலின் மதமேவு நன்மை யிலரைச், சினமோடு ருக்கி நிதிகொண்டு செம்மை செறிபாக வதர்கள் பூசை, தினமே புரிந்து வருநாளொர் வைகல் செல்வோர் வகுந்தி லிலரால். ()

புரிகின்ற தின்று பகலென்னை யென்று புணர்பொன்று கொண்டொ ரில்லின், விரிகின்ற கொல்லை வயினே மறைந்தொர் விதுவென்ற நுதலி கையிற், றெரிகின்ற வெண்பொன் வளமொன்று கண்டு திருநாம நுதலி லிலளிச், சுரிகின்ற கூந்த லெனவள்ள மங்குத் தொடரங்கை வவ்வு பொழுதில். (கருச)

அப்பேதை தன்செம் மலைமேவி யென்கை யமர்வள்ள மன்ப வரியா லிப்போது கொள்ளு தலையுற்ற தான தெனவோதி நின்ற மொழிகேட் டொப்பா ரிலாத திருமங்கை மன்ன ருறுபாக வதர்க டனமா *மொப்போடு கோர மெனநல்கி மீள லுற்றார் சிறக்கு மதியார். ()

வள்ளத்தை யீந்து மதிதே ரமைச்சர் வரநால்வர் காட்டு வழிபோ, யுள்ளத்தி னெண்ணி வருவாரை நோக்கி யுறுகின்ற போழ்தின் மாயோன், † வெள்ளத்த பூவி லுறைவாரை மங்கை வேந்தா லுய் விக்க நினையாக், கள்ளூற்ற வோதி மலர்மங்கை யோடு கவின் மன்ற வணிக டாங்கி. (கருரு)

* ஒப்போடுகோரம் - உவமைநீங்கிய வட்டில். †வெள்ளத்தபூவிலுறைவாரை - கடலையுடையபுவியில்வதிகின்றவுயிர்களை.

வேறு.

தேவர்கள் சூழ்ந்து போதச் செகத்துமா னிடத்தை மேவிப்
பாவன ராகி மங்கைப் பதியுளார் வதியுங் கானி
லாவதோர் வழிமீச் செல்ல வாடமா வலவர் நோக்கி
யேவரோ வருகின் றார்க ளெனமகிழ்ந் தாய்ந்து நால்வர். (கருஎ)

மந்திர ருடனே சென்று வழிவரு மவரை நோக்கி
யெந்திட மேகு கின்றீ ரேகன்மி னின்மி னென்று
முந்துற வுறுக்கி நுங்கண் முழுவிலைப் பணிகண் முற்றுந்
தந்திடு கென்று கேட்கத் தருதலும் வாங்கி யாழ்வார். (கருஅ)

பொற்புறு பேழைப் பெய்து புறம்பதை யெடுக்க வாரா
வற்புத நோக்கி யென்னே யசைந்தில திந்த மாய
விற்பனச் செய்கை செய்தான் வேறில னிவனே யென்னாத்
தற்பரன் றன்னை நோக்கிச் சாற்றென்மந் திரநீ செய்தாய். (கருகூ)

என்றுகேட் டளவின் வாளா விருத்தலை நோக்கி வாளா
லின்றுனைக் கொல்லு கிற்ப லிசைக்குதி விரைந்தென் றேத
மன்றலந் துளபத் தெம்மான் மங்கைமன் செவித்த லத்தே
யன்றருள் புரிய வட்டாக் கரமெனு மனுவை யம்மா. (கசுO)

மந்திர மெவைக்கும் வேந்தா மனுதிருச் செவியி லேற
முந்தநாங் குருவாற் பெற்ற முதுமனு விதனை யென்னே
நந்தமால் சமைய மென்ன நாடுதற் கியைபொன் றில்லா
விந்தமா னுடனு ரைத்தா னெனக்கலி கன்றி யாரும். (கசுக)

மனந்திகைக் கின்ற காலை மறைபுகல் செங்கண் மாலுங்
கனந்திரண் டனைய வைம்பாற் கமலையா ருடனே விண்ணிற்
றினஞ்செயுங் கதிரின் மிக்க சேயொளிக் கலுழ னேறி
யினந்தரு தேவர் சூழ வெதிர்வந்து காட்சி தந்தான். (கசுஉ)

கண்டனர் காணுக் காட்சி கரைகடந் தன்பின் வெள்ள
மண்டிமேக் கெழுந்தா லன்ன மலர்க்கணீர் சொரிந்து செங்கேழ்
முண்டக மலர்த்தாள் பல்கான் முறைமுறை பணிந்து போற்றி
யண்டர்கட் கரசே யோரா வடியென்செய் பிழைகள் பாற்றி (கசுரு)

ஆண்டருள் ளென்று போற்றி யண்ணலைக் கமலை யாரை
மூண்டெழு பரம ஞான முதிர்தர மூல மான
மாண்டகு மனுவா மட்டாக் கரப்பொருள் வாய்ப்பக் கண்டே
யீண்டுளா ருய்யு மாறெங் கலியனு ரிசைப்பா ரானார். (கசுச)

வாடினேன் வாடி யென்று மங்கைமன் றிருவாய் விண்டு
பாடிநின் றேத்து மெல்லைப் பராற்பர ளுகு மெம்மான்
கூடுதன் றிருக்க ணோக்கங் குறைவறப் புரிந்தெம் மன்ப
வாடன்மா வலனே யாம்பல் வல்லியோ டளவ ளாவி. (கசுரு)

நந்திருப் பணிகள் செய்து நான்மறைப் பொருள்கண் முற்றுஞ்
செந்தமிழ்ப் பாவா லோதித் திகழுநஞ் சமைய நாட்டி
யிந்தநன் னிலத்திற் சின்னா ளிருந்துபின் னெமது வீடு
வந்துசே ரஞ்ச லென்று மறைந்தனன் கருணை வள்ளல். (கசுசு)

மாயவன் மறைந்த பின்னர் மங்கையூர்க் கரசு முன்போற்
றாயதா மடியர் பூசை சோர்விலா தாற்றி விண்ணிற்
சேயொளி செய்வி மானஞ் சேர்திரு நகரி யெம்மாற்
காயநற் றளிபு துக்கி யந்நகர் வைகிச் சின்னாள். (கசுஎ)

வேறு.

அரியெமது திருவகலா வகலத்தான் குணங்கூறும்
பெரியதிரு மொழிமுதலாம் பிரபந்த மினிதோதிப்
பொருவரிய திருப்பதிகள் புக்கிறைஞ்சு மவாவினராய்
விரிபொழில்சூழ் காழிநகர்ச் சீராம விண்ணகரில். (கசுஅ)

நிலவுதருங் குடைநிழலி னிரப்புமொலித் திருச்சின்னம்
பலவிசைப்ப நாலுகவிப் பரகாலர் போந்தாரென்
றுலகறிய வந்திகர்முன் னோதவெழுந் தருள்போதிற்
றலைமைகொடு திருஞான சம்பந்தர் தடுத்தனரால். (கசுகூ)

தடுத்துவரும் புகலியர்கோன் றனைக்கவியால் வெல்லவவர்
நடத்தாடன் மாவல்லீர் நாலுகவிப் பெருமானென்
றெடுத்துரைக்கும் பெயருமக்கே யிசையுமென வேத்தப்போய்த்
தொடுத்ததுழாய்த் தாடாளன் றனையடியன் பொடுதாழ்ந்தே. ()

ஒருகுறளா யென்றெடுத்தே யோங்குதமிழ்ப் பாமாலை
விரியுமறைப் பொருள்விளங்க விளம்பியந்தப் பதிநின்று
பொருவரிய தொண்டர்குழாம் புடைசூழப் பொன்கொழித்தே
யிருமருங்குங் காவிரிசூ ழெழிலரங்கப் பதியணைந்தார். (கஎக)

திருவரங்கத் தரவணையிற் றிருக்கண்வளர்ந் தருள்வானைப்
பெருவரங்க ளளிப்பானை மணவாளப் பெருமானைக்
கருவரங்கிற் புகாவண்ண மடியவரைக் காப்பானை
யொருவரங்க முகந்தானை யுயருமன்பு கொடுபணிந்தார். (கஎஉ)

பணிந்தரங்கன் றிருத்தாட்குப் பண்ணிசைசேர் பாமாலை
யணிந்துபல நாளுறு மங்கர்வா யமர்நாளிற்
றிணிந்தமதிற் கோபுரமண் டபமாதி செயவுள்ளந்
துணிந்துபொருள் சேகரிப்பான் மந்திரிக ளொடுசூழ்ந்து. (கஎங)

அலைகடல்சூழ் திருநாகைப் பதியணைந்தங் கமரர்தொழ
வலர்மகளோ டினிதுறையு மழகியார் புகழ்பாடிப்
புலனழிந்த பவுத்தர்தளிப் பொருந்தாழி யெந்திரத்தை
நிலவுமதி யூகத்தா னிலைநீக்கி யாங்குள்ள. (கஎச)

பைம்பொனா லமர்விம்பம் பலகவர்ந்து தென்னரங்கத்
தெம்பிரான் றிருக்கோயிற் கிலங்குமதின் மண்டபமோ
டும்பர்செலுங் கோபுரமு முயர்பணிக ளினும்பலவும்
பம்புமலர்ப் பொழிற்குறையற் பரகாலர் புரிந்தனரால். (கஎரு)

பொன்னினியற் றுருவனைத்தும் போயொழிந்த தறிபுத்தர்
சென்னிமுனம் வந்தெய்தித் திருமங்கைக் கோன்கொணர்ந்து
மன்னவவெங் கடவுளரை மன்னு*சிவை வைத்துருக்கித்
தென்னரங்கப் பணிபுரிந்த திறங்கேட்க வெனவுரைத்தார். (கஎசு)

அவ்வுரைகேட் டாழ்வாரை யரசெதிர்ந்து சாக்கியர்சொல்
லிவ்வுரைக்கென் னிபமென்ன யான்கொணர்ந்து புரிபணியாற்
றெவ்வடுதோட் செம்பியனே தீயமதச் சீவரருங்
கவ்வையுழிந் துயர்கதியைக் காண்குவரென் றோதினரால். (கஎஎ)

* சிவை - உருக்குகுவை,

அன்னவுரை செவிப்புகுது மளவில்புத்தர் மிகக்கனன்றே
யென்னையிவர் பொருள்வவ்வி யெமதுமதத் தினைத்தாழ்வுஞ்
சொன்னவித மெனக்கேட்கச் சோழனிடத் தாழ்வாரு
மன்னுமிவர் மதப்பண்பு நமதுமத மாண்பினையும். (கஎஅ)

நீதிபதி யாமிருவே நிகழ்த்தநடு நிலையினனு
யோதுதிற நீயாய்வா யெனவுரைக்கப் புத்தர்களு
மீதுபுரி வோமென்று தங்கண்மதத் தியல்புரைக்க
வாதிலவ ருரைமறுத்து மாதவனே பரனென்று. (கஎகூ)

மங்கையர்கோன் றனதுவிசிட் டாத்துவித மாண்புநிறீஇ
யங்கவரை வென்றிடலு மவர்வெள்கிப் புறம்போகச்
செங்கதிரின் வழித்தோன்றல் சிந்தைமகிழ்ந் தாழ்வார்க்குத்
துங்கநிதி பலவளித்துத் தொழுதுதன திடம்புகுந்தான். (கஅ0)

மேதகைய மங்கையர்கோன் வேறுபல பணிகளும்பின்
சோதிமணி மார்பினர்க்குத் தொழுதுபுரிந் துறைநாளி
லோதுதிருக் கார்த்திகைநா ளுறுவிழவிற் றேவியரோ
டாதிமறை புகறிருமான் மஞ்சனங்கொண் டருள்காலை. (கஅக)

புக்கிறைஞ்சிப் பரம்பொருளே பொருவிறிருக் குருகூர்வாழ்
தக்கவகு ளாபரணர் தமையிங்ங னெழுவித்துத்
தொக்கதனு மதிபக்கஞ் சுக்கிலவே காதசியின்
மிக்கவிசை வேதமுடன் விளங்குதமிழ் மறையினையும். (கஅஉ)

திருச்செவிக்கேற் றருள்கவெனத் திருமங்கைக் கோன்பணிந்து
பெருத்தெழுமன் பொடுவேண்டப் பெரியபெரு மாளுனது
கருத்துவப்பே யெமக்குமெனக் கலிகன்றி யார்மகிழ்ந்தே
யருத்தியொடு பரமபதத் திருவாயி லமைத்தொன்று. (கஅங)

ஆங்கெழில்கொள் பரமபதத் தம்மானைப் பதிட்டைசெய்து
தீங்கொழித்துக் கதியளிக்குந் திருக்குருகை மாறர்தமை
யோங்கரங்க நகர்க்கெழுவித் தத்தியய னுற்சவத்தைப்
பாங்குபெற வேயொருபான் பகனடத்தித் தமிழ்வேதம். (கஅச)

ஒருபதுநா றெண்ணணைந்த வொப்பிறிருப் பாசுரத்தைத்
தருமுறையிற் சாத்துமுறை செய்வித்துத் தாழாமல்
வருமாண்டொவ் வொன்றினுமிவ் வாறியற்று மாபுரிந்து
திருமால்சேர் பதிகடொழச் சென்றனர்நம் மங்கையர்கோன். (கஅ௫)

சென்றுபதி பலபணிந்து தேவர்மலர் தூய்நாளு
நன்றுதொழ வருள்புரியு நம்பிதிருக் குறுங்குடிபுக்
கொன்றுபடு மனத்தினரா யுயர்நியமத் துறைமுகுந்தன்
றன்றுணைய குருமலர்த்தா டொழாது தாழ்ந்தனரால். (கஅ௬)

தாழ்ந்தெழுந்து சின்னாளத் தலத்திருந்து திருமாற்குப்
போழ்ந்திருளை யொளிவிரிக்கும் பொன்மதின்மண் டபமியற்றி
யாழ்ந்திடுமெய் யறிவார்ந்த வாழ்வார்நூற் றைந்தாண்டிற்
சூழ்ந்துபர முத்தரென்றுந் தொழுந்திருநா டலங்கரித்தார். (கஅ௭)

வேறு.

பெரியதிரு மொழியோரா யிரத்தோடொன் பானுலாப் பிறங்கு பாக்க, ளரியவெழு கூற்றிருக்கை யொன்றுநெடுந் தாண்டகமா றைந்தா மெம்மாற், குரியகுறுந் தாண்டகநா லைந்துசிறு மடற்பாவு மோதி நாற்பான், பெரியதிரு மடலெழுபத் தெட்டுமங்கைப் பெருமான்முன் பேசும் பாவே. (கஅஅ)

கக-வது ஆழ்வார் வைபவச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - எஎஅ.

# கஉ-எம்பெருமானுர் வைபவச் சருக்கம்.

மன்னுதிரைக் கடல்புடைசூழ் வையமிசை வளமல்கு தொண் டை நாட்டிற், பொன்னுறையு மருமத்துக் கேசவனுர் மருவுபெரு ம் பூதூர் தன்னிற், றன்னிகரா ரிதகுலத்தி லாசூரி கேசவப்பேர் சா ரும்விப்ர, முன்னவர்க்கு நன்மனைபூப் பிராட்டிவயின் மாயனருண் முதிர்ச்சி யாலே. (க)

கலியினு லாயிரத்தோ டொருநூற்றி லீரொன்பான் கலக்கு மாண்டில், வலிகெழுவு மேடமதி யாதிரைநா டணின்மிக்க மதியிற் சேர்த்துப், பொலியுமொரா யிரந்தலைய வரவரச ரவதரித்தார் புதல் வ ராக, மலியுமகிழ் வொடுதந்தை மறையவர்க்குப் பொன்முதல வழங்கி னுனல். (உ)

ஆறங்க நால்வேத மறிந்ததிரு மலைநம்பி யாங்குப் போந்து, வீறங்க விலக்கணமுங் கமலமுகத் திருவழகும் வியந்து நோக்கிப், பேறெங்கட் குளதிந்த வெழின்மகவா லெனவுரைத்துப் பெருகவெ ண்ணி, மாறங்க ணிலாமைந்தர்க் கிளையாழ்வா ரெனுநாமம் வழங்கி ச் சென்றுர். (ங)

தந்தையார் புதல்வருக்குத் தகுமுறையிற் சவுளமுப நயனஞ் செய்து, சந்தமுறு மாறங்கஞ் சதுர்மறையு மோதுவிக்கத் தாமோர்ந் தோதி, மைந்தனுர் கலைபலவு முணர்ந்துமண வினைமுடித்து வாழ்நா ளோர்நா, ளெந்தைதிருக் கச்சியில்வா ழேகதண்ட யாதவப்ர காசர ச் சேர்ந்து. (ச)

பொருளெளிதி லறிவரிய வேதாந்த நூலினுக்குப் பூர்வ பக்கந், தெருளுறநன் காய்ந்துவர விளையாழ்வார் தெரிந்துகோ விந்த பட்ட, ரருள்புரிக வேதாந்த மடியேற்கு மெனவெதிபா லணைந்து கற்று, ரிருவருமங் கோதவெதி பொருள்வேறு யொருசுருதிக் கிசைப்பக் கேட்டே. (ரு)

ஈதுபொரு ளன்றுமென் றுரைக்கின்மறை யாதியநூற் கியை வி ரோதம், போதவுள தெனவிரா மானுசனுர் புகன்றனரந் நாட்போ

யோர்நாள், யாதவனு மெதிகப்பி யாசமெனும் வாக்கியத்திற் கியை
பி றீதார், பேதவுரை சொலவவற்குத் தயில்மிடு மிளையாழ்வார்
பெருந்துன் புற்று. (சு)

வேறு

கண்வரு துள்ளி யாசான் கவானுற்று வெதுப்ப நோக்கி
யெண்வரு துள்ளிக் கென்னே நிபமென விளைய வாழ்வார்
விண்வரு முதய பானுக் கரங்களால் விள்ளுஞ் செம்மைத்
தண்மரை மலர்போற் கண்கள் சார்ந்துளான் பரம னென்ன. (எ)

செப்பும்வாக் கியத்தி னுண்மைக் கருத்தினைத் திரித்து மாறு
விப்பொழு துரைத்தல் கேட்டே யான்வருந் தினனென் றேத
வப்பெரு முனிவ னின்னே னழிப்பனெம் மதமென் றுய்ந்தே
யொப்பறு சூழ்ச்சி யுள்ளத் துள்ளியோர் வினைமேற் செய்தான். (அ)

கங்கையில் வீழ்த்த வுள்ளங் கருதியஃ துற்றூர்க் கோதித்
தங்குமா ணவர்காள் சென்று சானவி யாடி மீள்வே
மிங்குளார் யாரும் வம்மி னெனவிளை யாழ்வா ரோடு
மங்குநின் றெழுந்து மார்க்கத் தவர்களோ டெதிசெல் காலை. (கூ)

யாதவ னெருங்கு கானிற் படர்வுழி யிளைய வாழ்வார்
தீதறு சவுச மாற்றச் சென்றனர் தனித்தவ் வற்றங்
கோதில்கோ விந்த பட்டர் குறித்தெதி கொண்ட சூழ்ச்சி
யீதென வுரைப்ப வோர்பான் மறைந்திவ ரிருந்தா ராக. (க0)

எதிமுத லானோர் காணு தேகினர் கங்கை நோக்கி
மதியினிற் றிகழி ராமா னுசர்வந்து காப்பார் கச்சிக்
கதிபதி யன்றி யாரே யெனும்பொழு தலர்மா தோடு
முதிர்கரு வேட வேட முற்றரு ளாளர் வந்தார். (கக)

அவ்விரு வரையு நோக்கி யிலக்குவ ரன்போ டாங்க
ணெவ்வயி னுள்ளீர் நீவி ரெங்குச்செல் கின்றீ ரென்ன
வெவ்வயில் கச்சி யெங்கட் கிருப்பவ ணேகு கின்றே
மவ்வயின் வருதல் வேண்டி னடைகவெம் முடனீ ரென்றார். (கஉ)

சின்னெறி கடந்து பின்னர்ச் செப்புவர் நீரின் வேட்கை
மன்னிய தெங்கட் கைய வழங்கென விளைய வாழ்வா

ரன்னவர் சொற்ற வண்ண நேடிநீ ரளிக்க வுண்டு
முன்னிது கச்சி யென்றே மொழிந்தவர் மறைந்தார் மன்னோ. (கங)

சென்றபின் னிளைய வாழ்வார் திகைப்புட னிறும்பூ தெய்தி
யொன்றிய துணையாய் வந்த வொப்பிறம் பதிக ளத்திக்
குன்றுறை திருமா லென்னக் கொண்டந்தச் சாலை கூவற்
றுன்றுநீ ரன்று தொட்டுச் சோர்வின்றி யளிப்பர் நாளும். (கச)

கங்கைமூழ் கெதிதன் மாயக் கற்பிற்கோ விந்த பட்டர்
செங்கையி லிலிங்க மொன்று சேர்த்துமா சைவ ராக்கி
யங்குநின் றெழுந்து கச்சி யடைந்திளை யாழ்வார்க் காணூஉப்
புங்கவ ரிவரென் றுய்ந்து போதித்தார் பூர்வ பக்கம். (கரு)

இன்னண நிகழு நாளி * லிலக்குவர்க் காண வெண்ணி
மன்னிய வரங்க நின்று கச்சிவந் தாள வந்தார்
பொன்னமர் மருமத் தெம்மாற் போற்றிநம் மிளையாழ் வார்க்கு
நன்னர்தங் கருணை நோக்க நல்கிச்சீ ரரங்கஞ் சென்றார். (கசு)

கச்சியி லரசு செய்யுங் காவலன் மகளை யாரு
மச்சுறப் பிசாசம் பற்றி யாட்டயா தவன்சென் றோட்ட
வெய்ச்சுறு திருக்க மன்ன னிலக்குவர்க் கோதச் சென்று
சிச்சிசெல் லென்னப் பேய்தான் சென்றது வெருவி யம்மா. (கஎ)

அரங்கநின் றுள வந்தா ரிலக்குவர்க் கணைகீங் கென்னக்
கரங்கொடு வரைந்தோ ரோலை விடுத்தன ரதனைக் காணூஉச்
சிரங்கொடு திருமாற் போற்றிச் சென்றனர் செல்லு முன்னம்
பரம்பத மாள வந்தார் பற்றினர் பார்த்தார் சென்று. (கஅ)

பார்த்தனர் வருந்திப் பல்காற் பணிந்தாள வந்தார் செங்கைச்
சேர்த்தமூ விரன்ம டக்கித் திகழ்திற மென்னே யென்று
கூர்த்தநல் லறிவி னுங்குக் குழுமிய பெரியார் தம்மை
யார்த்தியோ டிளைய வாழ்வார் வினவலு மவர்சொல் வார்மன். (கக)

பரமறி பிரம சூத்ர பாடியஞ் செயல்ப ராச
வரன்பெய ரொரு நம கற்கு வைத்தவன் கொள்கை தேற்றல்

* இலக்குவர் - இளையவாழ்வார்பெயர்

குருகைநம் மாழ்வார் நாமங் கொடுத்தொரு வற்கன் னேன்பாப்
பெருமையை விளக்கன் மூன்று முடிந்திடப் பெட்ட லென்றார். ()

அன்னவே லவைகண் மூன்று மடியெனு லரங்கத் தெம்மான்
றன்னருண் முடிக்கு மென்று சாற்றமூ விரனி மிர்ந்த
வின்னது கண்டு மேலோ ரிவையிவை முடிக்க வல்லா
ரென்னலு மரங்க நின்று மெழுந்தனர் கச்சி நோக்கி. (உக)

கச்சியம் பதியிற் புக்குக் காகுத்தன் கமலை கொண்க
னச்சுதன் றிருத்தா ளேத்தி யச்சாலைக் கூவ தீர்த்த
மிச்சையோ டருளா ளர்க்கங் கிந்துளங் களிக்கு நாளி
னச்சியெம் மாலுக் கால வட்டமாப் பணியை நாளும். (உஉ)

தீர்விலா தியற்று மொப்பி றிருக்கச்சி நம்பி பாற்சென்
றார்வமோ டளவ ளாவி யான்சொலு மிவற்றை யெல்லாம்
பேரரு ளாளர் பக்கற் பேசியப் பெம்மா னேதுந்
தீரமாம் பொருளை யெற்குச் செப்புக வெனநு யந்தார். (உங)

அருளாளர் திருமுன் னம்பி யறிந்தவ ருரைத்த வாறே
தெருள்பர தத்வம் யாமே தேகநீங் கியபின் மோக்கம்
வருபிர பத்தி யேயு பாயமா மந்தி மத்திற்
கருதலா வசிக மன்று காண்பேத மேசித் தாந்தம். (உச)

ஆசானப் பெரிய நம்பி யாமென வார்த்தை யாரும்
பேசாநின் றனராற் கேட்டுப் பெருமுதத் திளைய வாழ்வார்
பாசார்செவ் வொளிய கச்சிப் பராற்பரற் போற்றி மிக்க
தேசார்சிர்ப் பெரிய நம்பி திகழ்பதி நாடிச் சென்றார். (உரு)

சென்றிடு வகுந்தின் மேவிச் சேர்மது ராந்த கப்பே
ரொன்றிய பதிக்கட் செல்ல வொப்பிலப் பெரிய நம்பி
யன்றவ ணடையக் காணூஉ வடிபணிந் திளைய வாழ்வார்
நின்றிடு கச்சி மாயோ னியமனத் தடைந்த வாற்றை. (உசு)

திருச்செவி சாத்த வென்னச் செப்பலுங் கேட்டு நம்பி
யருத்தியோ டிளைய வாழ்வார்க் கத்தலத் திராமன் கோவில்
விரித்தெழு வகுள மூல மேவி*யை யங்க மீந்து
தரித்திடப் பொருளி னேடு துவயமா மனுவுந் தந்தார். (உஎ)

---

* ஐயங்கம் - தாபம், புண்டரம், நாமம், யாகம், மந்திரம்.

ஆயபி னாங்கு நின்று நம்பியோ டடைந்து கச்சி
மேயபின் வியாச சூத்ர மெய்ப்பொருள் கேட்டு மாறன்
றாயவாய் மொழியே நிற்கச் சொல்லிய மற்றை யோர்மூ
வாயிரம் பாவு மோர்ந்தார் நம்பியா ளிளைய வாழ்வார். (உ௯)

மனைமனக் கிசைய மாறு புரிந்தில ளவளை யாயின்
மனைபுக வகற்றி வேழ மலையரு ளாளர் முன்னர்த்
துனியொழி யிளைய வாழ்வார் துரியவாச் சிரமம் பெற்று
ரெனையன்மா ரனுக்கி யன்னார்க் கெதிபதி யெனப்பேர் வைத்தார்.

இப்பரி சுயர்ந்தா ரீந்த வெதிபதி யென்றி யாத
வப்பிர காசன் றாய்தன் மைந்தனை நோக்கி யின்னே
தப்பறு முனிவர் கோனைக் குரவனாய்ச் சார்தி யென்னச்
செப்பலுந் தகுமீ தென்னச் சேர்ந்ததா காய வாணி. (௩0)

யாதவ னிவர்தம் மார்க்க மழகிதே யைய மின்று
வேதமுங் கொண்ட தாகு மேவுதற் கசுத்த னியானிப்
பூதலஞ் சுற்றிற் சுத்தம் பூணுவல் கால நீளு
மாதலிற் கழுவாய் வேறென் னுகுமென் றாயுங் காலை. (௩க)

எதிபதி யாரைச் சூழி னியையுமக் கழுவா யென்ன
*நதிபதி துயிலு நாத னியமிப்ப நன்கென் றேற்றுக்
கதியருள் தீர்த்தன் வேறு கண்டில னெனச்சூழ் வந்து
துதிசெயா தவனுக் கங்க மைந்தையுந் துனைவி னல்கி. (௩உ)

முற்கோல நீக்கித் தம்போன் முக்கோல னாக்கி வைத்தார்
†தற்காத நினைத்து ளார்க்குந் தயைசெயன் மேலோர் மேற்றே
யக்காலை யரங்க நின்றெம் மரங்கனு ரரையர் கச்சி
புக்கார்வ மிக்கா ராகி யருளாளற் போற்றி நின்றார். (௩௩)

போற்றிய தென்னை வேண்டிப் புகல்கென வரையர் நாத
வேற்றமிக் குடைய ராபா னுசனையின் றெங்கட் கீயும்
பேற்றையே கருதி யென்னப் பேரரு ளாள ரந்தத்
‡தோற்றநீக் கெதியை யின்னே ருடன்செல்க வென்று சொற்றார்.

---

*நதிபதி - கடல். †தற்காத - தன்னைக்கொல்ல. ‡தோற்றம் - பிறப்பு.

அருளாள ரருளின் வண்ண மரையரோ டடைந்து கோயிற்
றெருளாளர் திருவ ரங்கன் றிருவடி வணங்கி நிற்ப
வொருவாத திருவ னம்மிவ் வுபயவி பூதி நின்ற
விருவாக மாகத் தந்தோ நடாத்தென நியமித் தெம்மான். (௩௫)

உடையவ ரெனவோர் நாம முவந்தருள் புரியத் தாங்கி
யடைவுட னடத்து நிற்பா ரியாதவ வெதியான் முன்னஞ்
சடைமுடிக் கடவுட் கன்பு சார்ந்தகோ விந்த பட்ட
ரடைதரத் தஞ்சித் தாந்தத் தாக்கினர் பெரிய நம்பி. (௩௬)

வேறு.

என்றதுகேட் டுளத்திறும்பூ தெய்துமெதி பதிநம்பி யிசைத்த வாறே, சென்றுதிருக் கோட்டிநம்பி தனைவணங்கி யுரைதிருமந் திரத்தி னோடு, மன்றறிந்து சரமசுலோ கத்தினருத் தத்தையுமவ் வாசான் யார்க்கு, மொன்றவெளி யிடலாகா தெனவுரைத்து முடையவரிவ் வுலகத் தோர்பால். (௩௭)

வைத்தபெருங் கருணையினு லுரைத்தருளக் கேட்டுமகிழ் மனத்த பல்லோ, ரித்தகைய ரேயடிக ளுடையவர்மா மதமெனப்பே ரிதனுக் கென்ன, வைத்தனர்க ளினியாழ்வா ராளவந்தார் திருவடிவை வணங்கி வேத, மொத்ததிரு வாய்மொழியை யோதியுயர் திருமாலை யாண்டான் பாலில். (௩௮)

சென்றுதிரு வாய்மொழிக்குச் சிறந்தபொரு ளீதென்னத் தேர்ந்தா ராகி, வென்றிகொளுங் காருத்தன் காதைதிரு மலைநம்பி விளம்பக் கேட்டே, நன்றெனத்தன் மதம்புகுத வுலகமெலாம் வென்றெக்ய மூர்த்தி நாமம், துன்றேக தண்டியையும் விறல்கொடுமுக் கோலவர்க்குத் துலங்க வீந்தார். (௩௯)

இப்பெரியா ரியற்றியநூ லிருநான்கோ டொன்றென்ப வெண்ணி னுமை, மொப்பரிய வேதாந்த சங்கிரக முயரும்வே தாந்த சாரஞ், செப்பமிகும் வேதாந்த தீபஞ்சீ பாடியமே திகழுங் கீதைக், கொப்புறுபா டியங்கத்தி யத்திரய நித்தியமென் றுரைப்பார் தாமே. (௪0)

வேறு.

எட்டிசை சென்றவண் வந்த வாதிக
ரிடனழிந் தேகிய செய்து *பாரதி

* பாரதியுடனுறைபீடம் - சரசுவதிபீடம். இது காச்மீரத்துள்ளது.

யுடனுறை பீடம்புக் குற்ற காலிவர்
மடனிகு மதிக்கயன் மனையு வந்தரோ. (சக)

வேறு.

இளையாழ்வார் சூத்திரத்திற் கியற்றியருள் பாடியம்பார்த்
துளமகிழ்நா மகளிதுசீ பாடியமென் றுரைத்தவர்க்குக்
கிளர்தருபா டியகார ரெனநாமங் கிளக்கக்கொண்
டளவில்புகழ் திசையோங்க வமர்நாளிற் சிலர்மாற்றார். (சஉ)

வேறு.

வஞ்சகத் தெதிபதி யுயிரை வவ்விய
வெஞ்சலின் மாரண மியற்ற வாங்கவை
வஞ்சகர் தம்மையே மாறிச் சூழ்தரத்
தஞ்சநீ ரெனவவ ரிவரைத் தாழ்ந்தனர். (சங)

அஞ்சன்மி னென்றுரைத் தவர்கட் கங்ஙனே
யஞ்செனு மங்கமு மருளி மாயவன்
கஞ்சநாண் மலர்புரை கழற்க ணன்பையே
யெஞ்சலி லாதுற வியற்று வித்தரோ. (சச)

வேறு.

மன்னுதிரு மலைநம்பி மைந்தர்க்குத் திருக்குருகைப் பிரான்பிள் ளானைப், பன்னுமபி தானமுமப் பட்டர்சேய்க் குப்பரா சரனே நாம, மென்னவுந்தந் தேபிரம சூத்திரத்திற் கின்னுரையு மியற்றியீந்து, முன்னமெம தாளவந்தார் திருவுளத்துக் குறைமூன்று முற்றுவித்தார். (சரு)

செகமளிக்குங் கிள்ளிபரன் சிவனேயென் றெப்புமெனச் செகத்துள் ளாரை, மிகவருத்துஞ் செயல்பூண்டா னெனவோர்ந்திவ் விளையாழ்வார் மேலை நாட்டிற், புகவமண ரீராறு யிரவரவண் வாதெதிர்ந்து புரிந்து ளாரைத், தகவொழிய வென்றடிமை யாக்கினு ரனந்தனுருத் தாங்கி மிக்கோர். (சசு)

செல்வமலி *திலீபநக ருறைசெல்வப் பிள்ளையெனத் திகழு நாமத்
தொல்லையனைத் திருமாலை யதுகிரிக்க ணெழுவித்துச் சொன்னவாறே

* திலீபநகர் - டில்லிநகர் என இப்போது வழங்குவது.

யல்கலிலா வாகமத்தின் படிதிருவா ராதனங்கண் டருளப் பண்ணி மல்குமடி யார்சூழ விளையாழ்வா ராவயினே வைகு நாளில். (சஎ)

அடல்கெழுமி வளர்புயத்த வபயன்றன் னேவலரை யடைவிற் போக்கிச், சுடரொளிசெ யுலகின்மிசை யெம்மதத்தி னோர்பாலுந் தொடர்ந்து நீவிர், கெடலருமச் சிவத்திற்கு மேற்பொருள்வே றில்லெனக் கிளத்தி யன்னோ, ருடன்படுத றெரிவிப்பான் கைச்சாத்துங் கொண்மினென வுழையர் சென்றார். (சஅ)

சென்றுழையர் பலசித்தாந் திகள்பாலுங் கையொப்பஞ் சிவத்தின் மேலே, யொன்றுபொரு ளிலையென்ன விதில்வைம்மி னென வெருவி யொப்பம் வைப்ப, வன்றரச னுரைக்க ணகக்கலக்க மடையாமற் கூரத் தாழ்வார், நன்றுசிவ மதன்மேலாய்த் துரோணமுள தெனவெழுதி நல்கி னாரால். (சகூ)

இவ்வாறிங் கிவரெழுதி யீந்தமைது துவர்சோழற் கெய்தியோத, வொவ்வாதிவ் வாறெழுது கூரத்தாழ் வார்ச்சினவி யோங்கு சென்னி, செவ்வாறு செலதீர்ந்து கண்ணிரண்டு நீக்கினனத் தீமை தன்னாற், றவ்வாதக் கணங்கிருமி கண்டனாய்த் தபித்தெமனூர் சார்ந்தான் மன்னோ. (ருo)

மேலைநாட் டெழுந்தருளு மெதிபதிகூ ரத்தாழ்வார் மேவு கண்க [ள ளோலைநாட் டினிலழிந்த திறனறிந்து விரைந்தவர்பா லுற்றிவ் வின் லேலநாட் டுதறுமோ வுமக்கென்னப் பரிந்தோதி யெழுந்து பன்ன சாலைமாட் டுற்றனரா லடியர்குழாந் தொழமுக்கோ ருங்கு மேலோர்.

தம்மாலே யொழித்தவர்க டிருமாலே பரனடிமை தாங்க ளென்னு, மம்மாலின் மதம்விசிட்டாத் துவிதமுல கிடைப்பரம்பி யழிவின் றோங்கச், சிம்மாச னாதிபத்ய மெழுபானுன் கடியவர்க்குச் சிறப்ப வீங்கே, யெம்மாலோ துதற்கரிய பாடியமா தியவவரா லியங்குவித்தார். (ருஉ)

வேறு.

சொன்னெறி யொழுகுந் தமதுசித் தாந்த துரந்தர ராகியே சீர்த்தி, தன்னையெவ் வுலகுஞ் செலுத்திவந் தெதிர்க்கும் வாதியா ராந்தழ றணிப்பான், மன்னிய கொண்மூ வெனுமடி யவரான் மாலிரு

பூகியுங் காத்துப், பன்னிரண்டு நாளும் புகழ்நிறீஇப் பரம பதத்தினை யெதிபதி சார்ந்தார். (ருங)

சித்திர பானுக் கெதிரொளி செய்யுந் தேசுடை முனிவரர் கோமா, னுத்தமசீ ரரங்க விலக்குவ நாமத் துயர்தவத் தோங்கன்மெய் யுணர்வா, னித்திற மாழ்வா ரெம்பெரு மானு ரிசைகெழு சரிதமென் றோத, வித்தக முடைய தாசர்கேட் டுள்ள மிகமகிழ்ந் திருந்தனர் மன்னோ. (ருச)

எம்பெருமானார் வைபவச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - அ௨எ.

## கங-சரணாகதிச் சருக்கம்.

நிறைதவத்து முனிவரனை நிலந்தோய்த் தாழ்கரங்க ணெடுத்து கூப்பி, முறையினவன் கருணையினாற் றாசர்குரு கூர்முனிவர் முதிரு ஞானத், திறைவர்திரு வாய்மொழியோ ராயிரமு மோதிமனத் திருத்திப் பின்ன, ரறைதருமான் றிரண்டுநான் காவதா மாயிரமு மதிக ரித்தார். (க)

வேறு.

அப்பாக்கட் கிதும்பொருளென் றறைபகவத் விடையமதைத்
தப்பாம லறியவெணித் தாசர்குர வற்பணியா
வொப்பாரு மிலாப்பரம வுரைத்தருள்க வெனவேண்ட
வெப்பாலு மிவர்சில மெய்ந்தனமென் றறிகுரவன். (௨)

அறைதரலாம் வேதாந்தத் தருத்தமிவர்க் கெனவெகினத்
துறைதருநஞ் சடகோப னுரைத்தருள்பா சுரமாதி
நிறைதருநான் காயிரமா நிகழ்த்துதமிழ் மறைப்பொருளு
முறையின்மொழி தரத்தாசர் முந்தாரவத் தொடுகொண்டார். (ங)

தேசிகன்சீர்க் கருணையினாற் றிரமிடவே தப்பொருளை
மாசகல வோதியவா மனப்படுத்தி மயர்வொழிந்த
பேசரிய புகழ்த்தாசர் பிரகிருதி பரிணும
வாசரியா வுடற்றொடக்கை யறுத்திடுவான் சிந்தித்தார். (ச)

முன்னமியான் பசுப்பறவை முதலாய யோனிகளிற்
றுன்னுமகி யிற்பிறந்தை தோய்ந்ததற்கோ ரளவின்று
லென்னேயோ பலசெனனத் தியற்றுமறப் பேருக
மன்னினெனுற் கிடைக்கரிய மானுடத்தை யிஞ்ஞான்று. (ரு)

அறிவுடையோர் மானுடமே யவாவினதெல் லாமெளிதிற்
பெறவுரிய தவ்வம்பி பிறவியெனுங் கடல்கடத்துந்
திறமுடைய தெனவுமுரை செய்வர்திரு மாற்கடிமை
யுறவுடையே னாகிலனே லுணர்வுடையே னாகிலனல். (சா)

பொருளிதுவே யெனவறிந்தும் பொருந்துசரீ ரத்தொருவன்
றெருளினனாய்ப் பவவுததி தாண்டுதிரந் தேருமே
யருமந்த பிறப்பவமே யழிப்பதே யெனத்தாசர்
கருமந்த னக்கரணு மாரியன்சீர்க் கழல்பணியா. (எ)

மாமுனிவர் தம்பெரும வந்தடிமை யானேனுக்
காமுறையே *பரந்யாச மதுசெய்து காக்கவென
வேமமுறப் பணிந்திரப்ப வெழிற்கோவ லாயனும்
பூமகள்கேள் வன்கருணைப் படிநடக்கு மெனப்புகன்றான். (அ)

அந்தணரின் மேம்பட்ட வடிகளுரை யிவ்வாறு
தந்தனராற் பரமபத சாதனமென் பாலென்றே
வந்தணவ தெனத்தாசர் மனங்கவன்றே யுறைநாளிற்
பந்தமொழித் தருள்குரவன் பணிதாங்கிக் கடன்மலலே. (கூ)

தலசயனத் துறைபரமன் றனைவணங்கச் செலுமிடையி
லுலைவிறவ முடையோனு யுயர்கலைகட் குறைகளனாய்
நிலவுதிசை யீரைந்து நிறைந்தோங்கு புகழினனா
யலகில்கவி வாணரெலா மடிபணியும் பெருமையனாய். (க0)

சேணுலவு மொளியானைச் சமதமங்க டிறம்பானைக்
கோணிலுரைப் படிசௌசங் கொள்வானைக் குணக்கடலை
யேணிலவு தருந்தவளப் பரிமுகனுக் கிளையானை
மாணிலவு மகிவருவார் சரண்புகுது மலர்ப்பதனை. (கக)

---

* பரந்யாசம் - ஆன்மாத்தன்பாரங்களை ஆசிரியன்வாயிலாக ஈச்வரன் பால் வைத்தல்.

வேதமா மொருநான்கு மகநூலும் விளக்குவதாய்
காதயா முநர்முதலா நல்லோர்கள் வருகுலனின்
மாதயா வுடனுவற் பாக்கநகர் வந்தருளி
யோதரிய வண்ணையா ரியனெனப்பே ருகந்தானே. (கஉ)

எழுதாத மறையொலிக்கு நாவானை யெதிர்காணூஉத்
தொழுதார்வ முறநிலத்திற் றேய்ந்தெழுந்து பரவசராய்
முழுதாய மகிழ்வினொடு முன்னிற்குந் தாசர்தமைப்
பொழுதாரு மலர்க்கண்ணா னோக்கியவன் புகல்வானால். (கங)

ஏற்றமிகு நுங்குரவ ரெழின்மேனி பாங்குடைத்தே
சாற்றுவரே யடியவர்க ளடக்கரிய நூலென்னத்
தேற்றமுற வினவியவை சிறந்துளவா லியாணின்னு
மாற்றலையே தருஞ்சரணா கதியடைய லேனென்றார். (கச)

அவ்வுரைகேட் டனரண்ண வாரியனு மறையோனு
மெவ்வமிலீ ரடிகளடி யிணைச்சார்பு நீங்ககிலீர்
செவ்வியநற் சீலமுளீர்க் கருளாத திறமென்னே
கவ்வையக றச்செய்வல் கவல்கிலீ ரெனவுரைத்து. (கரு)

மாடணையுங் கல்யாண மாபுரத்து வேதியர்தந்
தாடொழுவார் தமைநோக்கித் தாசருக்கும் பிரபதனங்*
கூடவுறப் புரிவிப்பான் யான்கூறுங் கூற்றாக
வீடொருவ ரிலாவரங்க விலக்குவர்க்குச் சென்றுரைப்பீர். (கசு)

என்றனுப்ப விடைகொளீஇ யெழுந்தருளு மவர்கோவல்
நின்றுவரு மெதியிவர்க ணெறிக்கொள்ளப் பின்கொண்டு
துன்றுகடற் றலசயனத் திருமாலைத் தொழுதேத்திச்
சென்றணைதந் தனர்தாசர் திருக்கோவற் பெரும்பதிக்கே. (கஎ)

ஆயிடையவ் வரங்கரா மானுசப்பே ராரியன்பாற்
போயடிக டொழும்பொழுது கலியாண புரமறையோ
னாயகலை யுணரண்ண வாரியன்சொல் லிதுவென்ன
மாயையொழித் தருளுமுனி வரர்க்குரைத்து நின்றனரால். (கஅ)

---

* பிரபதனம் - பரந்யாசத்துக்கொரு பெயர்.

முக்கோல்கைக் கொள்வரவர் மொழிகேட்டுத் தாசர்மிகத்
தக்கோராம் பாகவதர் தமதருளும் பெற்றனரான்
மிக்கார்வ வுளக்கிடக்கை முற்றுமினி விரைந்தென்னப்
புக்காரநோக்கவர்பாற் புரிந்தனர்முன் னினுமதிகம். (கக)

மற்றொருநாட் டெதிவரனிடைச்சென் றாயனு
ரிற்றைவரை யாய்தந்த திசையுமினித் தாசர்தமக்
குற்றவடைக் கலமாகச் செய்தியென வுரைத்தேகக்
கொற்றமுனி யாயனுரை குறித்துவியந் தனர்முன்னே. (உ0)

எம்பெருமான் பாகவத ராரியரென் றின்னோர்க
டம்பெருநோக் கிற்கிலக்கித் தாசரென நினைத்துளத்தே
யைம்புலனு மடக்குமுனி தாசரையங் கழைத்தின்னே
யும்பர்பிரான் றிருநோக்க முறுமுமக்கென் றுரைத்தனரால். (உக)

வேறு.

சொலற்கரிய பெரியோர்க டுணையடியே துணையாகத் தொழுது
யாய, விலக்ககல விலக்கியொளிர் தாசரைக்காத் திடுபரத்தை மேவுங்
கோவற், றலக்கணம ராயனார் திருவடித்தா மரைமலரிற் சமர்ப்பித்
தாரா, லலக்கணொழி யெதிவரரன் னார்கருணைத் திறத்துமகிழ் வடை
ந்தார் தாசர். (உஉ)

திணந்தினமு நந்தனத்தைச் சீர்திருத்தி மலர்கொய்து திகழுந் தாம
வினம்பலவும் வனைந்துதிரு மாற்களித்துக் களிக்கவிவர் தேவி யாய
கனங்குழையாள் பெரியர்பலர் தாசர்திற மிற்றென்னக் கழறக் கேட்டு
மனம்படுத்தா ளவ்வழிக்கே செல்வனென நல்லூழ்முன் வந்ததானே.

பற்றற்ற மேலோர்கள் பகருமுறை யாற்றெளிவு பற்றிப் பொன்பூ
சுற்றமனை பசுநசிக்குஞ் சுபாவத்த வெனவிடுத்துத் தொலையா ஞானங்
கற்றகண வர்ப்பிரியா துறல்கரும மெனவுளத்திற் கண்ணி யன்ப
ருற்றதிருக் கோவலூரெனும்பதியை யடைந்தனளா லொப்பி றேவி.

வேறு.

திக்கெலாஞ் செலும்புகழ்த் தாசர் தேவிதம்
பக்கல்வந் துற்றமோர் பரிவு செய்திலர்
தக்கவை ராக்கியத் தனத்த ரஃதிலா
மிக்கவை மனத்திடை மதிப்ப தில்லையால். (உரு)

நாயகன் மனக்கொளாப் பவத்த ஞானவை
போயொழி தரற்கிவை புரிவ னென்றெணி
மேயசீ ராரிய விமலன் றுடபதந்
தோயிரு பொழுதினுந் தொழுது சூழ்ந்தனள். (உசா)

மற்றுமந் நங்கைமான் மலர்ப்ப தத்திடை
யற்றமி லன்பின ளாயன் *சேதிம
முற்றிய துகள்கழீஇ முறையொ டொப்பனை
பற்றிய பணிபல பரிந்தி யற்றுவாள். (உஎ)

இன்னணம் புரிதல்கண் டிசைகொ ளாரியன்
றன்னடிச் சார்புறு தாசர் தம்மையிந்
நன்னெறிப் படர்தரு நங்கை யாரெவை
யுன்னியிச் செயலவை யோரி லோதென. (உஅ)

தாசரு முரைப்பரித் தைய வென்னுடை
மாசறு மனையெனைப் பிரிந்து வைகுவா
டேசிக ரடிமலர் சிரத்திற் றுங்குமவ்
வாசையோ டென்னைவிட் டகல்கி லாமையை. (உகூ)

எண்ணியென் றுரைத்தன ரெதிகள் கோனுமப்
பெண்ணினை யின்படி புரிவை பேசுனாற்
கண்ணிய தேயென வருளத் தன்வயி
னண்ணுத லொன்றையே மனைக்கு நல்கினார். (௩0)

பலபகல் கழிந்தபின் றாசர் பண்ணியுண்
ணலனுடைத் தான்முன நண்பி னாரியர்
சொலுமுடைத் தெனவவர்த் தொழுது தன்மனைக்
குலைவில்சக் கரப்பொறி யுதவ வேண்டினார். (௩க)

போதமா ராரியப் புனித னம்மொழிக்
காதரம் புரிந்துதன் னடியர் தங்களி
லேதமில் குலநலத் திராக வாரிய
வேதபா ரகன்றனை விளித்துக் கூறுவான். (௩உ)

---

* சேதிமம் - கோயில்.

வேறு.

தமத்திரம் பெறுஞான தாசர்மனைக் கையபஞ்ச
சமற்காரம் புரிகவெனச் சாற்றுரையேற் றுசாற்கு
நமற்காரம் புரிந்தேக நன்னாளி லன்னாட்குச்
சுமைத்தாமப் பவவனத்தைச் சுட்டொழிக்கு*மிலாஞ்சனையும்.

மேலேறும் புண்டரமு மந்திரமும் விதியின்வழித்
தாலேற வருளியின்னாட் டாய்தந்தை யிவராதி
மாலேறு முறவினொடு மற்றுள்ள பொருள்விடுத்தப்
பாலேறு கொழுநனையே பற்றினள்வை தேகியென. (௩௪)

எண்ணியவட் கபிதான மிசைத்தனர்சா னகியென்னப்
பெண்ணிலெழிற் றிருவனையாள் பின்னரெதி பதியடிக
ணண்ணிவணங் கினண்முனிவர் நற்கருணை யானோக்கி
வண்ணமட வார்கணவர் வழிநிற்ற லுயர்வென்றார். (௩௫)

ஆசிரியன் றனைக்கிடமா யமையுமனை யாடனக்குப்
பேசுமவ னியமனத்தாற் பெறற்குரிய பணியனைத்து
நேசமுடன் புரிந்துநிற்ப நேர்ந்தனரீ துரித்தென்ன
வோனசபெறு கடலாடை யுலகிலுய ரொருதாசர். (௩௬)

இன்னணநாட் சிலசெல்ல வெதிபதியத் திருக்கோவ
றன்னையொரீஇத் திருவரங்க மெனுமகரந் தனைச்சார
வன்னவனே பரதெய்வ மாமெனக்கொ டம்பதிகள்
பின்னரவன் சாயையெனப் பெயராது பெயர்ந்தனரால். (௩௭)

அல்கலில்சீர்த் திருவரங்க மெனுமகரத் தாரியனார்
மல்குமெழிற் றுபதத்தை மனைவியா ரொடுதாசர்
செல்கதிப்பே றிதுவென்னத் தினந்தொழுதல் வலம்வருத
னல்லவல கிடலாதிப் பணிபுரிந்து நாட்கழித்தார். (௩௮)

தள்ளரிய பெரும்பிறவிச் சலதிதணந் திடுதாச
ரெள்ளில்சர ணாகதிதன் னில்லினட்குச் செய்விக்க
வுள்ளநினைந் துயர்குரவ னொப்பிலினைத் தாடாழ்ந்து
வள்ளலிது கேட்டருள்க வெனவழுத்தி யுரைத்தனர்மன். (௩௯)

* இலாஞ்சனை — சங்கசக்கரப்பொறி.

வேறு.

பெண்ணிவ ளரிய ஞானப் பெரியவர் திருக்க ணோக்க
நண்ணுதல் வேண்டுந் தன்னை யுய்விக்கச் செய்ய நாளா
லெண்ணின வடிகள் பாத விணைகளே புணைமற் றில்லை
கண்ணுறும் பிறவிப் பௌவங் கடத்தற்கென் றுள்ளு நீரார். (௪0)

எனச்சொலத் தாச ராசா னின்செவிக் கேற்று நந்த
மனத்தெணை முற்றுஞ் செந்தா மரையுளாள் கொழுந னன்பர்
நினைத்தவை யளிப்ப னன்மை நேர்ந்தவர் நேரார் தீமை [தோ.
வினைத்தொகை யொழித்தோ மென்ன விளம்பினன் விருப்பின் மா

இவ்வுரை கூறி யொன்று மேதமில் சனகி யான்மாச்
செவ்விய பரத்தை மல்லற் றிருவரங் கத்து மேய
மைவணத் தரங்க நாதன் மலர்க்கழல் சமர்ப்பித் தானு
லவ்விய மவித்த சிந்தை முனிவர னருண்மிக் கம்மா. (௪௨)

அடிமையிற் சிறந்த நங்கை யாரிய னளின பாத
முடியுற வணங்கிச் செங்கை முகிழ்த்தன ணின்றா ளிங்ங
னடிகணற் பாத தீர்த்த மளித்ததின் றெனக்கே பெற்றேன்
படியுளார்க் கரிய தூய பரசமர்ப் பணமென் றுய்ந்தாள். (௪௩)

எதியெனு மதியி னோக்கத் திவர்சுதை யலையின் மாது
குதுகலித் தமிழ்ந்தா ளென்னுங் கொள்கையைத் தாசர் காணூஉ
முதிர்சரை மரண மற்று முற்றுமிப் பிறப்பு நீத்தாள்
விதியுமம் மேலோ னுள்ளு மொத்ததே யெனவி யந்தார். (௪௪)

தங்களை நன்கு காக்கத் தக்கதெய் வதமவ் வாசான்
பங்கயப் பதமே யென்னப் பணிபுரி தாசர் தம்மைப்
புங்கவ ரெவரு மம்ம துரகவி பொருவ ரல்லா
லிங்கிவர்க் கிணையா ஞாலத் தெவரையா முரைத்து மென்பார். ()

வீட்டிய வுணர்ந்து பாச வினைதெறு முக்கோற் கோமான்
கோட்டமின் மனத்துத் தாசர் தன்னிடைக் கொண்ட வன்பு
நாட்டுதம் வயத்த ரல்ல ரென்னவுண் ணாடும் பண்புங்
காட்டிய வடியா ரோடு கண்ணற்கும் பணிசெய் கென்றார். (௪௬)

என்றவ னுரைத்த மாற்ற மின்புறச் செவிக்க ணேற்றுத்
தன்றலை மீது தாங்கிச் சாற்றுமா புரிவே னென்னு
மன்றலந் துளபத் தாமன் வாழ்பாடற் றலங்கள் சென்றே
யொன்றல பணிக ளென்னு னுவப்புறப் புரிந்தார் தாசர். (௪௭)

சரணாகதிச் சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - ௱௭௪.

## ௧௪- கைங்கரியச் சருக்கம்.

நித்த நியமத் துறையொழுகுந் தாச ராசா னியமனம்போ
லொத்த பொழுதே மனத்தினிடைத் தாப மூன்று மொருங்கோட்
வித்த முடைய குரவரின மிகவு மகிழ்வான் புரியறங்க [டும்
டத்து மலைசூ ழுலகரியச் சாற்றும் வண்ணந் துணிந்தனனால். (௧)

எந்தப் பதியி லுறைபெருமா னெளியேற் கரசான் றனைக்கொண்டு
சிந்தைத் திமிர மறுக்கவொளிர் தீப மேற்றி வைத்தனனே
வந்தப் பெருமான் றிருக்கோவ லாயன் றளியி லதுபுரிதன்
முந்தப் பிறங்கும் பணியென்ன முதமுற் *றதனை யவண்புரிந்தார்.

மற்று மந்தப் பதியினிடை மாய னுவக்கும் பணியிலுயர்
வுற்ற தாகுந் திருமாலைத் தொண்டன் றுள்ளத் திடையுணர்ந்து
முற்றும் வெறிய துழாய்குடச முல்லை யலரி வகுளமொடு
துற்ற மலர்கள் சொரிநந்த வனமொன் றமைத்தார் துரிசற்றார். (௩)

வருக்கை கமுகு தெங்கரம்பை மல்கு மகிந்தைத் திருப்பதியிற்
றிருக்கை யறுக்கும் வேதாந்த குரவன் றேவ நாதர்க்கும்
பருப்பின் பொங்க றிருமாலை வடையே கடலை பலவாலும்
விருப்பி னாரா தனநாளும் புரிய வியற்று வித்தனரால். (௪)

நிரம்பு வளத்த வப்பதியி னிகரில் பெரியோ ரினம்வணங்கும்
பரம்பு ஞான நிகமாந்த குரவன் பவனத் தொளிர்தீபங்
குரம்பை விரும்பாத் தவத்தாசர் குழையு மன்போ டேற்றுவித்தார்
வரம்பில் போதத் தேசிகர்க்குத் தொழும்பர் புரிதல் வழக்கன்றே.

* திருநந்தாவிளக்குத்திருப்பணி.

ஆசான் முன்னந் தனக்கிவ்வா ருகும் பணிகள் செயவுரைத்த
தேசார் பதியாந் திருவரங்க வகரத் துறையுந் திருமாலிவ்
விசா ரலெய வுலகளிக்க *மேவு முடுவின் முறையாக
மூசா ரன்பி னவனுவப்ப †முற்கோ தனக்கட் டளைவைத்தார். (சு)

தானே யொக்கும் பெரியநம்பி தன்பா லட்டார்க் கர்முதலா
வானு மனுவை யுடையவர்சென் றடைந்த மதுராந் தகப்பதியின்
‡மானு மந்த விளையாழ்வார் வருமா திரைநன் னுள்விழவை
மேனாட் டவரு முளம்வியப்ப விருப்பிற் புரிந்து களிப்புற்றார். (எ)

மண்ணிற் சீர்த்த திருமலைநல் லானென் சக்ர வர்த்திகுலத்
தெண்ணும் பெரியோர் பல்லோருற் பவித்த விலக்கு மீபுரத்தில்
வண்ணக் கமலத் துறைபிரமன் மானு மரங்க விலக்குவப்பே
ர்ண்ணற் பெரிய முனிவரர்நந் தாசர் குரவ ரவதரித்தார். (அ)

அன்ன பதியின் மறையாதி யனைத்து முணர்ந்து தன்பெருமை
யின்ன பரிசென் றிசைக்கரிய வெம்மா னும்வே தாந்தகுரு
வுன்னுங் கருணை முதிர்ச்சியினு லொப்பி லருச்சை யுருக்கொண்டு
மன்னு மடியார் தமைப்புரக்க வதிவ ரெந்த ஞான்றினுமே. (கூ)

ஆமச் சர்வ தந்திரசு தந்த்ர நாம வாசரன்முன்
வாமப் புவியி லவதரித்த கன்னி மதியில் வருமோண
நாமத் தாரா கணவிழவை நன்கு புரிந்து நாட்பத்தி
னேமச் சாத்து முறைமுடித்து நீட நடக்கச் செய்தனரால். (கo)

சீத வனசத் தவள்பதியே பவச்சிந் துழன்று திரிவாரை
யோது நூல்கள் பரதெய்வ மொப்பில் வித்தை பரமதன
மேத நீங்கும் பரமகதி யென்ன வுரைக்குங் குருவடிவைக்
கோதில் கருணை யாற்கொண்டு குறைவின் றென்றும் புரக்கின்றான்

ஆய பெருமை கொளுமடிகட் குயிரும் பொருளு மர்ப்பணஞ்செய்
தேய வன்னுன் றிருவடிக்கட் கியையும் பணிகள் புரிதலையே
வீவில் பரமோ பாயமென்று மெய்ம்மை தீர்த்த நூலலது
மேய பிறரான் முத்திநிலை மேவற் கரிய தாமென்றும். (கஉ)

* மேவுமுடுவில் - பிறந்தநாளில். † முற்கோதனம் - பருப்பன்னம்.
‡ மான் - மஹான்.

சேடன் குரவன் மணமணவி செல்வர் பண்டம் புத்தகமற்
போடு தீர்த்த னுவப்பவைகள் பொருந்து மன்னன் றிருநாம
நீடு சிலங் குணமிவற்றை நினைந்து மாண்பு செய்கென்றுங்
கூடு மறிவின் மேதக்கோ ரெந்த ஞான்றுங் கூறுவரால். (கங)

ஆதல் பற்றி யெளியேனு நேயத் தாசா னவதரித்த
சீத வனசைப் பெயர்ப்பதியிற் செய்வல் பணியென் றுளநினைந்து
போத மிகுத்த வவ்வயினிற் பொருந்து மான்றோர் மனங்களிக்கக்
காதன் முதிர்வா லப்புரியி னேரிக் காங்கோர் கரையமைத்தார். (கச)

காரி மாறன் றனையன்றிக் கடவு ளறியேன் மற்றென்ற
நேரின் மதுர கவியென்ன நிரம்ப வாசா னிடத்தன்பு
சாருந் தாச ரமரர்கணந் தணவா திறைஞ்சு மரங்கமதில்
யாரும் புகழ்வா னடிகளுறைந் தருள வமைத்தா ராச்சிரமம். (கரு)

உப்பி லமுது பக்கணங்க ளுவக்கும் *பெருமான் றிருமார்ப
னொப்பி றிருவின் னகரிலகோ ராத்ர தீர்த்த வுயர்வாவி
செப்ப மடைய வெஞ்சிலையாற் றிகழும் படிக ளமைப்பித்தா
† ரிப்பர் குலத்தை விளக்கவெழு மிரவி நிகரும் புகழ்த்தாசர். (கசு)

கமலத் துறையும் விமலைதிருக் கரத்தாற் றழுவுங் கண்ணபுரத்
தமலப் பெருமா னெழிற்சவுரி ராசன் புயத்துக் காடகத்தால்
விமலக் கமல மலர்த்தொடையல் விழைவின் மிகையாற் செய்தளித்து
முமல மகற்றி யொளிர்தாசர் மொய்பூங் காவொன் றவணமைத்தார்.

போதி லிருக்கு மரிப்பிரியை புல்ல வொளிரும் பரம்பொருளா
யாதி மறைக டேடியின்னு மறியாச் சவுரி ராசனுக்குக்
கீத மளிசெய் மலர்த்தாமங் கிளரப் புனைந்தங் கணிபணியைப்
போத வந்தப் பதியினிடை வருட மிரண்டு புரிந்திருந்தார். (கஅ)

சகமா மடந்தை வதனமெனத் தயங்குங் குடந்தைத் திருப்பதியிற்
புகலொன் றில்லா வடியவர்க்குப் புகலாஞ் சார்ங்க பாணியனைத்
தொகுமா வன்பு பணிந்துதீ வர்த்தி பிடிக்குந் தொழிலியற்றித்
தகவா ரகவை யிரண்டந்தத் தலத்திற் றாசர் வதிந்தனரால். (கசு)

* உப்பிலியப்பன். †ஐப்பர்-வணிகர்.

பொங்கிப் பரந்த நறும்புனல்சூழ் பொன்னி யொழுகுந் திருக்குடந்
யெங்கள் பெருமா னடியவர்க டாச ரியற்றும் பணிநோக்கிப் [தை
யங்க மிகந்த சாரங்க பாணி பாக வதரென்னுந்
துங்க மேய வபிதானந் துலங்க வவர்க்குச் சூட்டினரால். (உ0)

விதியா லுயிர்க ளனைத்தினையும் விதிக்கும் விதிமுன் மகம்புரிந்த
பதியாங் கச்சி தனைப்பணிந்து பைம்பொற் கமலை பிரியாத
நதிபார் பதத்து விளக்கொளியெம் பெருமான் றண்கா நணியேத்தி
முதியார் வணங்கு மந் * நியமம் புதுக்க மனத்து முன்னினரால். ()

முன்னித் தாசர் விளக்கொளியெம் பெருமான் றளிமுன் மண்டபத்
யுன்னு முயர்வு தாழ்வுகழிந் தொத்த தளமா யுறவமைத்து [தை
மின்னுந் தீப வொளியன்னை மேவுங் கோட்ட மிகக்கிலமாய்
மன்ன னோக்கி முற்றுமதைப் பிரித்துப் புதுக்க மனத்தெண்ணி. ()

கருவின் முதலா மண்டபங்கள் கட்டிக் ககன விமானமிதைப்
பொருவ லாகா தெனப்புகலப் பொற்பார் விமானம் புதிதமைத்துத்
தெருளு மன்பாற் புதுவையர்கோன் செல்வி கோதை திருத்தளியைப்
பெருவில் வீசும் விமானமொடு பிறங்கு மாறு கட்டுவித்தார். (உ௩)

மறைகள் பரம சோதியென வழுத்துந் தீப வொளிநாமத்
திறைவன் பூவை மின்னுண்ட வெழிலி யெழிலற் கிசைநேய
நிறையத் தீப மொன்றமைத்தார் தாசர் நிமல னஃதுவந்து [னால்.
முறைசெ யடியார்க் கெளியனென்னு முதியோர் மொழியை விளக்கின

குலவு மிகைய போக்கியமாய்க் குற்ற நீக்கி யுயர்வேய்ந்த
பலவாம் வகைய போனகத்தைப் பரிந்து தாச ரளிப்பிக்க
நிலவு கால மொருமூன்றுந் தண்கா னெடுமால் கொண்டுவப்பா
னூல்வி னிறைவா ரவன்கொள்ள னுவர்முன் செய்பாக் கியப்பேறே.

தொல்லை யுலக முயக்கச்சித் தூப்புற் குலத்தி லவதரித்துச்
சொல்லுஞ் சர்வ தந்திரசு தந்த்ர னொடுவே தாந்தகுரு
புல்லு நாம மினும்பலவாய்ப் புனையுங் குரவர் சிகாமணியை
யெல்லை யிலதா மவர்சரித நினைந்து தாச ரிறைஞ்சுற்றார். (உ௬)

* நியமம்-கோவில்.

வையந் துதிக்கு நன்னடையு மான்ற குலனு மறையவர்க
ளுய்ய வணங்கு மடித்துணையு முயர்ந்த கலைக ளறிமதியுஞ்
செய்ய கவிகட் கொளிர்மணியாய்த் திகழ்வு முடையா ருளரொருவர்
பொய்யில் புண்ட ரீகாக்க தீக்க தப்பேர் புனைந்தவரே. (உஎ)

அந்த மறையோர் தவத்தோன்ற லாகிக் குணங்கட் காகரமாய்க்
கந்தங் குலவுங் குழற்றூதா ரம்மை கணவ ராய்த்தமது
விந்தை விளையாட் டமர்தலமாச் சிட வர்க்க மேவினரா
யிந்த மகிபா லவதரித்தா ரனந்த சூரி யெனும்பெரியார். (உஅ)

மணிகள் வரன்றி யொழுகருவி வடவேங் கடமா னுடையவரி
னணிகொண் மதத்தைத் தழைவிக்க வனந்த சூரி யார்வயினோர்
தணிவின் ஞானத் தெழின்மகவைத் தருவா னன்னூர்க் கிரவதனி
னணுகிக் கனவி லமுதநிகர் வார்த்தை யொன்று நவிலுற்றான்.(உகூ)

கன்னி மதியில் வடமலையிற் கமலத் தயனு வியாமுவப்ப
நன்னர்ப் புரியும் பெருவிழவை நறுமென் கூந்தன் மனைவியுடன்
றுன்னக் கண்டு தொழவருவாய் தோன்று நன்மை யுனக்காங்க [ன்.
ணென்னவுரைத்து மறைந்தனனவ் விமையோர்க் கரிய வெம்பெருமா

அனந்த சூரி யனந்தனுணர்ந் தம்மா னுரைத்த வுரையுளத்தி
னினைந்து நினைந்து வியப்புற்று நிறையார் மனைவிக் கதுபுகன்று
புனைந்தா * வரிண விழிமடவா ளுடங்குப் போதப் புறப்பட்டா
† ரினன்று ‡னரிவை பவனத்திற் செய்த வடவேங் கடநோக்கி. ()

வருந்து நோக்கிச் சென்றுபல காதங் கடந்து வைகுந்தம்
புகுந்த வவரு மீண்டுதொழப் போத நினைக்கும் வடமலையின்
மிகுந்த காத லுடனேறி விழவு முடியத் தொழுதகத்துப்
புகுந்த மகிழ்வாற் றம்பதிக ளங்கட் சின்னாட் போக்கினரால்.(௩உ)

அங்க ணிவர்க ளுறைநாளி லலர்மேன் மங்கை மணவாளன்
றங்க மறையோ னுருவுகொடு துயில்கொ ளனந்த சூரியர்பாற்
பொங்கு மருளா லெழுந்தருளிப் போந்து கனவி லவர்கரத்திற்
றங்க வளித்தார் தனதாரா தனத்துக் கேய்ந்த திருமணியை. (௩௩)

* அரிணம் - மான். † இனன் - சூரியன். ‡ அரிவை பவனம் - கன்னிராசி.

ஒலியார் * கண்டை கரத்தேந்தி யோங்கு மகிழ்வாற் றுணைவியிட
மலிவா ரன்பி னளிக்கவவள் வாங்கி மடிமீ திருத்தவது
சலியா நோக்கோ டவரிருப்பத் தணந்து மறைந்த தென்வியப்போ
வலியார் மூன்று தொழில்களுந்தம் வயத்த ராவார்க் கிதுபுரிதல். ()

இந்த வாறு தாங்கண்ட கனுவின் றிறத்தை யில்லினட்கு
முந்த வுரைத்துத் தொழுகுலத்து முதல்வன் மகிழ்ந்துகாலையிற்செய்
சந்தி முதல நூலின்வழி தப்பா தியற்றித் தன்பவனத்
தந்தி விருந்தா ரவர்பெருமை யெம்மாற் புகலு மளவினதோ. (௩௫)

எண்ணும் புலரி யெழுந்துதிரு மலையி லெம்மான் றிருக்கோயி
னண்ணு முறைமைப் பரிசனத்தார் நாதர்க் குரிய மணியையவண்
கண்ணிற் காணு திதுவென்னே யென்று கலங்கிக் கைவிதிர்த்தே
யண்ண வறியோ மொருநாளு மிந்த வாறென் றகநெகிழ்ந்தார். ()

இவ்வா றிவர்கள் கூடியிருந் தெண்ணப் பெரிய சீயரறிந்
தவ்வா றுரைப்பர் நம்பெருமா னகிலத் தவரைக் காக்கவிணை
யொவ்வா வனந்த சூரியர்பா லுயர்வேய் மகவாய்ப் பிறக்கென்று
செவ்வே மணியைத்தான்கொடுபோய்க்கொடுத்தானென்றுசெப்பினரால்.

பெரிய சீய ருரைகேட்டுப் பெருகு களிப்போ டியாவர்களும்
புரியிற் சிறந்த கச்சிநின்று போந்த வனந்த சூரிகடாம்
பரிவோ டுறையு மிற்புகுந்து பாதம் பணிந்தன் னோர்பெருமை
விரிய வுரைத்துக் கனுத்திறத்தை விண்டு திரும்பி யேகலுற்றார்.(௩௮)

அந்த ணாளர் வந்துபணிந் தகல வனந்த சூரியர்தாங்
கந்த வனமார் புயவடவேங் கடமாற் போற்றி விடைகொண்டே
யெந்தை கச்சி யருளாள ரிணைத்தா டொழுவான் றேவியொடுஞ்
சிந்தை முதிரு மவாவினராய்ச் சென்றங் கடைந்தா ரின்னாளில். ()

தோதா ரம்மை கருமத்தாற் றோன்று மவர்க்கே மதிபத்து
மாதா வுதரம் வதிதலிச்சை வழியாற் றோன்று மவற்கிலையென்
றோதா நின்ற நூற்பொருளை யுலக மறிய வுணர்த்துவர்போற்
றீதோ வியலீ ராறகவைக் கருப்ப மார்ந்து திகழ்ந்தனரால் (௪0)

* கண்டை - மணி.

எண்ணுங் கலிநா லாயிரத்து மூந்நூற் றெழுபத் தொன்றிலுற
நண்ணுஞ் சுக்ல வருடமதி கன்னி யோண நாள்வரச்சி
ரண்ணி யுயர்வு மொப்புமிலா வளவி லொளியா ரொருமகவை
விண்ணு முலகுந் தொழத்தோதா ரம்மை யுயிர்த்தார் வியனுலகில்.()

உம்ப ருலவுந் தினகரனை யொளியாற் சமழ்க்கப் புரிவித்துப்
பம்பு மெழிலா லங்கணையைப் பரிக்கும் வேளைப் பரிபவித்தே
யிம்பர் வியக்கு மியற்கையறி வேய்ந்து தழைக்குந் திருமகவை
யம்பைப் பழிக்கு மலர்விழியா ணோக்கித் தாய ரகமகிழ்ந்தார். (சஉ)

தந்தை யனந்த சூரிகளுந் தனைய னுதித்த திறங்கேட்டுச்
சிந்தை யுவப்பத் தடங்குடைந்து திருமான் மகிழ நூலினுரை
தந்த படியே விரைதான முதல புரிந்து சாதகன்மஞ்
செந்தண் மரைநேர் முகமலர்ந்து சிறப்பச் செய்தார் தேர்ச்சியுளார்.

மஞ்சு தோயுஞ் சிகரவட மலையா னருளு மகவினுக்கு
ளஞ்சு மடக்கு மந்தணர்மு னவன்பேர் வைப்ப லெனமதித்து
விஞ்சு மறிவார் தந்தைதிரு வேங்க டாசா ரியரென்னத்
தஞ்ச மளிக்குந் திருநாமம் பன்னொன் றாநாட் சாற்றினரால். (சச)

இருநான் கென்ன வருமதியி னின்றேன் றயிர்நெய் யிவைகலவித்
தருமா வனத்தை லவணுதி சாரா தாகத் திருமாலுக்
கொருவா வனபின் முன்னரளித் தொப்பின மகற்குப் பின்னளித்துத்
திருவார் சவள மூன்றாண்டிற் செய்து முடித்தார் நற்றினத்தே. ()

ஒளியார் புதல்வர்க் குபநயன மொருவா வெட்டு வருடத்திற்
களியாப் புரிய வக்குமரர் கடாம்பி யப்புள் ளாரிடத்திற்
றெளிவாய் வேத நான்கோதித் தேர்வுற் றத்தே சிகனிடத்தே
யெளிதாய்த் தருக்கம் வியாகரண மீமா மிசையா மிவையுணர்ந்தார்.

பின்னர்ச் சீபா டியமுதலாப் பிறங்கு நூல்க ளாரியன்பா
னன்னர்ப் பயிலு மிவர்தம்மை நோக்கி யுயர்ந்தோர் நால்வேதந்
தன்னில் வியாதன் மிருதிகளிற் றனைநேர் கில்லா மனுவேந்தன்
பன்னூற் கரிய காவியங்க ளவற்றிற் பரவும் வான்மீகி. (சஎ)

ஓத வரிய வேதாந்தத் தோங்கு போதா யனமுனிவன்
போத வரிய வியாகரண மதனிற் பொற்பார் பாணினியே
யேத நீக்குந் தருக்கத்தி லிசைகொள் கணாத மாமுனியே
பேதஞ் சிறிது மிலேயென்ன நன்கு நாளும் பேசுவரால். (சஅ)

மற்றித் தகைய வேதாந்த குரவர் மனத்துக் கியைந்தவொரு
பெற்றித் தாய குலம்பருவஞ் சீல மாதி பெருமையெலா
முற்றக் கொளுமோர் கன்னிகையை முறையின் மணந்தே யவருள்ளம்
பற்றிக் களிக்கும் படியின்பம் பலவு மளிப்பர் பண்பினொடும். (சகூ)

தேவர் முனிவர் தொழுமயிந்தைப் பதிக்கட் சென்று பரிவதன
மேவுந் திருமான் மந்திரத்தை மெய்யன் போடு பயிறரலா
லேவ மகற்று மெம்பெருமா னிவர்முற் றேன்றி யருள்புரிந்து
பாவு மதுர கம்பீர பண்பார் விமல வாக்களித்தார். (ருo)

சீரின் மன்னும் வேதாந்தந் தெளிவார்க் கணியாய்த் திகழுமிவர்
நேரி னியாய பரிசுத்தி நியாய சுத்தாஞ் சனநூல்கள்
பாரில் வாதி யாங்கயங்கள் பாற்றும் பஞ்சா னனங்களென
வாரும் புகழச் செய்தளித்தா ரளவின் ஞானக் குன்றனையார். (ருக)

இன்னார் கவிகள் வாதிகளுக் கேயு முதன்மைத் தனம்வாய்ந்து
பன்னே ரிகந்த கவிகள்பொழி பரிசு மோர்ந்து கச்சியில்வாழ்
தன்னே ரில்லாப் பேரறிஞர் சாருங் குணங்கொண் டபிதானம்
பொன்னேர் கவிதார்க் கிகசிங்க மென்ன மகிழ்விற் புகன்றனரால். ()

தகவு நீங்கும் வாதியராந் தாவ மவிக்கச் சலதரமாய்
நிகழும் வாக்கே யிவர்புகழ்க்கு நீங்கா தழுக்கா றுற்றெதிர்ந்து
திகழும் வித்தி யாரணிய வெதிலயைச் செயிக்க வவர்தாழ்ந்து
மிகவு நட்பாய் நும்மைப்போன் மேதா வியரா ரெனத்துதித்தார்.

மாற்றற் கரிய வைராக்ய மாண்ப ரிவரே யெனயார்க்குந்
தேற்றற் குரிய *கரிவிசய நகர்மன் றிருவேங் கடத்திலிவ
ரேற்றத் துறைநா ளெழுதிவிடு நிருப நோக்கி யிவர்மறுப்பார்
மாற்றத் துரைத்து விடுத்தவைராக் கியபஞ் சகமா மெனுநூலே. ()

---

* கரி - சான்று.

கோதின் ஞான வேதாந்த குரவர் கங்கை காளிந்தி
யாதி நதிக டிளைந்துதிரு வயோத்தி முதல் பதிதொழுது
வாதி யாக வடபுலத்து வருவார் தமையும் வென்றுமரைப்
போதி லிருப்பார் பணிகச்சி புரிக்குச் சிட ருடன்புக்கார். (ருரு)

வேறு.

வெலற்கரிய புயவலியார் விசயநக ரரசனவை மேவி வாதம், விலக்கரிய தெனப்புரியும் வித்தியா ரணியனக்கோப் பியனின் னோர்க்குக், கலக்கமிலா திருநிலையு முணர்ந்துரைத்த வுரையொன்றே காண்போர்க் கின்னோர், நலத்தக்கார் நடுநிலையிற் றுலைபோல்வா ரெனும்பொருளை நன்கு காட்டும். (ருசு)

இத்தகையார் திருவயிந்தை நகர்க்கெய்திப் பரிமுகனை யேத்தியன்னான், வித்தகமார் மனுவேவாதிக் கவிகள்பல வன்னவர்க்கு விருப்பிற் செய்து, சித்தமகிழ் வுடனந்தப் பதியிடைநாட் பலகழித்துத் தினஞ்செ யென்றா*, பூத்தமமாங் குலவேந்தர் பணியரங்கன் றாயிலரங்க முற்றா மன்னே. (ருஎ)

வேறு.

அந்நகரி லுற்றபெரி யாருரையி லங்க
ணன்னருறு மூவறு தினத்தினலி வெய்த
மன்னு † கிருட் டினமிச்சி ரனையழிய வாதிற்
றன்னிகரி லாதவிவர் வென்றனர் தமித்தே. (ருஅ)

வாதிலிவர் மேம்படு திறத்தினை மதித்து
மாதுறை நிறத்தரங்க நாதர்மகிழ் வெய்தி
மேதையெழில் வேதாந்த தேசிக னெனப்பே
ரோதினர்த மர்ச்சகரி னெப்பில்பரி சாக. (ருக)

வேறு.

அந்தி லந்த வபிதான மளிக்க வரங்க நாயகியா
ரிந்தக் கவிதார்க் கிகசிம்மத் தியல்பு நோக்கிப் பரிசாகத்
தந்தாள் சருவ தந்திரசு தந்த்ர னென்னுந் தனிநாமஞ்
சிந்தார் புவியில் வைணவத்தின் றிறத்தை விளக்குந் தேசிகர்க்கே.()

---

* என்றூழ் - சூரியன். †கிருட்டின மிச்சிரர் - பிரபோதசந்திரோதய நூலாசிரியர்.

சல்லையில்சீர்த் திருஞானத் திக்குரவர் பெருமானு
ரொல்லும்வகை பாதுகா சகத்திரமென் றொருநூல்செய்
தல்லலுறப் * பதகமல சகத்திரரை யறத்தாழ்த்தி
வெல்லுதிற னறிந்துயர்ந்தோர் மிக்கபரி வாற்புகழ்ந்தார். (௬௧)

மற்றொருகாற் றுருக்கர்விடு துர்கந்தநான் மாலரங்கத்
துற்றவர்கட் குறுமிடுக்கண் போயொழிய வுரகவணை
பற்றுபர னைப்பாவாற் பரவியிவ ரவ்விடுக்கண்
முற்றுமொழித் தருள்நகர் முன்னையினுஞ் சிறந்தன்றே. (௬௨)

திருவரங்கப் பதிதுறந்து திருவணைபுக் காடினராய்க்
குருகைநக ராழ்வரைக் கும்பிட்டுச் சோலைமலை
மருவுதிருப் பதிகள்பல வணங்கிவெது கிரிப்பெருமான்
றிருவடித்தா மரைதாழ்ந்து திருக்கச்சி நகரணைந்தார். (௬௩)

அவ்வயினிற் றேசிகர்பா லழுக்காறு கொள்கும்பித்
தெவ்வர்சில ரவர்வாட்டுஞ் செய்கையனன் மானுக
மெவ்வமிழைத் திடவிவர்பா லேவவவற் றைத்தடுத்துச்
செவ்வியினிற் சீர்க்கருட தண்டகமொன் றுரைசெய்ய. (௬௪)

அக்கணத்தி லேசங்க பாலனென்னு மரவமந்தப்
புக்குவனை யெடுத்தேகக் §கவுசிகனும் புல்லறிவேன்
பக்கலருள் புரிகவெனப் பாம்பதனை மீட்பித்துத்
துக்கமொழி கெனவளிக்கத் துதித்தவனு மேகினான். (௬௫)

கருமுகிலை நிகருமெழிற் கண்ணனுரைத் தருள்கீதை
திருவமிகு முடையவர்செய் சீபாடி யம்முதல
குருகைநகர்ச் சடகோபன் கூறுதிரு வாய்மொழியிப்
பொருவில்பல நூலாய்ந்து நாட்களிவை போக்குவார். (௬௬)

பானுதனி கவுத்துவத்தாற் பரிதிதன் தொளியதனாற்
சீலமுறும் பருணிதர்தம் வித்தையினாற் றிகழ்தலெனக்

* பதகமல சகத்திரர் = அழகியமணவாளப்பெருமாள்நயினார்;
கவிசிம்மனென்னும் பெயர்.

§ கவுசிகன் = பாம்பாட்டி

கோலமுறும் புகழ்வரதா சாரியப்பேர் குமாரரிலித்
தாலமிசை மிகவிளக்கந் தந்தனர்நங் குரவர்பிரான். (சுஎ)

இத்தகையா ரிப்பதியி லிவ்வுலகஞ் செய்தவத்தா
லுத்தமமா மருச்சையுரு வுளம்பற்றி யொளிர்கின்றார்
சித்தமுவப் புடனிவர்க்குச் செய்பணியே பணியதன்மிக்
குத்தமமொன் றிலையென்னத் தாசருளத் துறவுன்னி. (சுஅ)

தொழுதெழுந்து திருத்தளியைச் சூழ்வந்து பன்முறைகள்
பழுதுறுமித் திருக்கோயில் பாங்குபெறப் புரிவெனென
வெழுதரும்பே ராசையிற்றம் மினவணிகர் வாழ்நாட்டிற்
பொழிறிகழு மரியையெனுந் தாமுதித்த புரியணைந்தார். (சுகூ)

வண்மையினிற் கன்னனையும் வடதிசைமன் னனைத்தனத்து
முண்மையினிற் பொருவாருக் குணர்த்தினர்தம் முளக்கிடக்கை
யெண்மையினிற் களிப்பினரா யிவர்பணிக்கு வேண்டுபொரு
ளொண்மையினி லீத்துவந்தா ரொப்பில்பெருங் குடிப்பிறந்தார். ()

மாசின்மதி யுடைத்தாசர் மனக்கொண்ட செயன்முடிப்பா
னேசமுடன் வணிகர்தரு நீணிதியங் கைக்கொண்டு
பாசமொழித் திடுபரம ஞானியர்பல் லோர்பயிலுந்
தேசுதிகழ் மணிமாடத் திருக்கச்சி நகர்சென்றார். (எக)

அங்கணைந்து நிகமாந்த வாசிரியற் கொளியோங்கு
மொங்கெழிலார் மண்டபமுங் கோபுரமும் புரிசைகளுந்
தங்குபெரு மன்றமிவை சார்ந்துளதா யொருகோயில்
புங்கவரு முளம்வியந்து போற்றிசைக்கப் புரிவித்தார். (எஉ)

விண்ணோங்கு கோபுரத்தின் மேனிலவு முடுக்கணங்க
டண்ணோங்கு வெண்டரளத் தாமமெனத் தயங்கியதன்
கண்ணோங்கச் சிகரியெழில் கண்டுமதி மேற்செல்லா
தெண்ணோங்க நிற்குமதற் கியைத்தநடு மணியேய்ப்ப. (எங)

மேனிலவு * திரிபதகை முழுகியெழும் விபுதரதன்
பானிலவு மிச்சிகரிப் பொற்சிகரப் பந்தியினைத்

* திரிபதகை - கங்கை.

தேனுலவு பங்கயத்தின் செழுமொக்கு ளொளிநிலையாக்
கானுலவு தளிர்க்கரத்தாற் களைந்துமுகங் கவிழ்வாரால். (௭௪)

திசையளக்க வொளிவிடுத்துச் சேணிவர்ந்து மிக்கிடங்கொண்
டிசைவிளக்கப் படிகத்தா லியற்றிடுமிவ் வெயினோக்கி
நசையளத்தற் கரிதாகி நண்ணுதுறக் கந்துறந்து
வசையறுத்திம் மதிலிலர மகளிர்வினை யாட்டயர்வார். (௭௫)

விண்டலத்து மொளிவிடுக்கும் வேதாந்த குருநியமங்
கண்டுபணி தரில்விசுவ கன்மனதன் றொழிற்றிறமுட்
கொண்டுவியந் தெக்கலையுங் குடிகொண்ட குரவர்பிராற்
கெண்டகுசிற் பச்சிறப்பிங் கியைந்ததரி தன்றென்பான். (௭௬)

இந்நியமத் திடைக்குயிற்றும் பலமணிக ளியற்றுமொளி
யெந்நிலமும் பரவியட ரிருளோச்சி யென்றாழ்போற்
றுன்னுகதி ரொருவாது சொரிதலினா லிரவிடத்தும்
மன்னுசல சஞ்சக்ர வாளமுக மலர்ந்தொளிரும். (௭௭)

உயிரிருந்தா லெனுந்தகைய வோவியங்கள் பல்லிடமுஞ்
செயிரிகந்து விளங்கவவை நோக்குதற்கே திகழ்மணிப்பூண்
வெயிலிலங்கு விபுதரெலாம் விழியிமையா திருப்பரெனி
னெயிலிலங்கு மிக்கோட்டத் தியல்பெவராற் சொலற்பாற்றே. (௭௮)

சித்தசனார் கணையிலக்கைத் தீர்ந்துதிகழ் தருதாசர்
சித்தமுவந் தித்தகைய சினகரத்தி லெழுந்தருளும்
வித்தகனை வேதாந்த தேசிகனை மெய்யன்பாற்
பத்தியுடன் மூவாண்டு பரா அயந்தப் பதிவாழ்ந்தார். (௭௯)

பாரெங்கும் புகழ்கச்சிப் பதியிலிவ ருறைநாளிற்
சாரங்க முதற்படைக டாங்குதிருக் கரத்தெம்மா
னாரங்கொ டிருமார்ப னருளாளன் றனைப்போற்றச்
சீரங்க விலக்குவப்பேர்த் தேசிகரப் பதிக்கெழுந்தார். (௮௰)

எழுந்தருளித் திசைமுகனா ரியற்றுமய மேதத்துச்
செழுந்தகைய வுத்தரவே தித்தலத்தி லவதரித்த

தொழுந்தகைப்பே ரருளாளன் கமலையிவர் துணைப்பதங்கள்
கெழுந்தகையுன் பொடுபலரிந்து *தாபதம்போய்க் கிளர்ந்தனரால்.()

வேறு.

ஆசிரியர் தாபதம்புக் கடிபோற்றித் தாசருற வதன்பி னிங்ஙன்
றேசுபுரி தருதெய்வ நாயகனே யெனதான்மாத் திகழக் காத்தோ
னாசிலிவ னருளானே யவ்வரச சிராதிகதி யணையு மென்னு
வேசிறனை துளத்தெண்ணிக் கச்சிநகர் தனிற்குரவரிருந்தார்மன்னோ.

உலகுபுரி கருமமதற் கொருவரசம்பாய் வேதமுத லுயர்நூ லியாவு
மிலகியொளிர் தரற்கிடனாயியையரங்கவிலக்குவப்பேரெதிகள்கோமா
னலகில்பெரும் புகழுடனேயவ்வமரர்கணமெதிர்கொண் டழைப்பச்சென்று
நிலவுமொளி திரியாத திருநாட்டை யலங்கரித்தானிகர்வேறில்லான்.

பார்த்தல்பரிசித்தலினாற்பவமகற்றிப்பவித்திரஞ்செய்பண்புவாய்ந்த
தீர்த்தன்விடு திருமேனி தனைக்கச்சி நகருறையுஞ் சீர்சான் மேலோர்
கூர்த்தமதி யுடைத்தாச ரியற்றுபிருந் தாவனத்திற் குன்று வன்பி
னீர்த்தவுல கிடையாருந் தொழுதுய்யவெழுந்தருளிநிலவச்செய்தார்.

வேறு.

பின்னர்த் தாசர்தம் பேசிடு தெய்வமாய்த்,
துன்னு தீர்த்தனித் தொல்புவி நீத்ததை
யுன்னி யாரஞ ருற்றவர் நல்லுரு
முன்னின் றேத்திக் களிப்பர் முறையினே. (அரு)

வேறு.

திருவநந்த வாவியிடைத் தினமாடித் தாசரப்பே
ரருளாளன் றிருவடிக ளணைந்தேத்தி வைணவராந்
தெருளாளு மறையவர்தாள் சிரஞ்சேர்த்தி யிவ்வண்ணம்
புரிவாருந் தொண்டியற்றிப் பல்பொழுது கழிப்பாரால். (அசு)

கைங்கரியச் சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் கூகூ௦.

---

*தாபதம் - தவத்தினருறையுள்.

# கரு-வது பரமபதம் பெறு சருக்கம்.

அத்திகிரி முன்னுரைசெய் தாசருற வன்றோர்
பத்தினியெ னுஞ்சனகி யார்பிணிப்பற் றுண்டு
மத்தலத்து றாய்மவுலி யண்ணலடி போற்றிச்
சித்தநலி வின்றியமர் செய்கையின ராவார். (க)

நோயிலொரு திங்கள்செல நோன்புடைய ராய
தாயனைய சானகி யெனும்பெயரி னார்க்குத்
தூயவடி தந்துசுக வாழ்வுதரு நோக்க
மேயதிரு மாலொரு வினைத்திற முவந்தான். (உ)

மிக்கநல முற்றொளிரும் வேங்கடவம் மாள்போர்ச்
செக்கமல நாபியுறை சிந்தையணற் சீலை
சக்கர முதற்குறி தரித்தவள் சதுர்த்தை
மெய்க்கனவு புக்கொருரை விண்டனன் விரித்தே. (௩)

வேறு.

வளம்பயிலுங் கச்சியினில் வாரணமார்த் திடுமெறுகின் மன்னு மேல்பால், விளங்குமொரு மனையிலிரா மானுசதா சப்பெயரின் மேலோர் வாழ்வா, ரளந்தறிதற் கரியபுக ழாளர்தம தாத்மபர மென்பாற் சேர்த்துக், கிளர்ந்தொளிருங் கிருதார்த்தர் சுயம்பலமாங் கைங்கரியங் கெழுமச் செய்வார். (௪)

வேறு.

ஆயபிழை யொன்றுபிறர்க் காற்றுகிலர் தம்பாற்
றீயநலி வெய்தவரு செய்கைசிலர் செய்யி
லேயகரு மப்பலனி தென்னுடைய தன்றுன்
மாயையினின் மால்செய்வினை யாட்டென மதிப்பார். (ரு)

அருங்களி றளித்தருளு மென்றனடி யார்கள்
விரும்புபணி யெய்தின்மகிழ் வெய்தியலை திண்றேல்
வருந்துயர மெய்துவரன் னார்விடய போகத்
திருங்களியு மின்மையையு மெய்துகில ரென்றும். (சு)

அல்லலொரு வர்க்குமிவ் ராற்றில ரிருப்ப
வொல்லுநிப மின்றிமுனி வுற்றிடினு மன்னார்ப்
புல்லியொரு புன்பிழை புரிந்திலெனிப் போழ்து
தொல்லைவினை போன்மது துறந்தருள்க வென்பார். (எ)

பராபர மறிந்துபுரு டார்த்தமிசை பண்பாய்
விராவரு மவாவுடையர் மெய்யிலதை வேண்டி
யிராகமுறு வாரிட மிரங்கிமணி நிற்க
* வராடமதை வெஃகலினை மாண்பென வியப்பார். (அ)

தூயதவ ளத்தவெழி றுற்றவிவர் கீர்த்தி
மேயவுல கங்களிடை மிக்கவிருள் போக்கச்
சாயுமிட மின்றியவை தாமதர்க ளுள்ளென்
பாயகுகை யாயமனை பற்றியுறு மெய்யே. (கூ)

இப்பரி சுயர்ந்தவவ ரன்பரெனக் காவ
ரப்பரிசில் யாமுமவர்க் கன்புடைய மன்னு
ரொப்பரிய தேவிபிணி யுற்றுடைய னீபோ
யிப்பொழு தியற்றுபணி யெற்கியற்ற லொப்பாம். (க0)

வேறு.

எனவருளு மருளாள ரினியமொழி கேட்டுமகிழ்ந் தெழுந்து காலை, மனவழுக்கற் றுளிர்தருவேங் கடவம்மாண் மனக்கினியார் தமக்கிம் மாற்ற, மனகனுரைத் தனன்கனவி லெனக்கூறிப் பெரும் பூதூ ரதனி னீங்கி, வினைகளொழித் திடுதாசர் மனக்கினியந்த பணி புரிய விரைந்தா னன்றே. (கக)

இவட்குரைத்த வன்றிரவே யருளாளன் சானகியார் கனவி னெய்திப், பவக்கடனீத் திடுநங்காய் பருவரலுற் றனைநினக்குப் பணிசெய் தற்கிங், குவப்புடைய வேங்கடவம் மாளென்பா னம்மு ரையா லுறுவா ளுன்பாற், றவத்தனுவி லொன்பானு ணம்மொளிநீ சார்வையெனச் சாற்றிப் போனான். (கஉ)

பெரும்பூதூர் நின்றுவரும் வேங்கடவம் மாளெங்கள் பெம் மான் கச்சி, விரும்பியமர் தாசரொடு சானகியார் தமைப்போற்றி

* வராடம் — பலகறை.

விளைந்த கூறத், திருந்துமனத் தாசர்திரு மால்செயலை வியந்தனரா ய்ச் செய்க வென்ன, வருந்ததிநேர் சானகியார்க் காயபணி யியற்றி னளவ் வணங்கு தானே. (கரு)

பூதூர்மின் வேண்டுபணி புரிதரச்சின் னுளகன்று போயிற் றுக மீதூரு நோயினுடன் மிகமெலியச் சானகியார் கணவர்ப் போற்றித் தாதூது மலராண்மன் றன்னடியி னெளியெனக்குத் தருதற்கின்றவ் வேதார்வின்மதியொன்பானுளியைந்தநியமனநன்கருள்கவென்றார்.

தாசரிவ்வா றுரைக்குமனை யாருரையு மவருடலின் றளர்வு நோக்கிப், பேசரிய பரலோக கமனத்தை மனக்கொண்டு பெட்போ டாசா, ஞசகலக் கருணையினு லுரைத்தருளு முயர்நெறியை யன் போ டாங்குப், பாசவினை தெறுஞானச் சானகியார் நனிமகிழப் பக ர்ந்தார் மாதோ. (கரு)

பலபலவாம் பிறந்தைதரு பவத்தினுக்குக் கழுவாயாய்ப் பரந்யாச நிலவுறக்கொண் டுறுநியமம் வழுவாதார்க் குறுதியினி னிமல மாகிக் குலவுதிரு வடியிணைக டருதிருமால் குரம்பையொழித் திடுதற் காகச் சுலவுபிணி யாதியவா மொருநிபத்தை யஞ்ஞான்று சூழச் செய்வார்.

இவ்வாற்றி னுடல்விடுங்கா லியைபொழுதில் விமலையிறை யிவ னி னின்றுஞ், செவ்வாய வறம்பவத்தைப் பிரித்தவையின் பலனுற் றார் செற்றார்க் கீந்து, தெவ்வோவா யிரக்கண்ணன் முக்கண்ண னெண்கண்ணன் றெற்கின் கண்ணற், கெவ்வாறோ வவ்வாற்றி லியம னின்றி யுடல்விடுமா றிசைவிப் பானல். (கஎ)

இந்தியங்கள் பத்தினையு மியையமனத் திடைக்கூட்டி மனத் தைப் பின்னர்த், தொந்தமுறும் பிராணனிலும் பிராணனையான் மாவி டத்துந் தொகுத்தான் மாவைப், பந்தமுறச் சூக்குமபூ தங்களின் பாற் படுத்தியிந்தப் படியாற் சீவ, னைந்துறலுக் கிரங்கினனுய்ப் பர மான்மா வதைத்தன்பா னண்ண வைத்து. (கஅ)

துயர்நீக்கி நூறொடொன்றாய்ச் சொலும்பிரம நாடிவழித் துன் ன வைப்பான், மயர்நீங்கு மவ்வமயம் வழிநடத்து மங்கியென்பான் வந்து போற்றி, யுயர்வாகு முபசார மீந்துதன தெல்லைவரை யுய்ப்

பான் பின்ன, ரியறருநற் பகலுத்த ராயணமாண் டெனுமவற்றிற்
கிசைதெய் வங்கள். (கக)

முத்திவழிச் செலுமிவனை முதத்தினராய்ப் புரிபூசை முற்று
மாற்றி, நத்திவழி நடத்துகிற்பர் வாயுதே வண்ணனு*பிர பன்ன
னுமிவ், வுத்தமனை யருச்சித்துத் தன்வருந்து வரைவிடுப்ப னுப்பா
லின்னேன், சுத்தமுறுஞ் சக்கரத்தின் றுளைபோலும் வழிச்சென்று
† சூரற் சேர்வான். (உ0)

வேறு.

சேர்தருமவ் வாதவனுற் செய்சிறப்புப் பலபெற்று
வார்தருமா டம்பரத்தின் புழைபோலும் வழிச்சென்று
ஏர்தருதன் னிலமுன்ன ரெதிர்வந்து வணங்கியுள
சீர்தருமா வெண்மதியைச் செவ்வனே சென்றடைவான். (உக)

அப்பால்வின் னவர்வணங்கு மலகில்புக முடையோனு
மொப்போத லோவு‡மப வர்க்கவழி யுறுமிவனை
மைப்போதிற் கபிரவங்கண் மலர்விக்கு மதியெதிர்ந்து
தப்போதற் கருமுகமன் றந்துநெறி செலவிடுப்பான். (உஉ)

அவனின்றுந் துந்துபியின் புழைபோலு மருநெறியி
லிவனேக ||வமானவனங் கெதிர்போற்றி யுடன்போதத்
தவனுற்றன் பரம்பரமன் றாமரைத்தா ளிணையினில்வைப்
பவனுமிவ் வான்மாவைப் புனற்கிறைவன் பரிவினொடும். (உங)

புக்கெதிர்ந்து போற்றிசைத்துத் தன்¶னடவைப் புறத்துய்ப்பான்
றக்கவமா னவனுடனே சார்தருமிப் பிரபன்னனை
முக்கடம்பெய் வெண்களிற்று முதல்வனருக் கியமாதி
மிக்கபல பணிபுரிந்து தன்§வயவை மீவிடுப்பான். (உச)

---

* பிரபன்னன் - பிரபத்தியுடையான். † சூரன் - சூரியன்.

‡ அபவர்க்கம் - மோக்ஷம்.

|| அமானவன் - விரசையினக்கரையிலிருந்து தன் கரஸ்பரிசத்தால் பிராகிருத சரீரம் போக்கும் ஓர் நித்ய சூரி.

¶ நடவை - வழி.

§ வயவை - வழி.

அன்னணமங் கேய்துகின்ற வெழிற்சூரி தனைப்பிரமன்
முன்னணைந்து தொழுதெழுந்து தன்தாக்க முழுதளித்துத்
துன்னுகளி பயமன்பு தொகுபத்தி வணக்கமிவை
மன்னினனுப் பின்றொடர்ந்து வருவான்ற னெல்லைவரை. (உரு)

பின்னிவனைம் பூதமுப ரண்டமவற் றிடைப்பிறங்குந்
துன்னுபல வுலகமண்ட கடாகமொடு சூழேழா
மன்னுமா வரணம்போய் வைகுந்தத் தெல்லையுளுந்
தன்னிகரி லமுதாரும் விரசைநதி தனைச்சார்வன். (உசா)

சார்ந்துதிரு மலமதுரந் தண்மையுறு மதின்மூழ்கிச்
சேர்ந்தசூக் குமவுடலந் தீர்ந்துநினை வினிற்கடந்து
நேர்ந்தவமா னவன்கைதொட வரிட்டமதை நீத்தனனு
யார்ந்திடுசா லோக்கியசா ரூப்பியமு மடைவானல். (உஎ)

வேறு.

ஆய சிறப்பின் வைகுந்த வுலகத் தமர்ந்த தாய்த்திருமான்
மேய விருப்பிற் பொருந்துவதாய் மெய்ம்மை ஞானத் தினர்க்கன்றி
யேய வரிதாய்க் காலபரி ணாம மிலதா யெஞ்ஞான்றுந்
தூய தாகிச் சுயவொளியாய்ச் சொல்லு மூன்று சுடர்களுக்கும். ()

மேலாய்ச் சுத்த தத்துவத்தை மேவி யோகர்க் களக்கரிதா
யேல வுயர்வுற் றுயரின்ப மியையு நகர மெதிர்நோக்கிச்
சால வணங்கிப் பிராகிருத சரீர நீத்தோன் செல்காலை
யோல மிகுத்த வரம்ணியமென் றுரைசா லிரண்டு கடல்களையும். ()

நறையா ருய்யா னங்களையு நண்ணு மணிமா வரைகளையுங்
குறையா வாறு குளங்களையுங் கும்பிட் டேத்தி யகங்களித்து
நிறையா ரைரம் மதியமெனுஞ் சரசை யடைந்து நிகரரிய
இறையார் சோம சவனமதை யேற்ற மகிழ்வோ டெய்துவனல். ()

அந்த வனத்தை யடைகாலை யண்ண லருளா லைஞ்ஞூறு
சந்த மிகுத்த வரமகளிர் தயங்கு பொன்னி னுடைகலன்
முந்து மிவைகள் கைக்கொண்டு முறையி னிவனை யலங்கரித்த
றந்த பின்னர்த் தில்லியப்போ தாங்குந் தருவா தியசார்வான். (௩க)

சார்ந்தெம் பெருமான் றிவ்யமணந் தகைசா விரத மொப்பிலொளி
சேர்ந்த திறத்தாற் சரீரகுணஞ் சிறக்க மிக்கோ ஞகியெலா
மோர்ந்தங் கயோத்தி யெனும்பெயரி னொருமா நகரை யடைகாலைப்
பேர்ந்தப் பரம பதநின்றும் பிரசா பதிபிந் திரனென்னும். (௩௨)

தேவ ரிருவர் வருகவெனச் செப்பத் திகழு மத்தலத்து
மேவும் பண்பார் சூரிகளு மிக்க முகமன் செய்தழைப்ப
யாவ ருடனு மடைந்தின்னோ னெழில்கொள் பரம பதம்புகுந்து
தாவி னகரின் மணிக்கிரியோற் றயங்கு மாட மறுகணைவான். (௩௩)

ஏய காலை யத்தலத்தி னிமையோ ரின்னோன் றிருவடியைத்
தூய நீர்கொண் டறவிளக்கத் துலங்குந் தீப மரமகளி
ராய மேந்தி யெதிர்கொள்ள வழகார் விமானத் தணித்தாக
வாய பந்தப் பிரபனனைப் பிரம சீர்த்தி யடைந்திடும்பின். (௩௪)

வணங்கி மணிமா மண்டபத்தின் மருங்கிற் போதச் சண்டன்முதற்
குணங்கொ டுவார பாலகருங் குமுத னாதி கணதிபரு
மிணங்க நோக்க விவன்பெருகு மின்ப வெள்ளத் திடைமூழ்கி
மணங்கொ டாரார் பெரியதிரு வடியை யடைந்து மகிழ்வானால். ()

பின்னர்ப் பராற்ப ரன்குணத்தைப் பேசிப் புகழப் பிராகிருதர்
துன்னு மவையை யடைந்தணியின் வடிவு திகழுஞ் சூரிகளை
நன்ன ரேத்தக் குரவர்பரம் பரையை நண்ணித் தொழுதப்பா
லுன்னற் கரிய வெம்பெருமா னுவப்பி னுறைசிம் மாசனமாம்.(௩௬)

முந்துந் தனகயா தாரசத்தி முதலாந் தத்து வங்களுக்கு
வந்தித் தொழுகு மதிட்டான தெய்வந் தம்மை வயங்கியுறு
மந்த மமரு மங்கங்க ளாக வுடைத்தா யமர்ந்தொளிசெய்
விந்தை யுலவும் பரியங்க மேவல் காணூஉ மகிழ்வானே. (௩௭)

நண்ணு மந்தி விதழெட்டு நறுமென் பொகுட்டு முடைக்கமலத்
தெண்ணு மிதழ்க ளெட்டிடத்து மிலங்கு தாமப் பொகுட்டிடத்தும்
வண்ண மகளி ரொன்பதின்மர் மருவக் கவரிக் கரத்தினராய்க்
கண்ணிற் கண்டு சொலற்கரிய முத்தன் களிக்கு மறறப்பால். (௩௮)

மணிக ளோரா யிரமுடியும் வயங்குஞ் சுவேத வொளிகளுலி
யணிகொ ளுருவு மமைந்ததிரு வநந்தாழ் வானவ் வழுதிலைறந்

திணையில் கருணை யலைகொழிக்கு மிணைக்கண் ணேக்கிற் கிலக்காகித்
துணைகொள்கரங்கள்குவித்தின்னேன் றொழுதுமலர்ந்துநிற்பானல்.

ஓங்கு குரவன் றிருநோக்கா லொப்பி லின்னேன் பரிசிக்கத்
தேங்கு சுகமோ டழகுயர்வு செம்மை மனமா ரனந்தன்மிசைப்
பாங்க ரிமையோர் வணங்குபர வாசு தேவன் பாலணைந்தே
யாங்கு சமீபத் திருத்தலெனுஞ் சாமீப்பியமு மடைவானே. (சo)

வேறு.

தெய்வகிக ழிடதுதிரு வடியை நீட்டி வலதுதிரு வடிமுடக்கித் திகழ்வ லக்கை, மொய்யொளிசெய் முழந்தாளின் மீது வைத்து மொய்ம்புபெறு மனந்தனுட லிடக்கை யூன்றிச், செய்யசுடர் விடுந் திகிரி சங்க மற்றைத் திருக்கரங்க ளிரண்டினிலுஞ் சிறக்கத் தாங்கித், துய்யமணி பூணுதி சூழ மேவும் பரவாசு தேவனையிச் சுகுணன் காண்பான். (சக)

வேறு.

வடிவங் குளிர்ச்சி கம்பீரம் வாய்ந்து பகவன் கண்ணருட்கு
விடய மான விவனவன்றன் விமலப் பதங்கள் சிரம்வேய்ந்து
முடிவி லின்ப மடைந்துபரி யங்க மேறி மொழிசனகன்
மடியின் மேவி மகிழுமிளங் குழவி நிகர வயங்குவனல். (சஉ)

தேவ தேவ னிவன்மொழியைக் கேட்க வுளத்துச் சிந்தித்தி
யாவ னுவாய் நீயென்ன விவனை வினவத் தேவரீ
ரோவில் தாச னடிகளவ தார மாகு முயர்குரவன்
றுவி லருளா லுமதுதிருச் சரண்க ளடைந்தே னெனமொழிவான்.

கோதி லிந்த மொழியையிவன் கூறத் திருமா றிருவருளா
லேது நீங்க விவனெடுநா ளெண்ணி யவாவுங் கைங்கரியம்
போத வடைந்தே பேரின்பப் புணரி திளைத்துப் பிறப்பகன்று
நாத னெப்பப் போகங்க ணண்ணு நான்காம் பதம்பெறுவன். (சச)

என்று சொற்ற தன்கணவ ரினிய மொழிகள் செவிக்கொண்டு
துன்று நிறையார் சானகியார் துணைவர் துணைத்தா டொழுதேத்தி
நன்று குரவன் றனையிதய நண்ண வைத்திவ் வுடலொழித்தே
யென்றுங் கலங்காப் பரமபத மெய்திச் சிறந்கா ரிணையில்லார். (சரு)

போற்றுந் தகைரா மானுசனார் புவியை நீத்த மனைவியர்க்கங்
கேற்ற வபரக் கிரியைகளை யியற்றிப் பெரியோர் விடைபெற்றே
யூற்று நறவத் துழாய்மவுலி யுறையு மரியை வரவுன்னித்
தேற்று மாசான் ருபதமும் பிருந்தா வனமுஞ் சேவித்து. (சசு)

புறத்திற் போந்து வழிக்கொண்டு பொருந்து மிடையி லுளபதிகள்
சிறக்கத் தாழ்ந்து திருமார்பன் செந்தா மரைநே ரடியிணைக்கட்
டிறத்த விழைவாற் றினம்பணியுஞ் செம்மை யோர்களுனெறிபோ
யுறத்திற் றிரியா ரமரரியைப் பதியைத் தாச ரடைந்தனரால். (சஎ)

குலவு மந்தப் பதியுறையுங் கொண்டல் வண்ண னிணையடிக
ணிலவ வகத்துக் கொண்டுமகிழ் நிரம்பி யெம்மா னருச்சகரா
னலனொ டளிக்குந் துழாய்தீர்த்தஞ் சந்தஞ் சடாரி நயந்தேற்றுத்
தலனிற் சீர்த்தி மிகுதாசர் தமதாச் சிரமந் தனைச்சார்ந்தார். (சஅ)

பொய்கை யாழ்வார் முதலானோர் புகலு மறைநேர் பாசுரங்க
ளுய்யும் வகைய தெனப்பொருளோ டோதி யதனாற் பசியொழித்து
வய்ய மேத்து மவ்வாழ்வார் வருநாள் விழவை மாலுவப்பச்
செய்யு நெறிகள் வழுவாது சிறப்பிற் புரிந்தா ரப்பதியில். (சகூ)

மற்றப் பதியி னிகமாந்த குரவன் பவனி வரற்குரித்தாய்
முற்றும் பணியா லோரிரத முடித்துக் கன்னி மதியோணத்
துற்ற விழவைப் புரிவித்தே யொழியா தவை தொறும்புரியச்
சொற்ற தனமு மளித்துள்ளார் சோர்வின் றின்று நிகழுமது. (ருo)

ஓது மரியை யெனும்பதியி லோங்கும் வணிகர் தமைக்கொண்டு
வேத நாதன் றிருத்தளியில் விளங்கு மதின்மண் டபமாதி
போதச் சிறந்து முன்னையினும் பொலியப் புரிவித் தனர்மேலோர்க்
கேத நீக்கு மாலுவக்கும் பணியை யியற்ற லியல்பாமே. (ருக)

கரியா னுண்ணு நவநீதக் கையா னரவி னடித்தானை
யுரிதாப் பூசை புரிந்தன்போ டாழ்வார் திருப்பா சுரம்பேணிப்
பெரியார் பாக வதர்களையும் பிரியா ராகி வணங்கிநிலை
திரியா ரிந்த வாறுதினங் காலங் கழிப்பர் செவ்விதினே. (ருஉ)

மிக்க வொளியோ டிவ்வண்ணம் விளங்கு நாளிற் பதுமையிறை
செக்கர்க் கமலத் தன்னடியி லிவரைச் சேர்க்கச் சிந்தித்தே

யொக்கு மிவர்க்குத் தம்முடல மொழியுங் கால மணித்தாகிப்
புக்க திறனை யளவறிந்து கொள்ளு மாறு புரிவித்தான். (ருரு)

அறியுந் தாசர் புலிக்குன்றத் தமரும் வங்கி புரமுடைய
நெறியி னீங்கா வேதாந்தா சாரி யார்செய் நிறைந்தகலைச்
செறிவி னறிவார் திருமலையா சாரி யாரைச் சென்றேத்தித்
துறையை விளக்கும் பரமபத சோபா னத்தை யோதினரால். ()

உணரு நாளின் மித்திரரா மொருவர்க் கிவர்தாம் பரமபதம்
புணருந் திறத்தை வேறுய பொருளா லுணரத் தமதிலெரி
யுணவாக் கொள்ளப் படுஞ்சின்னு ளுளளே யதனுற் புத்தகங்க
ளணவும் பெட்டி முதலவற்றை யப்பா லுய்ப்பே னெனவுரைத்தார்.

நேச நிறைந்த மனத்தினராய் நிலவுந் திருமா றளிபுகுந்தே
யீச னடிகள் பணிந்தேத்தி யிணைத்த மாலை துழாய்தீர்த்தம்
பாச மொழிக்குஞ் சடாரிபரி வட்டம் *படீரம் பரிந்தேற்றுத்
தாசர் மலர்க்கை குவித்தொருவிண் ணப்பந் தாழ்ந்து சாற்றினரால்.

கருணைக் கடலே யடியர்வினை கடத்துந் திருவேங் கடத்தானே
யருணப் பதுமந் திகிரிவளை யாதி ரேகை யமர்கரத்தா
யிருணேர் ஞால மிதுநீக்கி யெளியேன் பரம பதமடைந்துன்
றருணமலர்ப்பொற்பதஞ்சிரத்துத்தாங்கிமகிழும்வேட்கையுளேன்.

என்று புகன்றார்ச் சகராதி யிவர்பாற் கச்சி நகர்க்கடியே
னின்று செல்லு மாசையுளே னீக விடையென் றேற்றுவளந்
துன்றந் நகரிற் பெரியோரைத் தொழுது நம்பா லறிந்தறியா
தொன்றச்செய்தபிழைகளுளங்கொள்ளாதருண்மென்றோதினரே.

மும்மை யுணர்ந்த பிரபனரு முகுந்த னுவப்ப வுடல்விடுங்காற்
செம்மை யுறுமா தானங்கள் செயற்பாற் றென்று நூல்சொலலான்
மெய்ம்மை யறிந்த தாசருநல் விழுப்பம் வாய்ந்த வேதியர்க
டம்மிற் சிலர்க்கு வேண்டுபொரு டகைவினளித்தேயுளந்தளிர்த்தார்.

---

* படீரம் - சந்தனம்.

வையம் புகழும் வேதாந்த குரவன் றிருவாய் மலர்ந்தருணூல்
பொய்யி லன்பிற் கேட்டுடலப் போக்கிற் றிடத்த மதியினராய்
மெய்மை யுணர்ந்துந் தன்னுசான் விமலப் பதங்க ளுளத்தெண்ணி
யெய்துங் கால மெதிர்நோக்கி யிருந்தா ரறிவி னிணையில்லார். (சுo)

இறுதி யெய்த லொருநிபத்தை யின்றி யெய்தா தாதலினே
பொறிசேர் மார்ப ஞேர்மரண நிமித்த மிவர்க்குப் புகச்செய்ய
வறிவி னிவரு மனுபவித்தற் காமீ தென்றே யகந்தெளிந்து
பறையுங் காலங் குறித்தமண மதனை யெதிர்பார்ப் பவரோத்தார். ()

திருமா றீர்த்தஞ் சீபாத தீர்த்த மருந்தித் துழாயினொடு
மருவார் பதும பவித்திரமா மாலை யணிந்து துவையமனு
வொருவா தன்பிற் றிருவாக்கி னுரைத்து மலர்மின் பதியடிக
டிருகா வுளத்தின் மிசைவைத்துத் திகழ்ந்தா ரெவரு நிகரில்லார்.

நிகரி லொளியார் பரமபத நெறியிற் புகுத்து மங்கிபகல்
புகரி லொளிநாள் வடவயனம் புகலு மகவை மருத்திரவி
நகல்செய் மதிய மின்வருண ஞக நாடாள் புருகூதன்
பகரில் பிரம னின்னோரைத் தாசர் பரிவின் மனப்படுத்தி. (சுங)

விரைசை குளித்தன் மானவனை மேவ லுடனெண் குணம்பெறுதல்
வரைசெய் துரைத்தற் கரியபரி யங்க மருவல் வானோரி (னுய்க்
னுரைசெய் சோமான் றனையடைத லொழியாப் பிறவி யொருவின
கரையில் போக சாமியத்தைக் கைக்கொ டிறணிவ் வெணிக்களித்தார்.

எண்ணுங் கலியி லேந்தொழிய வியையு மையா யிரமாண்டிற்
கண்ணு மிதுன மதியின்மனை கலனு யுதநற் பரிசனத்தோ
டண்ணும் பெருமான் றனையுளத்தி லமைத்தெ மிராமா னுசதாசர்
நண்ணு முடலம் விடுத்தேகிக் கலங்காப் பெருநன் னகரடைந்தார். ()

கடவுள் கணங்க ளெடுத்துரைத்துக் கணித்தற் கரிய வுயர்நடையுந்
திடனுர் வைராக் கியஞ்சாந்தி செப்பும் பொறையா தியகுணங்கட்
கடலார் கடலே நிகர்தாச ரழியா விசையா லமைந்துள்ள
வுடலை யிந்த வுலகினிறீஇ யென்றும் விளக்க முறுவாரால். (சுசு)

மதிய மிரவி யுள்ளவரை வாழி யுலகி லிச்சரிதந்
துதிகொ ணிவிர்த்தி தருமமிகத் துலங்கி வளர நாணாளும்
பதிநந் திருமா லின்னூலைப் பற்றி யுவக்கத் திருவுளத்துக்
கதியை யுதவு மவனடியார் கணங்கள் வாழி வாழியவே. (கள)

அரியைப் பதியன் றனவணிக னலர்மேன் மங்கை மணவாள [பேர்ப்
னுரிய திருமாற் கடிமையென்று முளுற்றுங் குலத்தன் கிருட்டினப்
பெரியன் புதல்வன் றுசருக்குப் பெயர னின்னூ லான்றோர்நீ
புரிக வென்னப் புரிந்தனன்பேர் புகல்வ ரரங்க நாதனென்றே.(கஅ)

பரமபதம் பெறு சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் பதினைந்துக்குச் செய்யுள் கஎ௨அ.



# இராமாநுஜதாசர் துதி.



மன்னுதிரை சூழாழி வையத்தின் மேலாய
வடமலையி னின்ற வொருவன்

மனமுவந் தினிதுவந் தருள்கின்ற தாமரியை
மாப்பதியின் மன்னர் பின்ன

ரென்னவரு வமிசத் தினிற்சுமித் திரைவயி
னிலக்குவ னுதித்த நாள்மிக்

கிலங்கவந் தவதரித் தவனென்ன மாலுக்
கினைந்தசீர்ப் பணிகள் செய்தே

தன்னிகரி லாதபுகழ் நாமமுமி ராமாநு
சத்தாச ரென்ன வாய்ந்து

தாழ்விலாக் கலியப்த மைந்தொழியை யாயிரஞ்
சார்ந்தஜய வாண்டி லாணி

பன்னுமத் தெய்தியி ராறுபூ ரட்டாதி
பகர்கிருஷ்ண சஷ்டி நாளிற்

பாங்குடன் றிருநா டடைந்தநந் தேசிகன்
பதமலர் பழிச்சி வாழ்வாம்.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 3 | யொருவா | யொருவர் |
| 12 | 22 | கரணி | கரிணி (இங்ஙனம் வருமிடங்தோறுங் கொள்க) |
| 14 | 30 | நட்டவர் | நாட்டவர் |
| 30 | 20 | விளககி | விளக்கி |
| 41 | 21 | லவையவ | லவயவ |
| 47 | 12 | தாகிக் | தாகிச் |
| 71 | 19 | களங்த | களாந்த |
| 86 | 8 | யகணை | யகணைப் |
| 95 | 1 | பைவச் | வைபவச் |
| ,, | 9 | வுதங்தேம | வுவங்தேம் |
| 112 | 9 | ணவவ்ர் | ணவவர் |
| 115 | 8 | மவா | மவர் |
| 116 | 5 | வாடமா | வாடன்மா |
| 136 | 12 | கரிய | கறிய |
| 142 | 20 | தொப்பின | தொப்பின் |
| ,, | 21 | சவள | சவுள |
| 144 | 3 | டிளைந்து | டுளைந்து |
| ,, | 16 | முற்றுா | முற்றுர் |
| 150 | 8 | யில்தை | யிலதை |
| 152 | 11 | சென்று | சென்றே |

